# தமிழிலக்கியம்






சென்னை முன்னாள் மேயர்
திரு. சு. இராமசுவாமி நாயடு அவர்களின்
சிறப்புச் சொற்பொழிவுகள்







அண்ணாமலைப் பல்கலைக் கழகம்
1954

அண்ணுமலைப் பல்கலைக் கழக வெளியீடு

# தமிழிலக்கியம்

சென்னை முன்னுள் மேயர்
திரு. சு. இராமசுவாமி நாயடு அவர்கள்
அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் நிகழ்த்திய
சிறப்புச் சொற்பொழிவுகள்




அண்ணுமலைப் பல்கலைக் கழகம்
அண்ணுமலைநகர்
1954

# பொருளடக்கம்



அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர்
**டாக்டர் சர் சி. பி. இராமசுவாமி ஐயர்**
அவர்களுக்கு
இந்நூலை உளம் உவந்து உரிமையாக்கியுள்ளேன்.

# முகவுரை

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தார் விருப்பத்திற்கிணங்கி, 1953-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 15, 16, 17-ஆம் நாட்களில் தமிழிலக்கியம் என்னும் பொருள்பற்றி மூன்று சிறப்புச் சொற் பொழிவுகள் என்னால் நிகழ்த்தப் பெற்றன. அச்சொற்பொழிவு களுக்கு ஆங்கிலத்திலும் தமிழிலும், இதுகாறும் வெளிவந்துள்ள பல ஆராய்ச்சிக் கட்டுரைகளும், வரலாற்று நூல்களும் உறுதுணையா யிருந்தன என்பதை உவகையுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். கல்லூரிகளிலும் கலாசாலைகளிலும் சிறப்பாகத் தமிழ் பயிலாமல், ஆங்கிலத்தோடு ஓரளவே தமிழ்ப்பயிற்சி பெற்றுவரும் மாணவர் களும், தமிழார்வமுள்ள ஏனையோரும் பண்டைக்கால முதல் இற்றைநாள் வரையில் உள்ள தமிழிலக்கியங்களின் வளர்ச்சி பற்றித் தொகுத்து அறிந்துகொள்ளுதற்கு உதவியாகவும், நண்பர் பலருடைய வேண்டுகோளாலும் அம் மூன்று நாட் சொற் பொழிவுகளும் நூல் வடிவில் பதிப்பிக்கப்பெற்றன. தொல்காப்பியர் காலந்தொட்டு இன்றுகாறும் வெளிவந்துள்ள பல்லாயிரக் கணக் கான தமிழ் நூல்கள் அனைத்தையும் தனித்தனியே ஆராய்ந்து ஒவ்வொன்றன் சுவை நலங்களைப் பற்றிப் பேசுதலும் எழுதுதலும் இயலா வென்பது யாவரும் அறிந்ததொன்றாகலின், இந்நூலின் கண், எல்லா நூல்களையும் நன்கு ஆராய்ந்து அறுதியிட்டுக் கூறி யுள்ளேன் என்று நான் துணிந்து கூறமுடியாது. ஆயினும், சுருங்கிய கால அளவிற்குள் தமிழிலக்கியங்கள் பற்றி எவ்வாறு தொகுத்துக் கூற முடியுமோ அவ்வளவிற் கூறப்பட்டுள்ளன என்பதைக் கற்றவர் அறிவர்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இப்போது துணை வேந்தராயிருக்கும் டாக்டர் சர் சி. பி. இராமசுவாமி ஐயரவர்கள் உலகம் அறிந்த பேரறிஞர் என்பதிற் சிறிதும் ஐயமில்லை. அவர்கள் எல்லாக் கலைத்துறைகளிலும் வல்லுநர். தமிழறிவும், தமிழ்ப்பற்றும், தமிழ் வளர்ச்சியிற் கருத்தும் உடைய அவர்கள்,

இப் பல்கலைக் கழகத்திற்குத் துணைவேந்தராய் வந்தவுடனே தமிழ்ப் பகுதியை விரிவுபடுத்தினார்கள்; மேலும், தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகமாகிய இதன்கண் தமிழ்மொழி பல்லாற்றானும் வளம்பெற வேண்டு மென்னும் குறிக்கோள் உடையவர்களாய், அதனை ஒவ்வொன்றாக நிறைவேற்றி வருகின்றார்கள். அத்தகைய பெரியார் அவர்களுக்குத் தமிழ்வளர்ச்சியில் ஆர்வமுள்ள யான் செய்யுங் கைம்மாறு வேறின்மையால், இந்நூலை என் அன்புக் காணிக்கையாக அவர்களுக்கு உரிமைப் படுத்தியுள்ளேன். என் அன்புக் கையுறையை மனமுவந்து ஏற்றுக்கொண்ட சர் சி. பி. ஐயர் அவர்களுக்கு என் உளங் கலந்த நன்றி உரியதாகும்.

இந்நூலுக்கு அணிந்துரை எழுதி உதவியவர், சென்னைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித் துறைத் தலைவர் திரு. ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் ஆவர். அவர்கள் என்னுடைய நெடுநாளைய நண்பர். இடையறாது தமிழ்த் தொண்டு செய்துவரும் தமிழ்ப் பெரும் புலவர். சொல்லின் செல்வராகிய அவர்கள் என் சொற்பொழிவின் தொகுப்பாகிய இந்நூலுக்கு அணிந்துரை நல்கியது பொருத்த முடையதே. அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். என்னை இங்குச் சொற்பொழிவு செய்யப் பணித்து, இந்நூலைப் பதிப்பித்து வெளிப்படுத்திய அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தாருக்கு என் மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றேன்.

இந்நூல் நன்முறையில் அச்சாகி வெளிவருதற்குப் பல்லாற்றானும் துணைபுரிந்த நண்பர்களுக்கும், சென்னைக் கபீர் அச்சகத்தார்க்கும் என் நன்றி உரியது.

சென்னை,<br>26-4-1954

சு. இராமசுவாமி நாயடு

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர்

திரு. ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள்

வழங்கிய

## அணிந்துரை

தமிழகத்தின் செழுங்கலைக் கோயிலாக விளங்கும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் அறிஞர் திரு. சு. இராமசுவாமி நாயடு அவர்கள் சென்ற இளவேனிற் காலத்தில் சில சொற்பொழிவு செய்தார்கள். 'தமிழிலக்கியம்' என்னும் பொருள் பற்றி அவர்கள் பேசிய பேச்சின் பண்பும் பயனும் உணர்ந்த பல்கலைக் கழகத்தார் அவற்றை நூல் வடிவாக இப்போது வெளியிட்டுள்ளனர்.

'தமிழிலக்கியம்' என்னும் இந்நூலின் ஆசிரியர் சென்னையின் முன்னாள் மேயர்; பன்னாடு கண்டவர்; பண்பாடுடையவர்; தமிழ்ப்புலம் பேணும் தகைமையாளர். வரலாறு என்னும் வான ஊர்தியிலே பறந்து தமிழிலக்கிய உலகத்தைக் காண்கின்றார் இவ் வலவர். சங்க காலத்தின் சீர்மையும், இடைக் காலத்தின் ஏற்றமும், பிற்காலத்தின் சிறப்பும் இந்நூலில் முறையாகப் பேசப்படுகின்றன. நூலாசிரியர் இலக்கியத்தோடு வணிக நூலும் கற்றுத் தேர்ந்தவராதலின், சமன் செய்து சீர்தூக்கும் பணியைச் செப்பமாகச் செய்துள்ளார். தமிழிலக்கியத்தின் பரப்பையும் சிறப்பையும் பொதுவுற நோக்கிப் பயன் பெற விரும்பும் மாணவர்க்கு இந்நூல் அருந்துணையாகும். பேசும் தமிழிலே பெரும் பொருள்களைக் காட்டுகின்றார் இந்நூலாசிரியர்; இனிய நடையிலே இலக்கிய நயங்களை ஊட்டுகின்றார்.

இந்நூலில் இலக்கிய வரலாற்றை நாட்டு வரலாற்றோடு பொருத்திக் காட்டியிருப்பதும், கால ஆராய்ச்சியில் புதுமை நாடிப் போகாது நல்ல தடம் பற்றி எல்லைக் கல் நாட்டியிருப்பதும் பாராட்டுதற்கு உரியனவாகும். முன்னாளில் முச்சங்கங்கள் செய்த சேவையையும், இந்நாளில் மடங்களும் மற்றைய நிலயங்களும்

செய்துவரும் தொண்டுகளையும் உரிய முறையில் போற்றியுள்ளார் இந்நூலாசிரியர் ; சைவரும் வைணவரும், சமணரும் சாக்கியரும், மகமதியரும் கிறிஸ்தவரும் தமிழிலக்கியத்திற்குப் பணி செய்த பான்மையை நன்கு விளக்கியுள்ளார். காலவரை யென்னும் கட்டுக்கு உட்பட்டுப் பேசிய காரணத்தால், விரித்துரைத்தற்குரிய சில பொருள்கள் சுருக்கிக் கூறப்பட்டுள்ளன ; சில புலவர்கள் விடுபட்டுள்ளனர். எனினும், சொற் சுருக்கமும் பொருட் பெருக்கமும் உடைய இந்நூலைத் தமிழ் நாட்டார்க்கு நல் விருந்தாக அளித்த தமிழறிஞர் இராமசுவாமி நாயடு அவர்களுக்கு இலக்கிய உலகத்தின் நன்றி என்றும் உரியதாகும்.

# தமிழிலக்கியம்

## முன்னுரை

பேரறிவு நிரம்பிய புலவர் பெருமக்களே! மாணவர்களே! அன்புசால் வணக்கம்.

'அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம்' என்று திருநாவுக்கரசுப் பெருந்தகையார் பாடிய சிதம்பரம் என்னும் திருப்பதி தென்னாட்டுக்குத் திலகம் போன்றதாகும். சைவசமயிகள் தங்கள் சேமதனமாகக் கொண்டுள்ள தேவாரத் திருப்பதிகங்கள் நம்பியாண்டார் நம்பி யெம்பெருமானால் இவ்வூரிலன்றோ கண்டெடுக்கப்பட்டன! புராணத்திற் பெரியது எனப்படும் திருத்தொண்டர் புராணம் இப்பதியிலன்றோ இயற்றப்பெற்று அரங்கேற்றம் அடைந்தது! தில்லை மூவாயிரவர் என்ற அந்தணர் பெருமக்கள் வாழும் சிறப்புடையது இத்திருப்பதியேயன்றோ! இன்னோன்ன பலதிறப்பட்ட பெருமைகளையும் மிகுதியாகக் கொண்டுள்ள தில்லை நகரின் பகுதியாம் அண்ணாமலைநகர்ப் பல்கலைக்கழகத்திலே பேசும் பேறு பெற்றது கொண்டு பெருமை கொள்ளுகிறேன்.

என்னைக்காட்டிலும் அறிவு அனுபவம் முதலிய இயல்புகள் நிரம்பப்பெற்ற பேராசிரியப் பெருங்குழுவினரின் பேரவையிலே பேசவாய்த்தது எனக்கு மிக்க மகிழ்ச்சியைத் தருகின்றது. இது கொண்டு இறும்பூது எய்துகின்றேன்; இறுமாப்பும் கொள்ளுகிறேன்.

நான் எடுத்துக்கொண்ட பொருளோ மிகப் பெரியது. அதனை ஆராய்ச்சி வல்லுநர் இன்னும் துருவித்துருவி ஆராய்ந்தவண்ணமாகவே யிருக்கின்றனர். இந்நிலையில் தமிழிலக்கியம் என்னும்

---

* இது, சென்னையின் முன்னாள் மேயர் திரு. S. இராமசுவாமி நாயடு அவர்களால் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் 1953-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 15, 16, 17-ஆம் நாட்களில் நிகழ்த்தப்பெற்ற சிறப்புச் சொற்பொழிவின் தொகுப்பாகும்.

பெரும்பொருள் பற்றி யான் பேசப்புகுந்தது தமிழின்பால் எனக்குள்ள மீளாத காதல்பற்றியேயாகும். ஆதலால் யான் பேசுங் காலத்தில் தவறுகள் இடையிடையே நிகழ்தல்கூடும். அவற்றைச் 'செப்பலுற்ற பொருளின் சிறப்பினுல்—அப்பொருட்குரை யாவரும் கொள்வரால்' என்பதற்கிணங்கப் பொறுத்தல் வேண்டும்.

## தமிழ் என்னும் சொல்லின் பொருள் விளக்கம்

பேரறிஞர்களே! தமிழிலக்கியம் என்னும் தொடரில் உள்ள இரு சொற்களையும் ஆராய்வது ஈண்டைக்குப் பொருத்தமாகும். "தமிழென்னும் சொல் 'இனிமை' என்னும் பொருளில் வழங்குதல் தமிழிலக்கியங்களில் மட்டுமன்று, ஸான்ஸிபார் நாட்டில் வழங்கி வரும் 'ஸ்வாஹிலி' என்னும் மொழியில் 'தமு' என்னும் சொல் இனிமை எனப் பொருள்படுதலையும் அறிகிறோம். பாரஸீக மொழியில் அறிவு என்னும் அழகிய பொருளில் பயின்று வரும் 'தமிஸ்' என்னும் சொல் ஒன்று வழங்கி வருகிறது. 'தமு' என்னும் சொல்லுக்குப் பிற மொழியாளரும் கூறிவரும் இனிமைப் பொருளொற்றுமை மிகவும் பாராட்டத் தக்கது" என வரும் ரா. இராகவையங்கார் கூற்று நோக்கத்தக்கது. கற்பாருக்கும் கேட்பாருக்கும் இனிமை பயத்தல் பற்றி நம் முன்னோர் நம்மொழிக்குத் தமிழ் எனப் பெயரிட்டனர் எனக் கொள்ளுதல் பொருந்தும்.

தமிழ்மொழி தொன்மை வாய்ந்தது; தொல்புகழ் நிரம்பியது. இதை வலியுறுத்தும் சான்றுகளாக மொகஞ்சதாரோ (Mohenjodaro) மக்கள் வழங்கிய சொற்கள் தமிழிற் காணக் கிடக்கின்றன.

தமிழ் என்னும்சொல் பின் தமிழ்நாடு, தமிழர் என்னும் பொருள்களிலும் வழங்கலாயிற்று. 'தண்டமிழ் வினைஞர்' என வரும் இடத்தில் தமிழென்னும் சொல் தமிழ்நாட்டைக் குறிக்கிறது. 'அருந்தமிழாற்றல் அறிந்திலர்' என்னும் இடத்தில் தமிழென்னும் சொல் தமிழர் என்று பொருள்படுதலைக் காணலாம்.

இவ்வாறு இனிமையைத் தன்னகத்தே பெற்ற மொழியைப் பேசும் காரணத்தாற்போலும் தம் நாடு நோக்கி வருவார்க்கெல்லாம் தமிழர் இன்முகம் காட்டி அவர்களை வரவேற்று விருந்தோம்பி வீறு பெற்றனர். தமிழிலக்கியத்தைப் பற்றிப் பேசுமுன் தமிழ்நாடு தமிழர் வரலாறு இவற்றினைப் பற்றி ஒரு சிறிது கூறவேண்டுவது கடமையன்றோ?

## தமிழ்நாடு

தமிழ்நாடு குமரிக்கும் தெற்கே நெடுந்தூரம் பரவியிருந்ததாகத் தெரிகிறது. அக்காலத்தில், குமரிமுனைக்குத் தெற்கே பனைநாடு முதலிய நாடுகளும் மணிமலை முதலிய மலைகளும் முத்தூர் கபாடபுரம் முதலிய ஊர்களும் பஃறுளி முதலிய ஆறுகளும் இருந்தன என நூல்கள் கூறும்.

பனம்பாரனார் தொல்காப்பியத்துக்குப் பாயிரம் உரைப்பான் தொடங்கற்கண் 'வடவேங்கடம் தென்குமரி—ஆயிடைத் தமிழ் கூறு நல்லுலகத்து' என்றார். அதாவது : 'வடக்கண் வேங்கடமும் தெற்கண் குமரியாறும் எல்லையாகவுடைய தமிழ்மொழி கூறும் நல்லவுலகம்' என்றவாறும். இப்பொருள்படவே, இளம்பூரணர், "குமரியாறு கெடுவதற்கு முன்னையது" என உரையெழுதிப் போந்தார்.

"வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்" (புறம் - 6)

என்னுமிடத்து, உரையாசிரியர், 'தெற்கின்கண்ணது உட்குந் திறம்பொருந்திய கன்னியாற்றின் தெற்கும்' என்றமையால் தெற்கே குமரியாறு இருந்தமை வெளிப்படை.

இந்நாட்டைக் கடல்கொண்டு ஒழித்தது என்பதற்கும் பழந் தமிழ் நூல்களில் ஆதாரம் உண்டு. "தலைச்சங்கத்தார் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கடல் கொள்ளப்பட்ட மதுரையென்ப," "இடைச்சங்கத்தார் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கபாடபுரத் தென்ப. அக்காலத்துப் போலும் பாண்டிநாட்டைக் கடல் கொண்டது" என்று இறையனார் களவியலுரை கூறும்.

சிலப்பதிகாரம் இயற்றிய இளங்கோவடிகள்,

"வடிவேல் எறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள" (11, 18-20)

எனத் தமிழ்நாட்டின் தென்பகுதி கடல்கொள்ளப் பட்டமையும்,

"நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்
தமிழ்வரம் பறுத்த தண்புனல் நன்னாட்டு" (8, 1-2)

எனக் கடல்கொள்ளப்பட்டபின் குமரிக்கடல் தமிழ் நாட்டின் தெற்கெல்லையாயினமையும் தோன்றக் கூறினர்.

## தமிழர் வரலாறு

தமிழ்மொழி எக்காலத்தில் பிறந்தது, தமிழ்மக்கள் யாவர் என்னும் ஆராய்ச்சிக்கு இன்னும் முடிவுகண்டார் இல்லை. நூலாசிரியர் பலர் தமிழரைத் திராவிடர் என்னும் பெயரால் வழங்குவர். தமிழ் மக்களுக்குத் திராவிடப்பட்டம் சூட்டியவர் ஆரியர். தமிழ் நாட்டில் இன்று வாழ்பவரெல்லாரும் தமிழ்ப் பெருங் குடிமக்களல்லர் என்பது நூலறிஞர் துணிபு.

தமிழர் இந்தியாவுக்கு வடமேற்குப் புறத்தினின்று வந்தவர் என்று ஒருவகையார் கூறுகின்றனர்; ஆசிய மேனுட்டவரென்பார் வேறு ஒரு சாரார்; மற்றொரு சாரார் தமிழ் மக்கள் கன்னியாகுமரிக்குத் தெற்கே நெடுந்தூரம்வரை பரவியிருந்த "லெமூரியா" என்னும் கண்டத்தினின்றும் வந்தவரே யென்பர்; இன்னும் ஒரு சாரார் ஆசியா, அஸீரியா தேசங்களினின்று கடல்வழியாகத் தென்னிந்தியாவுக்கு வந்து விந்தியமலை வரையிலும் பரவியிருந்தனர் என்பர். இமயம் முதல் ஈழமண்டலம் வரை தமிழ்மக்கள் பரவியிருந்தனர் என்ற கொள்கையும் உண்டு.

இவ்வாறு தம்முள் மாறுபட்ட ஆராய்ச்சிகள் ஒருவாறு பொருந்தியும் பொருந்தாதும் மயங்கிக் கிடக்கின்றன. எனவே துணிந்த முடிபு இது எனக் கொள்ளுவதும் தள்ளுவதும் எளியவல்ல.

தமிழ்மக்கள் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே நாகரிகமடைந்திருந்தனர் என்பதைக் காட்டச் சான்றுகள் பலவுள்ளன. இற்றைக்கு மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன் தமிழர் பாபிலோன் தேசத்துடன் வாணிகத் தொடர்பு கொண்டிருந்தனர் என்பது அத்தேசத்தில் இறக்குமதியான குரங்கு, மயில் முதலியன தமிழ்ச் சொற்களாற் குறிக்கப்பட்டிருப்பதிலிருந்து அறியக்கிடக்கின்றது. உரோமாபுரியுடன் தமிழ்மக்கள் தொடர்பு கொண்டிருந்தனர் என்பதற்கு இன்றும் நம் நாட்டில் ஆங்காங்கே காணப்படும் உரோம நாணயங்களே ஆதாரமாகும். சோழநாட்டு மரக்கலங்கள் கி. பி. முதலாம் இரண்டாம் நூற்றாண்டுகளில் இந்தியக் கடற்கரையில் மட்டுமன்று, வங்காளக் கடலையும் கடந்து மலேயா தீவுகள் வரையும் சென்றதுண்டு என்று சரித்திர ஆசிரியரான வின்ஸென்ட் ஸ்மித் என்பார் கூறுகின்றார்.

தமிழிலக்கியங்களிலும்,

'கடிமதில் வாயில் காவலிற் சிறந்த
அடல்வாள் யவனர்' (சிலப்-ஊர்கா-56-57)

' யவனர், நன்கலம் தந்த தண்கமழ் தேறல் ' (புறம்-56)

என்ற சான்றுகள் உண்டு.

இங்ஙனமாகத் தமிழ்மக்களின் பண்டை நாகரிகம், செல்வச் சிறப்பு, அரசியல் மேம்பாடு முதலிய பலவகைப் பெருமைகளையும் தமிழிலக்கியங்களிற் காணலாம்.

## இலக்கியம்

ஒரு மொழியின்வாயிலாக மக்கள் வாழ்க்கை முறையினை எடுத்துக்காட்டுவதே இலக்கியம் என்பது, [1] ஹட்ஸன் என்ற மேனாட்டாசிரியர் கருத்து. மனித சமுதாயத்தின் உயர்ந்த கருத்துக்கள் பதிவு செய்யப்பட்டதே இலக்கியம் என்று [2] எமர்சன் கூறியுள்ளார். மக்களுக்கு நல்லொழுக்கம் புகட்டவல்ல சிறந்த கருவிகளுள் இலக்கியம் ஒன்று என்று [3] வைகவுண்ட் மார்லி என்பவர் கூறியுள்ளார். இக்கூற்றுக்களையும் வேறு ஆசிரியர்களின் கூற்றுக்களையும் நோக்க, இலக்கியம் என்பது செய்யுள்நடையால் அல்லது உரைநடையால் மக்கள் அனைவருக்கும் பயன்படக்கூடியதாய்ச் சான்றோரியற்றிய நூல் எனப் பொருள்படுதலைக் காணலாம். அந் நூல் சிறந்த கருத்துக்களைக் கொண்டதாய், மக்களறிவினைக் கூர்மையாக்கவல்லதாய், இயற்கையின் எழில்நலத்தை எடுத்துக் காட்டவல்லதாய் அமைதல்வேண்டும். ஏறத்தாழ இலக்கியப் பண்புகள் அனைத்தையும் நம் தமிழிலக்கிய நூல்களிற் கண்டு மகிழலாம். சங்க காலத்தில் தொகுக்கப்பட்ட எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு முதல் இன்றுள்ள செய்யுள்—உரைநடைநூல்கள்வரை மேற்கூறப்பெற்ற இலக்கணங்களைக் கொண்டவையனைத்தும் தமிழிலக்கியம் என்றே பெயர் பெறும். தமிழிலக்கியத்தைப்பற்றிப் பேசுமுன் அதன் வளர்ச்சிக்குக் காரணமாயிருந்த சங்கங்களைப்பற்றி ஆராய்வதும் முறையாகும்.

---

[1] "Literature is thus fundamentally an expression of life through the medium of language" (*An Introduction to the Study of Literature* by HUDSON P. 11)

[2] "Literature is a record of best thoughts" (Emerson)

[3] "Literature is one of the most powerful instruments for forming character." (*Select Eassys* from the writings of Viscount Morley—edited by H. G RAWLINSON—M. A. P. 51)

## மதுரைத் தமிழ்ச் சங்கம்

இனி, "சங்கம்" என்று கூறும்பொழுதே 'சங்கம்' என்று ஒன்று இருந்ததா என்னும் கேள்வி எழுகிறது. "சங்கம்" என ஒன்று இருந்ததில்லை என ஒருசார் ஆராய்ச்சியாளரும், "மூன்று சங்கங்களும் இருந்தமைக்குச் சான்றுகள் இல்லை, இக்கூற்றுக் கற்பனையே" என்று பிறிதோர்சார் ஆராய்ச்சியாளரும், இன்றுள்ள நூல்களைக் காணுங்கால் ஏதோ ஒரு சங்கம் இருந்திருத்தல் வேண்டும் என்று வேறு ஒருசார் ஆராய்ச்சியாளரும் கூறுகின்றனர். கி. பி. 7-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த திருநாவுக்கரசு நாயனர்,

> " நன்பாட்டுப் புலவனுய்ச் சங்கமேறி
> நற்கனகக் கிழிதருமிக் கருளி னேன்காண் "

என்று கூறியிருத்தலும், கி. பி. எட்டாம் நூற்றாண்டினர் என்று கருதத்தகும் ஸ்ரீ ஆண்டாள் "சங்கத்தமிழ்" என்று கூறியிருத்தலும், அதே நூற்றாண்டில் வாழ்ந்த திருமங்கையாழ்வார் "சங்க முத்தமிழ்" என்று குறித்திருத்தலும் சங்கம் என ஒன்று இருந்தது என்று கி. பி. ஏழு, எட்டாம் நூற்றாண்டுகளில் தமிழகத்தார் நம்பியிருந்தனர் என்பதைக் காட்டுகின்றன. சங்க நூலாகிய மதுரைக் காஞ்சியில்,

> " தொல்லாணை நல்லாசிரியர்
> புணர்கூட் டுண்ட புகழ்சால் சிறப்பின்
> நிலந்தரு திருவின் நெடியோன் " (761-763)

என வரும் அடிகள் தமிழாசிரியர் பலர் கூடியிருந்த பேரவையையே குறிக்கும்.

> " ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
> மாங்குடி மருதன் தலைவனுக
> உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
> புலவர் பாடாது வரைகஎன் னிலவரை " (புறம்-72)

என்ற தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் கூற்றிலிருந்து அவனைச் சார்ந்து நல்லிசைப்புலவர் பலர் நிறைந்திருந்தனர் என்பதும், அவர்களுக்கு மாங்குடி மருதன் தலைவனுக இருந்தான் என்பதும் புலனுகின்றன.

> " மதிமொழி யிடல்மாலை வினைவர்போல் வல்லவர்
> செதுமொழி சீத்த செவிசெறு வாக
> முதுமொழி நீராப் புலனு வுழவர்
> புதுமொழி கூட்டுண்ணும் புரிசைசூழ் புனலூர " (கலித்-68

என்னும் அடிகளை நோக்குமிடத்துப் பாண்டியன் புலவர் பல ருடைய சேர்க்கையை யுடையவனுயிருந்தான் என்பதும், அவர்க ளுடைய புதிய கவிகளைக் கேட்டு இன்புற்ருன் என்பதும் புலனு கின்றன. 'வீயாத் தமிழுடையான், பல்வேற் கடற்ருனைப் பாண் டியன்' என வரும் யாப்பருங்கலவிருத்தி மேற்கோட் செய்யுள் அடியும், மேற்சொன்ன இலக்கியச் சான்றுகளும், "தமிழ் கெழுகூடல்" எனவரும் புறப்பாட்டுத் தொடரும் மதுரையில் தமிழ்ச் சங்கம் இருந்தது என்பதையும், பாண்டியர் புலவர்பலரைக் கூட்டித் தமிழை வளர்த்தனர் என்னும் உண்மையையும் உள்ளங் கை நெல்லிக்கனிபோல் உணர்த்துவனவாகும். இவ்விலக்கியச் சான்றுகளுக்குப் பொருந்தவே சின்னமனூர்ச் செப்பேட்டில்,

> "மகாபாரதம் தமிழ்ப்படுத்தும்
> மதுராபுரிச் சங்கம் வைத்தும்"

என்பது காணப்படுகிறது.

ஏறத்தாழ கி. பி. ஏழாம் நூற்ருண்டில் இயற்றப்பட்ட இறையனுர் களவியலுரையில் மூன்று சங்கங்கள் குறிக்கப்படு கின்றன. அவை முறையே 4440, 3700, 1850 ஆண்டுகள் நடை பெற்றன என்பதும், கடல் கொள்ளப்பட்ட தென்மதுரை, கபாட புரம், இப்போதுள்ள மதுரை ஆகிய இடங்களில் இருந்தன என் பதும், அச்சங்கம் ஒவ்வொன்றிலும் இருந்த புலவர்தொகையும், பாண்டியர்தொகையும் அவ்வுரையிற் காணப்படுகின்றன. இவ் வொரு நூலிலுள்ள குறிப்பைத் தவிர மூன்று சங்கங்கள் இருந் தமைக்குரிய தக்க சான்றுகள் வேறு கிடைக்கவில்லை. இறையனுர் களவியலிற் குறித்தபடி அத்துணை நீண்டகாலம் சங்கங்கள் இருந்தன என்பது இக்காலச் சரித்திர ஆராய்ச்சிக்கு ஒப்ப முடிந்ததாயில்லை. கடைச்சங்கம் இறுதியுற்ற காலம் கி. பி. முதல் நூற்ருண்டு எனக் கொள்ளினும் அதற்குப் பதினுயிரம் ஆண்டு கட்கு முன்னரே சங்கம் இருந்தது எனக் கூறுதற்குரிய சான்றுகள் கிடைக்கவில்லை. எனவே இறையனுர் களவியலுரையாசிரியர் கண்ட காலவரையறையினை ஏற்பதற்கில்லை.

மேலே காட்டப்பட்ட இலக்கிய–செப்பேட்டுச் சான்றுகளால் இப்போதுள்ள மதுரையில் பாண்டியர் ஆதரவில் தமிழ்ச் சங்கம் ஒன்று இருந்தது என்பதைமட்டும் உறுதிப்படுத்தலாம்.

மேற்குறித்த சங்கமிருந்த புலவர் பெருமக்களும் ஏனைப் பழந் தமிழ்ப் புலவர்களும் தாம் இயற்றிய நூல்களின் தொடக்கத்தே தம் வரலாறுகளை எழுதிவைக்கவில்லை. அவர் உலகு பயன்கொள்ளு

மாறு நூல்களை இயற்றி இன்புற்றனரேயன்றித் தம் புகழை நிலை நாட்டுமாறு நூல் செய்தவரல்லர். ஆகவே அவர்தம் வரலாறுகளை அறிவதற்கான சான்றுகள் இல்லாது போயின.

இங்கே சங்கத்தோடு தொடர்புடைய தொல்காப்பிய முனி வரைப் பற்றியும், அவரால் இயற்றப்பட்டதும் இன்றுள்ள தமிழ் நூல்களுள் மிகப் பழமையும் சிறப்பும் வாய்ந்ததுமான தொல் காப்பிய நூலைப்பற்றியும் சிறிது கூறுவது இன்றியமையாததாகும்.

## தொல்காப்பியர்

தொல்காப்பியர் இற்றைக்குச் சற்றேறக்குறைய 2300 ஆண்டு களுக்கு முற்பட்டவர் என்பதை ஒருவாறு ஒப்புக்கொள்ளலாம். இவர் காப்பியக்குடியிற் பிறந்தவர். காப்பியக்குடி என்பது இவர் பிறந்த மரபின் பெயரென்பர்; ஊரின் பெயரென்பாரும் உளர்.

## தொல்காப்பியம்

இவ்விலக்கணநூல் இதனை இயற்றிய தொல்காப்பியரின் பெய ரால் வழங்கியது எனக் கொள்ளுதல் நன்று. பழமையான பொருள் களை அறிவிக்கும் காப்பியம் ஆதலின் தொல்காப்பியம் என்று பெயர் பெற்றது என்று கூறுவது பொருந்தாது; "தொல்காப்பிய னெனத் தன் பெயர் தோற்றி......புலந் தொகுத்தோன்" என்னும் அதன் பாயிரக் கூற்றே அக்கொள்கையை மறுக்கும். இதன் வாயி லாகப் பண்டைத் தமிழ்மக்களின் அறிவு ஒழுக்கம் நாகரிகம் முதலியவற்றைத் தெற்றென அறியலாம். இதன் காலம் கி. மு. 500 என்று சிலரும், கி. மு. 300 என்று வேறு சிலரும், கி. பி. இரண் டாம் நூற்றுண்டென்று ஒருசிலரும், கி. பி. நான்கு அல்லது ஐந்தாம் நூற்றுண்டென்று மற்றுஞ் சிலரும் கூறியுள்ளனர். தொல்காப்பியர் பாரதகாலத்தை அடுத்து வாழ்ந்தவர் என்று ரா. இராகவையங்கார் தம் தமிழ்வரலாற்றிற் கூறியுள்ளார்.

தலைச்சங்கத்திறுதியில் ஒரு பெருங் கடல்கோளும், தொல்காப் பியஞ் செய்யப்பட்டபிறகு மற்றொரு கடல்கோளும் நிகழ்ந்த தென்று களவியலுரை கூறும். இக்கடல்கோள்களுக்கும் இந்தி யாவை அடுத்துள்ள இலங்கையில் நடந்த கடல்கோள்களுக்கும் நெருங்கிய தொடர்புண்டு என அறிஞர் கருதுகின்றனர்.

இலங்கையில் முதற்கடல்கோள் கி. மு. 2378-ஆம் ஆண்டி லும், இரண்டாம் கடல்கோள் கி. மு. 504-ஆம் ஆண்டிலும், மூன்றும் கடல்கோள் கி. மு. 306-ஆம் ஆண்டிலும் நிகழ்ந்தன

என்று மஹாவம்சம், தீபவம்சம், ராஜாவளி என்னும் இலங்கை வரலாற்று நூல்கள் கூறுகின்றன. மூன்றும் கடல் கோளால் கபாட புரம் அழிந்ததாகக் கொண்டாலும் தொல்காப்பியர் காலம் கி. மு. 300 யாண்டுகளுக்கு முற்பட்டது எனக் கொள்ளலாம். இதனை ஆராய்ச்சியாளர் பலரும் ஒப்புவர்.

தொல்காப்பியர் காலம் கி .மு. 300 யாண்டுகட்கு முற்பட்டது என்பதற்குப் பிறிதோர் புறச்சான்றும் காட்டலாகும். பனம்பாரனர் தொல்காப்பியத்துக்குப் பாயிரங் கூறுமிடத்து 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்' எனக் கூறுகின்றனர். வட மொழி ஐந்திரவியாகரணம், தற்காலம் வடமொழிப் பேரிலக் கணமாக வழங்கும் பாணினி வியாகரணத்துக்கு முற்பட்டதென வடமொழி வியாகரணமுணர்ந்தோர் யாவரும் ஒப்புக்கொள்வர். ஐந்திரத்தினும் பாணினீயம் சிறந்தது என்பது அவர் கொள்கை. தொல்காப்பியர் காலத்திற்றனே பாணினி தமது வியாகர ணத்தை இயற்றியிருப்பரேல் தொல்காப்பியர் அதனையே விரும்பிக் கற்றிருப்பர். ஆனல் தொல்காப்பியர் காலத்தில் பாணினியின் பெயர் தானும் கேட்கப்பட்டதில்லை; ஆதலின் அவர் ஐந்திரவியா கரணத்தையே கற்றுத் தேர்ந்தனர் என்பதும் பாணினிக்கு முற் பட்டவர் என்பதும் போதரும். பாணினியின் காலம் கி. மு. 350 யாண்டுகட்கு முற்பட்டது என்று தெரிகின்றபடியால் தொல் காப்பியர் காலமும் கி. மு. 350-க்குப் பிற்பட்டதாகாது என்பது துணிபாகும். வேறு தக்க சான்றுகள் கிடைக்கும்வரை இதனையே தொல்காப்பிய காலம் எனக் கொள்ளலாம்.

தொல்காப்பியம் 1600 சூத்திரங்களால் இயன்றது; எழுத்து, சொல், பொருள் என மூன்று அதிகாரங்களை உடையது. ஒவ்வோ ரதிகாரமும் ஒன்பது ஒன்பது இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. இவற்றுள் எழுத்தும் சொல்லும் மொழியின் தன்மையை விளக்குவன. அவை பிறமொழியிலக்கணங்களே போலத் தமிழ் மொழிக்கும் அமைந்தனவாம். பொருளதிகாரமோ அகமும் புறமும் ஆகிய பொருள் வகைகளோடு செய்யுளிலக்கணத்தினையும், அணி யிலக்கணத்தினையும் விரித்து விளக்குவதன் மேலும் பண்டைத் தமிழ்மக்களின் பழக்கவழக்கங்களையும் பண்புகளையும் தெளிய வுரைப்பதுமாகும்.

பொருளதிகாரத்துள் அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல், மரபியல் என ஒன்பது இயல்கள் உள. தொல்காப்பிய அதிகாரங்களுள் சிறந்தது பொருளதிகாரமேயாகும்; ஏனெனில்

ஏனைய எழுத்தும் சொல்லும் ஆராய்தல் பொருளின் தன்மையை உணர்தற்பொருட்டேயாதலின். பண்டைத் தமிழ்மக்களின் இயல்பு முதலியவற்றை அறிய விரும்புவோர்க்குப் பொருளதிகார ஆராய்ச்சி இன்றியமையாததாகும்.

தொல்காப்பியர் தாம் நூல் செய்யப் புகுந்த காலத்தில் இருந்த விரிவான இலக்கணநூல்களை முற்றக் கற்றே தொல்காப்பியம் செய்துள்ளார் என்பதை அவர் சூத்திரங்கள் வெளிப்படுத்து கின்றன. அவர் ஏறக்குறைய 250 இடங்களில் தமக்கு முன்பு இருந்தவரும், தம் காலத்தவருமான இலக்கண ஆசிரியர் பலரைத் தம் சூத்திரங்களில் குறித்துள்ளார்.

1. " நல்லிசைப் புலவர் செய்யுள் உறுப்பென
வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே." சூ. 310
2. " இடையும் வரையார் தொடையுணர்ந்தோரே." சூ. 375
3. " யாப்பென மொழிப யாப்பறி புலவர்." சூ. 383
4. " யாப்பின் வழியது என்மனார் புலவர்." சூ. 384
5. " நூல்நவில் புலவர் நுவன்றறைந் தனரே." சூ. 457
6. " ஒத்தென மொழிப உயர்மொழிப் புலவர்." சூ. 472
7. " தோலென மொழிப தொன்னெறிப் புலவர்." சூ. 539
8. " நூலென மொழிப நுணங்குமொழிப் புலவர்." சூ. 644
9. " சூத்திரத் தியல்பென யாத்தனர் புலவர்." சூ. 646

என வரும் பொருளதிகாரச் சூத்திரத் தொடர்கள் பலதுறைப் புலவர்களைச் சுட்டுதல் காணலாம். தொல்காப்பியச் செய்யு ளியலுரை, யாப்பருங்கலவிருத்தியுரை, காரிகையுரை இவற்றை ஆராய்ந்துகாணின் அகத்தியர், மயேச்சுரர், பெருங்காக்கை பாடினியார், பல்காயனார், நற்றத்தனார், அவிநயர், வாய்ப்பியர் முதலிய யாப்பிலக்கண நூலாசிரியர்பெயர்களையும் சூத்திரங்களை யும் அறியலாம்.

தொல்காப்பியர் தமது இலக்கணநூலினுள் யாப்பறிபுலவர் முதலிய புலவர் பலரைக் குறித்தலால், அவர் காலத்திலும், அவர் காலத்துக்குமுன்னும், இலக்கண நூலாசிரியர் பலர் இருந்தமை வெளியாகும்.

எள்ளிலிருந்து எண்ணெய் எடுப்பதைப் போல இலக்கியத்தி லிருந்து எடுபடுவது இலக்கணம். ஆதலால் இலக்கண நூல்கள் பலவாகவே அவற்றிற்குரிய இலக்கிய நூல்கள்—காலத்தால் முற்

பட்டவையாக—மிகப் பலவாக இருந்திருத்தல் வேண்டும் என்பதும் தெளிவாகும். இதனை நன்கு நோக்கின், தமிழிலக்கிய நூல்கள் தொல்காப்பியத்திற்கு முன்னரே மிகப்பலவாக இருந்திருத்தல் வேண்டுமென்பது புலப்படும். எனவே தமிழ் இலக்கியத்தின் பழமை இன்னதென்று துணியப்படாத நிலையினையுடையது என்று கூறுதல் பொருந்தும்.

ரா. இராகவையங்கார் கூற்றுப்படி, தொல்காப்பியர் பாரத காலத்தவராகக் கொள்ளப்படின், தமிழிலக்கியத்தின் பழமை மேலும் பழமையாதல் கண்கூடு. 'முத்தம்' (முத்து) முதலிய தமிழ்ச் சொற்கள் இருக்கு வேதத்திலேயே இடம்பெற்றுள்ளமை தமிழின் பழமையைப் பாங்குற உணர்த்தும்.

## சங்கத்தின் இறுதிக் காலம் :

ஏறக்குறைய கி. பி. 340-ல் சமுத்திர குப்தன் என்னும் வட நாட்டரசன் தெற்குநோக்கிப் படையெடுத்துவந்து அரசர் பலரை வென்றானென்றும், அவ்வரசருள் காஞ்சியை ஆண்ட விஷ்ணு கோபன் என்ற பல்லவ அரசன் ஒருவன் என்றும், அலகாபாத்தி லுள்ள குப்தனது தூண் கல்வெட்டுக் குறிக்கின்றது. இதனை நோக்கின் கி. பி. 4-ஆம் நூற்றாண்டில் காஞ்சியைத் தலைநகராகக் கொண்ட தொண்டைமண்டலம், பல்லவர் என்னும் புதிய அரச மரபினர் ஆட்சியில் இருந்ததை அறியலாம்.

கரிகாலன் தொண்டைநாட்டை வென்று கைப்பற்றிக் காடு கெடுத்து நாடாக்கினான் என்று சங்கப் பாக்கள் குறிக்கின்றன. கோவலன் மகளான மணிமேகலை வாழ்ந்த காலத்தில் தொண்டை நாடு சோழர் ஆட்சியில் இருந்தது என்று மணிமேகலை கூறுகிறது. பல்லவர் என்ற புதிய அரச மரபினரைப்பற்றிய குறிப்புச் சங்க நூல்களிற் காணப்படவில்லை. விஷ்ணுகோபன் முதலிய பல்லவர் களுக்குப் பின் கி. பி. 9-ஆம் நூற்றாண்டுவரையில் தொண்டை மண்டலம், சோழர் ஆட்சியில் இருந்தமைக்குரிய சான்றும் கிடைக்கவில்லை. இவற்றை நோக்க, மணிமேகலை, சிலப்பதிகாரம் முதலிய நூல்கள் பல்லவர் ஆட்சிக்கு முன்னரே இயற்றப்பட்டன வாதல் வேண்டும் எனக் கருதுதல் தவறாகாது. எனவே சங்கத்தின் இறுதிக்காலம், பல்லவராட்சி தொண்டைமண்டலத்தில் ஏற்பட்ட பொழுது அஃதாவது ஏறத்தாழ, கி. பி. 300 எனக் கொள்ளுதல் பெரிதும் பொருத்தமுடையதாகும்.

இங்ஙனம் கொள்ளின் இன்றுள்ள சங்க நூல்களின் பரந்து பட்ட காலம், தொல்காப்பியர் காலம் முதல் அஃதாவது கி. மு. 300

முதல் கி. பி. 300 வரை என்று கொள்ளுதல் அறிவிற்கும் ஆராய்ச்சிக்கும் ஒருவாறு பொருத்தமுடையதாக இருக்குமென்று கருதுகின்றேன்.

களவியலுரையிற் கூறப்படுவனவும் இப்பொழுது இல்லாதனவுமான பண்டை நூல்களுள் இசைநுணுக்கம், பெருநாரை, பெருங்குருகு, இந்திரகாளியம், பஞ்சமரபு முதலியன இசைத்தமிழ் நூல்கள் ; முறுவல், சயந்தம், செயிற்றியம், குணநூல், மதிவாணர் நாடகத்தமிழ்நூல் முதலியவை நாடகத்தமிழ் நூல்கள். சங்க காலத்துப் பெருந்தேவனார் பாடிய பாரதம் இறந்துபட்டது.

இனி, தமிழிலக்கியங்களுள் கி. மு. 300-க்கும் கி. பி. 300-க்கும் இடைப்பட்ட காலத்துத் தோன்றியவற்றைச் சங்ககால இலக்கியம் என்றும், கி. பி. 301-க்கு மேல் கி. பி. 1300-ஆம் ஆண்டுவரை தோன்றியவற்றை இடைக்கால இலக்கியம் என்றும், கி. பி. 1301-க்கு மேல் 1953-ஆம் ஆண்டுவரை தோன்றியவற்றைப் பிற்கால இலக்கியம் என்றும் மூன்று பகுதிப் படுத்துப் பேச முற்படுவேன்.

# சங்ககால இலக்கியம்

## (கி. மு. 300—கி. பி. 300)

அழிந்தனபோக இன்று நம்மிடையே இருக்கின்ற சங்க நூல்கள் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு, சிலப்பதிகாரம், மணிமேகலை என்பன. இவற்றுள் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, திருக்குறள் என்பன சங்ககால முற்பகுதியில் செய்யப்பட்டவை என்றும், சிலப்பதிகாரமும், மணிமேகலையும் சங்ககாலத்தின் பிற்பகுதியில் செய்யப்பட்டன என்றும் ஒரு சாரார் கூறுவர். சிலப்பதிகாரமும், மணிமேகலையும் மேலும் சில நூற்றுண்டுகளுக்குப் பிற்பட்டன எனக் கூறுவாருமுளர். அக் கூற்றினை மறுப்பார் பலர். இவை அனைத்தும் சங்கநூல்களே எனக் கருதும் தொல்லாசிரியர் நெறிபற்றி யான் மேற்செல்வேன்.

### எட்டுத்தொகை

இன்றுள்ள எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்பன தொகை நூல்கள். நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பன எட்டுத்தொகை நூல்களாகும். இவற்றில் பதிற்றுப்பத்து, புறநானூறு என்னும் இரண்டும் புறப்பொருளைப் பற்றிய தொகை நூல்கள். பரிபாடல் அகம் புறம் இரண்டையும் பற்றிய தொகை நூல். ஏனைய ஐந்தும் திட்டமாக அகப்பொருள் பற்றியவை. புறப்பொருள் நூல்களில் போரைப்பற்றிய பாடல்களே மிகுதியாகக் காணப்படுகின்றன. எனவே, சங்ககாலத் தமிழ்ப்புலவர் காதல், போர் என்னும் இரண்டைப்பற்றியே மிகுதியாகப் பாடியுள்ளனர் என்பது தெளிவு. இதனால் சங்ககாலத் தமிழ்மக்கள் காதலிலும் போரிலுமே மிகுந்த கவனத்தைச் செலுத்தினர் என்று கூறுதல் தவருகாது; அஃதாவது தம் நாட்டைப் பாதுகாத்தனர், வாழ்க்கையை இன்பமயமாக்கிக் கொண்டனர் என்று கூறலாம்.

நாடு தன்னுட்சி பெற்றிருப்பின் ஆட்சிமுறை செம்மையாக இருக்கும். அதனல் மக்கள் வாழ்க்கையும் அமைதி நெறியில் செல்லும். நாட்டமைதிக்கு அடுத்தது வீட்டமைதியாகும். வீட்டமைதிக்குக் காதல் வாழ்க்கையே ஏற்றது. எனவே பழந்தமிழர் நாட்டமைதியையும் வீட்டமைதியையும் இருகண்களாகக் கருதியது பொருத்தமே என்னலாம்.

எட்டுத்தொகை நூற்பாக்களெல்லாம் ஏறக்குறைய நானூறு புலவரால் பாடப்பெற்றன. அப்புலவர்கள், 'வடவேங்கடம் தென் குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகத்து' ஊர்கள் பலவற்றைச் சேர்ந்தவர்கள்; பரந்துபட்ட காலத்தினர்; தொண்டைநாடு, நடுநாடு, சோழநாடு, பாண்டியநாடு, சேரநாடு, கொங்குநாடு, ஈழநாடு ஆகிய பல நாடுகளைச் சேர்ந்தவர். இப்புலவர்பட்டியலில் சேர சோழ பாண்டியரும் அரசமாதேவியரும் இடம்பெற் றுள்ளனர்; அவ்வாறே சிற்றரசரும் அவர்தம் மகளிரும் இடம் பெற்றுள்ளனர். அந்தணர் பல்வகை வணிகர் வேளாளர் போர் வீரர் முதலியோரும் இடம் பெற்றுள்ளனர்.

பெண்பாலருள், முன்சொன்ன அரசமாதேவியர் சிற்றரசர் மகளிர்முதல், குறத்தி வேட்டுவச்சி உட்பட எல்லா வகுப்புப் பெண்டிரும் நல்லிசைப்புலமை மெல்லியலாராக இருந்திருக்கின்ற னர். ஆடவரைப்போலப் பெண்டிரும் பெரும்புலமைபெற்றுக் கவிபாடும் ஆற்றலை அடைந்து அரசராலும் மதிக்கப்பெற்றமை எண்ணியெண்ணிக் களிக்கத்தக்கது.

சங்க காலத்தில் தமிழ்நாட்டில் இத்துணைப்பெண்டிர் புலமை பெற்றிருந்தாற்போல, அதேகாலத்தில் வேறு எந்நாட்டிலும், வேறு எம்மொழியிலும் இத்துணைப்பெண்டிர் கவிபாடும் ஆற்றல் பெற்றிருந்தனர் என்று கூறத்தக்க சான்று இல்லை என்பது இங்கு நோக்கத்தக்கது.

யான் மேலே கூறிய பலநூற்றாண்டுகளில் வாழ்ந்த இப்புலவர் கள் பலபொருள்பற்றித் தனிச்செய்யுட்கள் செய்திருக்கின்றனர். அரசருடைய வீரத்தைப் பாராட்டிப் பாடிய பாக்கள் பல; கொடைச்சிறப்பைப்பற்றியன பல; நல்லொழுக்கத்தைப் பற்றி யன சில; மறுத்து மொழிகின்ற பாக்கள் சில; அரசர் வஞ்சினம் கூறும் பாக்கள் சில; கடவுள், சமயம் பற்றிய பாக்கள் மிகச்சில; குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்னும் ஐவகைத் திணைகளைப் பற்றிய அகப்பொருட்பாடல்கள் மிகப்பல. அகப் பொருளைப்பற்றிய பாடல்களாயினும், அவற்றில் புராண இதிகாசச் செய்திகளும், தமிழரசர் செய்த போர்களும், தமிழ்நாட்டு நகரங் களைப் பற்றிய விளக்கங்களும், வட இந்திய நந்தரியல்பு, பாடலி, சோணையாறு முதலியனவும் இடையிடையே குறிப்பிடப் பட்டுள் ளமை வரலாற்று ஆராய்ச்சிக்குப் பெருந்துணை செய்கின்றது.

புறநானூறு: எட்டுத்தொகை நூல்களுள் சங்ககாலத் தமிழகம், தமிழரசு, சமுதாயம், கல்வி, சமயம், கலைவளர்ச்சி இன்னோரன்ன செய்திகளை அறிதற்குப் பேருதவியாக இருப்பன

புறநானூறும், பதிற்றுப்பத்துமே எனக் கூறுதல் பொருந்தும். புறநானூறு தமிழகத்து நாடுகளையும் அவற்றை ஆண்ட அரசர், சிற்றரசர் முதலியோரையும் பற்றிய விளக்கங்களைக் கூறும் நூலாகும்.

புறநானூறு புகலும் செய்திகள் மிகப்பல. அறம், பொருள், வீடு என்னும் முப்பொருள்களையும் பற்றிய பாடல்கள் இதன்கண் காட்சியளிக்கின்றன. இப்பாடல்களால் சங்ககாலத்துத் தமிழக நிலையையும் அக்காலத்தில் தத்தம் நாடுகளை ஆண்ட சேர சோழ பாண்டியர், வேள்பாரி போன்ற சிற்றரசர்கள், தமிழ்வீரர், வீரப் பெண்டிர், அரசமாதேவியர் முதலியோர் பண்புகளையும், போர்ச் செய்திகளையும், சமுதாயம் இருந்த நிலையையும், சமய நிலையையும் ஒருவாறு அறியலாம். இவ்வொப்பற்ற நூல் கிடைத்திராவிடில் சங்ககாலத் தமிழக வரலாற்றை நாம் இன்று அறிந்துள்ள அளவு அறிய முடியாது என்பதைத் திட்டமாகக் கூறலாம். இவ்வரிய நூலை அரும்பாடுபட்டு அச்சிட்டு வெளிப்படுத்திய மகாமகோபாத்தி யாயர், டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களுக்கு நமது நன்றி என்றும் உரியதாகும்.

பதிற்றுப்பத்து : இது, சேரநாட்டையும் சேரமன்னரையுமே பற்றியதாகும். சேர அரசர் செய்த வீரச்செயல்களும், அவர்தம் கொடை, வாழ்க்கைச்சிறப்பு, நாட்டுவளம் முதலிய குறிப்புக்களும் பதிற்றுப்பத்திற் பரக்கக்காணலாம்.

பரிபாடல்: எழுபது பாடல்களைக்கொண்ட பரிபாடல் நூலில் இன்றுள்ளவை 22 பாடல்களேயாகும். மூன்று பாடல்கள் பிற்சேர்க்கையாகச் சேர்க்கப்பட்டுள்ளன. இந்நூற்பாக்கள் சொற் சுவை, பொருட்சுவைகளில் சிறந்தவை; பொருள்களின் இயற்கை அழகினை நன்கு விளக்குபவை; மதுரை, வையையாறு, திருப்பரங் குன்றம், திருமாலிருஞ்சோலைமலை என்பவைபற்றியும் தெரிவிப் பவை; அக்கால நாகரிக முறைகளையும், வைதிக ஒழுக்கங்களையும், தெய்வ வழிபாட்டுமுறைகளையும், தமிழகத்து வரலாறுகள் சிலவற்றையும் அறிவிப்பவை. இப்பாக்கள் கடவுளும் காதலும் பொருளாகக் கொண்டவை; ஆதலால் இவை, ஒருபால் புறப் பொருளையும், மற்றொருபால் அகப்பொருளையும் சேர்ந்தவை எனக் கூறலாம். வையையாற்றில் நீர் பெருகிவரும் சிறப்பு பல பாடல் களில் விளக்கப்பட்டுள்ளது. பொதுமக்கள் புதுவெள்ளத்தில் நீராடிப் பொன்னாலும் வெள்ளியாலும் செய்த, மீன், இறால், நண்டு என்பவற்றை வெள்ளத்தில் போகவிடுதல் மரபு என்பது பரிபாட லால் தெரிகின்றது. புதுநீரில் நீராடி மீண்ட தலைமகனோடு தலை

மகள், பரத்தையோடு நீராடினன் என்று ஊடல் கொள்ள அத் தலைவன், "தலைதொட்டேன் தண்பரங்குன்று", "குன்றத்தின் சாரல் ஆணை," "இரும் பொழில் ஆணை" எனத் திருப்பரங் குன்றத்தின்மேலும், அம்மலைச்சாரல்மீதும், அதனைச்சார்ந்த பெருஞ் சோலைமீதும் ஆணையிட்டுத் தான், பரத்தையோடு நீராட வில்லைஎன்று கூறும்பகுதிகளும், தலைவன் பரத்தையரோடு நீராடு தலைக் குறிக்கும் பகுதிகளும் படிக்கப் படிக்க இன்பந்தருவனவாகும்.

"யாமிரப்பவை பொருளும் பொன்னும் போகமும் அல்ல :
நின்பால் அருளும் அன்பும் அறனும்" (5, 79-80)

என்று அடியார் ஆண்டவனை வேண்டும் பகுதி, இக்கால மக்கள் வேண்டுதலுக்கு முற்றும் மாறுபட்டதன்றோ? இவ்வேண்டுதலின் பொருட்சிறப்பை என்னென்பது!

அகநானூறு: அலெக்ஸாண்டர் இந்தியாவின்மீது படை யெடுத்துவந்தகாலத்துப் பாடலிபுரத்தைத் தலைநகராகக்கொண்ட மகதநாட்டை நந்தர் ஆண்டுவந்தனர். அவர்களிடம் பொன்னும் மணிகளும் மிக்கிருந்தன. படையெடுப்பு பாடலியை நெருங்குமோ என்று அஞ்சிய நந்தர் ஒன்பதின்மரும் தம்முள் ஆராய்ந்தனர்; பல அறைகளைக் கொண்ட வலிய பெட்டியொன்றனைத் தயாரித்தனர். அவ்வறைகளில் தம்மிடமிருந்த பொன்னையும் மணிகளையும் இட்டு நிறைத்தனர். பின்பு பாடலியை அடுத்திருந்த கங்கையாற்றின் நீர்ப்போக்கை இரண்டாகப் பிரித்து மணலைத்தோண்டி, ஆற்றின் அடியில், வலிய அறைஒன்றைக் கட்டி, அவ்வறையினுள், நிதிப் பெட்டியைவைத்து, நீர் அறையினுள் புகாதவாறு, அறையை நன்கு மூடி, ஈயத்தை உருக்கி வார்த்தனர். பின்னர் முன்போலக் கங்கை நீர் செல்லுமாறு விடுத்தனர் என்பது வரலாறு. இந்த மறைமுகமான செய்தி நமது அகநானூற்றில் காணப்படுகின்றது. வாணிகம் செய்ய வடநாடுசென்ற கணவன், குறித்த காலத்தில் வரவில்லை; அங்ஙனம் வாராமைக்கு, நந்தர் மேற்சொன்னவாறு கங்கைநீருக் கடியில் மறைத்துவைத்த செல்வம் காரணமாக இருக்கலாமோ என்று கணவனின் பிரிவாற்றாத தலைவி தோழி யிடம் கூறுகிறாள் :

"பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்
சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கை
நீர்முதல் கரந்த நிதியங் கொல்லோ?" (அகம்-265)

என்பது அப்பாடற் பகுதியாகும். இத்தகைய அரிய வரலாற்றுச் செய்திகளேயன்றிப் பண்டைத் தமிழர் மணமுறைபற்றிய செய்தி

களும் அகநானூற்றில் காணலாம். இம் மணச்செய்திகளை விளக்கப் போந்த பேராசிரியர் பி. டி. சீனிவாச ஐயங்கார் தமது "தமிழர் வரலாறு" என்னும் நூலில் "இப் பண்டை மணமுறையில் எரியோம்பல் இல்லை; தீவலம் வருதல் இல்லை; தட்சிணை பெறப் புரோகிதர் இல்லை. இது முற்றிலும் தமிழர்க்கே உரிய திருமண முறையாகும்" என்று வற்புறுத்திக் கூறியிருத்தல் கவனிக்கத் தக்கது. இத்தகைய பல செய்திகளையும் நோக்குங்கால் சங்க காலத் தமிழக வரலாற்றைக் காட்டப், புறநானூற்றுக்கு உறுதுணை யாக இருப்பது அகநானூறு என்று கூறுதல் தவறாகாது.

நற்றிணை : நற்றிணையும் அகநானூற்றைப் போலவே நானூறு செய்யுட்களைக் கொண்ட நூல். இவற்றை ஏறத்தாழ 175 புலவர்பெருமக்கள் பாடியுள்ளனர். இதன்கண் வரலாற்றுச் செய்திகள் சிலவே காணப்படுகின்றன. ஆயினும், அகப்பொருட் செய்திகள் மிகத் தெளிவாகவும் அழகுபடவும் எடுத்துரைக்கப் படுகின்றன. இதன்கண் காணப்படும் உவமைகள் மிகப் பொருத்தமும் நயமும் உடையவை.

பொருளீட்டச் சென்ற தலைவன் தலைவியைப் பிரிய ஆற்றாய், "என் நெஞ்சம் தலைவியிடம் செல்வோம் என்கிறது; எனது அறிவோ 'பொருள் முடித்துப் போ; அதற்குள் விரையாதே', என்று அறிவுரை கூறுகிறது. இவ்விரண்டிற்கும் இடையில் உள்ள இவ்வுடம்பு, இரண்டு ஆண் யானைகளால் இழுக்கப்பட்ட, தேய்ந்த புரியையுடைய பழங்கயிறு அழிவதுபோல அழியவேண்டுவது தான்போலும்" என்று கூறி வருந்துகின்றான். தலைவியின் பிரிவால் வருந்திய தலைவனது உடல் தேய்புரிப் பழங்கயிற்றைப் போன்றது என்று கூறியிருத்தல் எவ்வளவு நயமுடையது! இவ்வாறே, "பேரூர்ப் பாழ்காத்திருந்த தனிமகன் போன்றே" என்பன போன்ற உவமைகள் மிக்க பொருள்நயம் உடையவை.

தலைமகன் வினைவயிற் பிரிந்தான். அவன் குறித்த பருவத் தில் வந்திலன். அதற்காகத் தலைமகள் வருந்தினாள். தோழி ஆறுதல் கூறினாள். அப்பொழுது தலைமகள், "காதலன் வாராமை யால் யான் இறப்பதற்கு அஞ்சவில்லை, இறந்து வேறொரு பிறப் பாய்விடின், அப்பொழுது அவனை மறக்க நேரிடுமோ என்ற ஒன்றுக்குத்தான் அஞ்சுகிறேன்" என மனம் நொந்து கூறினாள்.

"சாதல் அஞ்சேன் அஞ்சுவல் சாவில்
பிறப்புப் பிறிதாகுவ தாயின்
மறக்குவன் கொல்என் காதலன் எனவே" (397)

என்பது அக்கருத்தைக் குறிக்கும்.

இங்கே,

" இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனுக்
கண்ணிறை நீர்கொண் டனள் " (1315)

என்னுங் குறள் நினைந்து இன்புறத்தக்கது. இன்னோரன்ன உள்ளத்தை உருக்கும் இனிய செய்திகள் பலவற்றை நற்றிணையில் காணலாம்.

குறுந்தொகை : நான்கு முதல் எட்டு வரிகளைக்கொண்ட 401 அகப்பாடல்களைக் கொண்டது. இவற்றை 204 புலவர் பாடியுள்ளனர். நற்றிணையைப்போலவே இப்பாடல்களும் சொல்லழகும், பொருளழகும் செறிந்து காணப்படுவன. கூந்தலுக்கு இயற்கையில் மணமுண்டு என்பதை எடுத்துக் கூறும் " கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத்தும்பி " என்று வருகிற அரிய செய்யுள் குறுந்தொகையிலேதான் உள்ளது. தருமிக்குப் பொற்கிழி அளித்த படலம் எழக் காரணமாய் இருந்தது இச் செய்யுள் அன்றோ? தலைமகன் பரத்தையிற் பிரிந்து மீண்டு வந்தான். தலைவி தனக்கிருந்த ஆற்றாமை நீங்கி அவனோடு அளவளாவி, "நாம் பிறவிதோறும் அன்புடைய கணவனும் மனைவியுமாய் இருப்போமாக" என்னும் கருத்து அமைய,

" இம்மை மாறி மறுமை யாயினும்
நீயா கியர்என் கணவனை
யானா கியர்நின் நெஞ்சு நேர்பவளே " (49)

என்று கூறினாள். இங்கே 'நெஞ்சு நேர்பவளே' என்ற பகுதி அவள் உள்ளக்கருத்தைத் தெள்ளிதின் விளக்குவதாகும். இத்தகைய சுவை பயக்கும் பகுதிகள் பல குறுந்தொகையில் இடம் பெற்றுள்ளன. இதன்கண் காணப்படும் பழமொழிகளும் உவமைகளும் மிக்க நயமுடையவை.

இனி ஐங்குறுநூற்றில் ஐந்திணையும் பற்றிப் புலவர் ஐவர் பாடிய ஐந்நூறு செய்யுட்கள் காணப்படுகின்றன. பரத்தையரொடு மேவியிருந்த தலைமகன் பிரிந்துவந்து தலைவியோடுகூடி வாழத்தொடங்கினான். அவன் தோழியை நோக்கி, " யான் பிரிந்திருந்தபோது நீங்கள் என்ன செய்துகொண்டிருந்தீர்கள் " என்று வினவினான். தோழி அவனை அன்புற நோக்கி, " மழை நன்கு பெய்க, வயல் விளைக, இரவலர் வருக; ஆனினங்கள் பாலைச் சொரிக, நாட்டில் பசி யில்லையாகுக, பிணி ஒழிக; களவு இல்லையாகுக, அரசு முறைசெய்க " என்று நின்மனைவியாகிய எங்கள்

தலைவி வேண்டினாள். நாங்கள் "இத்தகைய சிறந்த பத்தினியுடன் உனது நட்புச் சிறக்கவேண்டும் என வேண்டினோம்" என்று விடை அளித்தாள்.

ஒரு தலைவன் பரத்தைவீட்டிலிருந்து தலைவியிடம் வந்து நின்றான். அவனைப் பார்த்துத் தலைமகள்,

" வேண்டேம் பெருமநின் பரத்தை
ஆண்டுச்செய் குறியோடு ஈண்டுநீ வரலே" (மருதம் 48)

என்று மனம் வருந்திக் கூறினாள்.

ஒரு தலைமகன் பரத்தையரோடு புனலாடினான். அது கேள்வி யுற்ற தலைமகள் அதுபற்றி அவனை வினவினாள். அவன் இல்லை என மறுத்தான். அப்பொழுது தலைமகள்,

" ............அலரே
மறைத்தல் ஒல்லுமோ மகிழ்ந
புதைத்தல் ஒல்லுமோ ஞாயிற்ற தொளியே?" (மருதம் 71)

என்றுகூறி நகைத்தாள். இத்தகைய இனிமை பயக்கும் செய்திகள் பல ஐங்குறுநூற்றில் உண்டு.

இனி, கலித்தொகையைக் காண்போம். புறநானூறு முதலிய தொகைநூல்கள் அகவற்பாவால் இயன்றவை. ஆனால் கலித்தொகையோ கலிப்பாக்களால் இயன்றது. குறிஞ்சி முதலிய ஐந்திணைகளைப்பற்றிய பாக்கள் 150 இதன்கண் இடம்பெற்றுள்ளன. தனிப்பட்ட காதல்நிகழ்ச்சிகள் பெரும்பாலும் உரையாடல் முறையில் அமைந்துள்ளன. இவ்வுரையாடல்களில் தலைவி, தலைவன், தோழி ஆகிய மூவரும் இடம்பெற்றுள்ளனர். உயர்ந்த தலைமக்களுடைய காதலொழுக்கமும், அடியவர் வினைவலர் இவர்தம் காதற் செய்திகளும் இப்பாடல்களில் பேசப்படும். இராமாயணம் பாரதம் பாகவதம் என்னும் பெருநூற் செய்திகள் பல இப்பாடல் களில் உவமைகளாகக் கூறப்பட்டுள்ளன. இந்நூற் பாக்கள் தமிழரது களவு முறை, இல்வாழ்க்கை, இல்லறஇன்பம் என்பவற்றை மிகத் தெளிவாகவும் சுவைபடவும் எடுத்தோதுகின்றன.

எடுத்துக்காட்டாகச் சில கூறுவேன். "தோழி, இதனைக் கேள்: நாம் பண்டு சிற்றில்இழைத்துச் சிறுசோறு சமைத்து விளையாடியபொழுது, நம் சிற்றிலைக் காலால் அழித்து, நம் மனம் வருந்தும்படி செய்த பட்டிமகன், ஒருநாள் யானும் தாயும் வீட்டிலிருந்தபோது வந்தான். நீர் வேட்கை என்றான். அன்னை ஒரு கலத்தில் நீர்தந்து ஊட்டிவா என என்னை அனுப்பினாள். யான் அவனுக்கு நீர்தந்தபொழுது அவன் என் கையைப்

பற்றினன். யான் 'அன்னய் இவன் செய்வதைக் காண்' என்றேன். அன்னை அலறிக்கொண்டே எங்களிடம் வந்தாள். யான் உண்மை கூருது, இவன் நீருண்ணும் பொழுது விக்கினன் என்றேன். கள்ளங்கபடு அற்ற அன்னை, யான் கூறியதை மெய் என நம்பி அவன் முதுகைத் தடவினள். அப்பொழுது அவன் என்னைக் கடைக்கண்ணல் கொல்வான்போல நோக்கித் தன் நன்றியையும் காதலையும் புலப்படுத்தினன்.'' இத்தகைய காதற் செய்திகள் பல இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

''ஐயனே நீ தலைவியிடம் காதல் கொண்டிருப்பது இனிது; ஆனல் அஞ்சத்தக்க இரவில் நீ நெடுந்தூரம் நடந்துவருதல் இன்னது. நீ இவளிடம் அன்பு கொண்டிருத்தல் இனிது; ஆனல் மலைக்கணவாய்வழியே நீ இரவில் வருதல் இன்னது. நீ இவள்பால் அருள்கொண்டிருத்தலோ இனிது; ஆனல் யானைகள் உலவும் அரிய வழியில் நீ வேலேந்தி வருதல் எமக்கு இன்னது.'' எனவரும் தோழி கூற்று எவ்வளவு சொல்நயம் பொருந்தியுள்ளது. இவ்வாறு சொல்நயம் அமைந்த செய்யுட்கள் கலித்தொகையில் உண்டு.

இரவில் யானையின் காலடி ஓசையைக் கேட்ட தினைப்புனக் காவலன், ஓசைவந்த திசையை நோக்கிக் கவண்கல்லை வீசினன். அக் கல், வேங்கைப்பூக்களைச் சிதறச் செய்தது; கனிந்த ஆசினிப் பலாப்பழங்களை உதிர்த்தது; தேனடையைத் துளைத்தது; மாங் கொத்துக்களை உழக்கியது; வாழைமடலைக் கிழித்தது; இறுதியில் பலாப்பழத்துள் தங்கிவிட்டது. இத்தகைய சுவைபயக்கும் செய்திகள் பலவும் கலித்தொகையிற் காணலாம்.

## பத்துப்பாட்டு

இனி, பத்துப்பாட்டைப் பார்ப்போம். வெவ்வேருன பத்துப் பாடல்கள் ஒன்ருய்த் தொகுக்கப்பட்டமையின் பத்துப்பாட்டு என வழங்கலாயிற்று.

> " முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
> பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய
> கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
> பாலை கடாத்தொடும் பத்து "

என்னும் பழைய வெண்பாவால் பத்துப்பாட்டு இவையென்பது புலனகும்.

பத்துப்பாட்டின் பெயரும் அவற்றைப் பாடினோர் பெயரும் அவற்றால் பாடப்பட்டோர் பெயரும் வருமாறு :—

| பாட்டின் பெயர் | பாடினோர் பெயர் | பாடப்பட்டோர் பெயர் |
|---|---|---|
| 1. திருமுருகாற்றுப் படை | நக்கீரர் | முருகன் |
| 2. பொருநராற்றுப் படை | முடத்தாமக் கண்ணியார் | சோழன்-கரிகாலன் |
| 3. சிறுபாணாற்றுப் படை | நத்தத்தனார் | ஓய்மானாட்டு—நல்லியக் கோடன் |
| 4. பெரும்பாணாற்றுப் படை | உருத்திரங்கண்ண னார் | தொண்டைமான்—இளந் திரையன் |
| 5. முல்லைப்பாட்டு | நப்பூதனார் | பாண்டியன்- நெடுஞ்செழியன் |
| 6. மதுரைக்காஞ்சி | மாங்குடிமருதனார் | ,, |
| 7. நெடுநல்வாடை | நக்கீரர் | ,, |
| 8. குறிஞ்சிப்பாட்டு | கபிலர் | ஆரிய அரசன்–பிரகத்தன் |
| 9. பட்டினப்பாலை | உருத்திரங்கண்ண னார் | சோழன்-கரிகாலன் |
| 10. மலைபடுகடாம் | பெருங்கௌசிகனார் | நன்னன்சேய்-நன்னன் |

இப் பத்துப்பாடல்களும் சற்று ஏறத்தாழ ஒரே காலத்தில் இயற்றப்பட்டனவாகும். இவை இயற்றப்பட்ட அக்காலமும் கி. பி. இரண்டாம் நூற்றாண்டே. ஏனெனில், இவற்றுள் முல்லைப் பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை ஆகிய மூன்றும் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழி யனைக் குறித்து அவன் காலத்தே பாடப்பட்டனவாதலின் இவை ஒரேகாலத்தனவாம். இவற்றுள் நெடுநல்வாடையைப் பாடிய நக்கீரரே திருமுருகாற்றுப்படையையும் பாடியுள்ளாராதலின் திரு முருகாற்றுப்படை முன்னைய மூன்றினோடும் ஒட்டிய அதே காலத் தில் இயற்றப்பட்டதாதல்வேண்டும்.

மாங்குடிகிழார் என்பவர் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை நேரிற் பாடிய புலவருள் ஒருவர். (புற. 24, 26, 372). இம் மாங்குடிகிழார் வாட்டாற்றெழினியாதனை யும் நேரிற் பாடியுள்ளார். (புறம். 396) இவ்வெழினியாதனால் ஆதரிக்கப்பெற்ற புலவருள் ஒருவர் அரிசில்கிழாராவர். (புறம். 230.) வையாவிக்கோப்பெரும்பேகன் தன் மனைவியாகிய கண்ணகி

யைத் துறந்தபொழுது அவளை அவனோடு கூட்டுதற்குப் பாடிய புலவருள் அரிசில்கிழாருமொருவர் (புறம். 146). ஆதலில் அரிசில்கிழார் இப் பெரும்பேகன்காலத்தவர் என்றும், அதே காரணமாய்ப் பெரும்பேகனிடம் சென்று பாடிய கபிலர் (புறம். 143) பரணர் (புறம். 144) முதலிய புலவர்கள்காலத்தவரென்றும் தெரிய வருகின்றது. இவருள், பரணர், உருவப் பல்தேர் இளஞ்சேட் சென்னியைப் பாடியவர் (புற. 4). உருவப் பல்தேர் இளஞ்சேட் சென்னி சோழன் கரிகாலனின் தந்தை (பொரு. 130). இப்பரணரே சேரன் செங்குட்டுவனைப்பாடி (பதிற். 5) உம்பற்காட்டு வருவாய் முதலியன பரிசிலாகப் பெற்றவர்.

எனவே சோழன் கரிகாலனைப் பாடிய பொருநராற்றுப் படையும் பட்டினப் பாலையும் மேற்கூறிய நான்கு பாட்டுக்களும் இயற்றப்பட்ட காலத்தை ஒட்டியே இயற்றப்பட்டிருக்க வேண்டு மெனக் கொள்ளவேண்டும். அன்றியும் பட்டினப்பாலை பாடிய உருத்திரங்கண்ணனாரே பெரும்பாணாற்றுப்படையையும் பாடி யுள்ளாராதலின் அதுவும் அக்காலத்ததே. கபிலர், பரணர் காலத்தவரென்று முன்னரே குறிக்கலாயிற்று. ஆதலின் கபிலர் பாடிய குறிஞ்சிப்பாட்டும் அக்காலத்தில் உண்டாயதே. இனி எஞ்சியன சிறுபாணாற்றுப்படையும் மலைபடுகடாமுமாம். இவற்றுள் சிறுபாணாற்றுப் படையில்,

குடபுலங் காவலர் மருமா னொன்னார்
வடபுல விமயத்து வாங்குவிற் பொறித்த
எழுவுறழ் திணிதோள் இயல்தேர்க் குட்டுவன்
வருபுனல் வாயில் வஞ்சியும் வறிதே. (சிறுபா. 47, 50).

எனக் கூறப்பட்டுள்ளவற்றிலிருந்து அது சேரன் செங்குட்டுவன் காலத்தது எனக் கருத இடமுண்டாகின்றதாகலின் இதுவும் முற்கூறிய காலத்ததேயாம்.

மலைபடுகடாத்தில் பாடப்பட்டவன் நன்னன். இந்த நன்னன் இளவிச்சிக்கோவின் மூதாதையாவான் (புறம். 151). குமணன் கடையெழுவள்ளல்கள் இறந்த பிறகும் உயிரோடிருந்து அவ் வள்ளல்களை ஒப்ப ஈகையிற் சிறந்து விளங்கினன் (புறம். 158). இக் குமணனைப் பாடினோர் பெருஞ்சித்திரனாரும் (புறம். 158-63), பெருந்தலைச்சாத்தனாரும் (புறம். 164, 165) ஆவர். கடையெழு வள்ளல்கள் கரிகாலன் காலத்தவர். சிறுபாணாற்றுப் படைத் தலைவனாகிய நல்லியக்கோடனும் கடையெழுவள்ளல்களை அடுத் திருந்தவனாதலின் குமணன் காலம் சற்றேறக்குறைய அதுவே

யாகும். பெருந்தலைச்சாத்தனர் இளவிச்சிக்கோவைப் பாடியுள்ளார் (புறம். 151); எனவே நல்லியக்கோடன், குமணன், விச்சிக்கோ முதலியவர் சற்றேறத்தாழச் சமகாலத்தவர் என்று தெரிகிறது. விச்சிக்கோவின் முன்னோனாகிய நன்னன் காலம் இதற்குச் சற்று முந்தியதாகும். ஆகவே மலைபடுகடாம், சிறுபாணாற்றுப்படை இயற்றப்பட்ட காலத்தை அடுத்து இயற்றப்பட்டதாகும்.*

இவ்வாறாகப் பத்துப்பாடல்களும் ஒரே நூற்றாண்டில் இயற்றப்பட்டன எனக் கொள்ளுதற்கு இடமுண்டாகிறது. அக்காலமும் சேரன்—செங்குட்டுவன், சோழன்—கரிகாலன், பாண்டியன்—தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் ஆகிய மூன்று பெருந்தமிழ்வேந்தர் காலத்தை ஒட்டியதாம். இவர் காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டெனக் கொண்டமையின் இப் பத்துப்பாடல்களும் கி. பி. இரண்டாம் நூற்றாண்டிலும் அதனை முன்பின் ஒட்டியுமே இயற்றப்பட்டிருத்தல் வேண்டுமென்பது உறுதியாகிறது. இனிப் பத்துப்பாட்டைப்பற்றியும் முறையே விரித்துப் பேசுவேன்.

1. திருமுருகாற்றுப்படை: தன்னை உண்ணும்பொருட்டுப் பிடித்து அடைத்து வைத்திருந்ததோர் பூதத்தினின்று விடுபடுமாறு நக்கீரர் முருகக் கடவுளை நினைந்து இப்பாடலைப் பாடி அக்கடவுளருளால் பூதத்தின் பிடியினின்று விடுதலைபெற்றனரென்பர். இப்பாட்டு 317 அடிகளையுடையது; முருகக் கடவுளை அடைந்து வீடு பெற்றானொருவன் வீடுபேற்றை விரும்பிய மற்றொருவனை அக்கடவுளிடத்தே செலுத்திய முறையில் பாடப்பட்டது; முருகன் அமர்ந்திருக்கும் படை வீடுகள் எனப்படும் தலங்களைச் சிறப்பித்துக் கூறுவது. முருகவேளிடத்தில் ஈடுபட்ட நெஞ்சினராய் நக்கீரர் கல்லும் கசியப் பத்தி ரசம் பெருகியோடுமாறு பாடியுள்ள இச்செய்யுளினிடையே அப்பெருமானுடைய ஆறுமுகமும் பன்னிரு கைகளுமாகியவற்றின் செயல்கள் முதலியனவும், அந்தணர் முனிவர் முதலியவருடைய தோற்றம் ஒழுக்கம் இயல்பு முதலியனவும், அந்நாளில் வாழ்ந்த மக்களுடைய அணி ஆடை முதலியனவும், 'வேலன்' அல்லது 'படிமத்தான்' என்பவனது தோற்றமும், குறமகளிர் விழாக் கொண்டாடு முறையும், முருகனை ஏத்தி வழிபடும் முறையும், அவ்வழிபாட்டால் எய்தற்பாலனவாய பேறு முதலியனவும் ஆங்காங்கே விரித்துரைக்கப்பட்டுள்ளன.

---

* இக்குறிப்புக்கள், 'பத்துப்பாட்டின் காலம்' என T. A. இராமலிங்கம் செட்டியாரவர்கள் எழுதியுள்ள கட்டுரையில் கூறப்பட்டுள்ளன.

உ. பொருநராற்றுப்படை : சோழ நாடாண்ட பேரரசருள் சிறந்தவனாகிய கரிகாலனை முடத்தாமக் கண்ணியார் பாடியது; 248 அடிகளையுடையது; தன் பேரவாத் தீரக் கரிகாற் சோழனிடம் பரிசில் பெற்றுனோர் பொருநன் பரிசில் பெறக் கருதிய மற்றுமோர் பொருநனை அச்சோழனிடம் வழிப்படுத்தியதாகப் பாடப்பட்டது. இதனிடையே பாலையாழினது இசைச் சிறப்பு, கரிகாற் சோழனது பிறப்பு, அரசுரிமை, வீரம், அவன் வெண்ணிப் போர்க் களத்தில் சேர பாண்டியரை வென்ற வரலாறு, சோணாட்டு வளன், காவிரிப் பாய்ச்சலின் நெல்விளைவு முதலியன கண்ணுற் கண்டாலெனப் படிப்போர் அறிந்துகொள்ளுமாறு விளக்கப்பட்டுள்ளன. இப் பாட்டினின்று கரிகாற்சோழனது கொடைப்பெருமையும் இனிது விளங்கும்.

சோழநாட்டின் பற்பல பாகங்களில் உள்ள விளைவுகள் காவிரி யாற்றின் வளம் முதலியவற்றை அறிய விரும்புவோர் இப்பொருந ராற்றுப்படையைப் படித்தறியலாம்.

3. சிறுபாணாற்றுப்படை : இது 269 அடிகளையுடையது; ஓய்மானாட்டு நல்லியக்கோடன் பெருமையை விரிப்பது. நல்லியக் கோடன் வண்மையால் தன் வறுமை நோய் தீர்ந்து வாழ்வடைந்தா னொரு பாணன் நல்குரவால் நைந்த மற்றொரு பாணனை அந்நல்லி யக்கோடன்பாற் சேர விடுத்ததாக நல்லூர் நத்தத்தனார் பாடியது; பத்துப் பாட்டுள் உள்ள பாணாற்றுப்படை இரண்டனுள் அடியளவாற் சிறியதாதலின் சிறுபாணாற்றுப்படை என வழங்கப்பட்டது.

இதனிடையே வடநாட்டிமயத்து விற்பொறித்த குடநாட் டரசர் பெருமையும், கொற்கையையுடைய மதுரைப் பாண்டியர் உயர்வும், தன்னுட் சென்றவர் நீங்கா உறந்தைக்குரிய சோழர் சிறப் பும் கூறப்பட்டிருப்பதன்றியும், மயிலுக்குப் போர்வையளித்த ஆவி யர் பெருமகன் பேகன், முல்லைக்குத் தேர் அளித்த பறம்பரசன் பாரி, நாடு குதிரை முதலியவற்றை இரவலர்க் கீந்த காரி, ஆலின் கீழ் இறைவனுக்கு நீலக்கலிங்கம் நல்கிய ஆய், ஔவைக்கு நெல் லிக்கனி யீந்த அதிகமான், இல்லறம் நடாத்துபவருக்குப் பல பொருள் கொடுத்த நள்ளி, கூத்தர்க்கு நாடு கொடுத்த ஓரி ஆகிய ஏழு வள்ளல்களின் இயல்பும் பாராட்டப் பெற்றுள்ளது. இது ஓவியர் குடியிற் பிறந்த நல்லியக் கோடனின் நாட்டுவளத்தையும் அவன் மூதூரையும் சிறப்பித்து அவன் நாட்டிலுள்ள ''பரதவர் மலிந்த எயிற்பட்டினம்'' ''கேணிப்பூ, வேலெனப் பூத்த வேலூர்'' ''அந்த ணர் நிறைந்த ஆமூர்'' முதலியவற்றின் பெருமையையும் கூறுவது.

**4. பெருமபாணாற்றுப்படை :** இது 500 அடிகளையுடையது. தொண்டைமான் இளந்திரையன்பாற் சென்று தன் மிடிதீர்ந்த பாணனொருவன், ஊணின்றி மெலிந்த தன்னுடலைத் துளை மிகுந்த போர்வையால் மூடித் தன்னை யாதரிப்பாரைக் காணுமே அலைந்து திரிதரும் மற்றோர் பாணனை எதிர்ப்பட்டு, மூவேந்தரிற் சிறந்த சோழன்மரபில் உதித்த தொண்டைமான் இளந்திரையன்பாற் சென்று, தன் மிடியைத் தீர்த்துக்கொள்ளுமாறு சொல்லி அவனை அத்திரையன்பாற் செலுத்தியதாகக் கடியலூர் உருத்திரங் கண்ணனூர் பாடியது. தொண்டைநாடு செல்லும்வரை இடைநாட்டிலுள்ள பாலை, குறிஞ்சி முதலிய நிலங்களின் இயற்கை வனப்புக்கள், அவற்றில் வதிவாரது வாழ்க்கை, நாய்கொண்டு முயல் வேட்டையாடல், ஆவோம்பிக் கன்றுகாத்துப் பால் தயிர் விற்று நெல்லும் புல்லும் மாறுதல், கழனியில் விதைத்து நெல் அறுத்தல் முதலிய பல தொழில்கள், கடற்கரைப் பட்டினத்தில் மேற்றிசைக் குதிரை முதலியன வந்திறங்கியிருக்கும் புறநாட்டு வாணிகச் சிறப்புக்கள், அவ்வந் நிலங்களைக் கடந்து செல்லுங்கால் ஆங்காங்கே கிடைப்பனவாகிய உணவு வகைகள், காஞ்சிபுரத்திலுள்ள தேரோடிக் குழிந்த தெருக்களின் சிறப்பு, திருமாலின் இருப்பிடமாகிய திருவெஃகாவின் மேன்மை முதலிய பல செய்திகளை இதனுலறியலாம்.

**5. முல்லைப்பாட்டு :** இது 103 அடிகளையுடையது. காவிரிப் பூம்பட்டினத்துப் பொன்வாணிகனுர் மகனுர் நப்பூதனுரால் பாடப் பெற்றது. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ் செழியனைப் பாட்டுடைத் தலைவனுகக் கொண்டெழுந்தது; போர் வயிற் பிரிந்த தலைவன் குறித்த காலத்துத் திரும்பிவருமளவும், தலைவி ஆற்றியிருந்த திறனுரைப்பது. இதில் விரிச்சி கேட்டுப் போர்க்கெழு முறையானே சென்ற அரசன் போர்க்களத்தில் தங்கியிருந்த தன்மையும், அவன் பகைவரோடு பொருது வெற்றி வேந்தனுய்த் திரும்பியவாறும் விரிக்கப்பட்டுள்ளன.

போர் வேட்டுச் சென்ற அரசன் தன் படைகளுடன் கூடாரங்களில் அமர்ந்து இரவிற் பொழுதுபோக்கும் முறை, ஆங்காங்கே பற்பல விளக்கங்கள் ஏற்றப்பட்டு ஒளி வீசுகின்ற சிறப்பு, போர் செய்யச் செல்லும் அரசன் நற்சொற் கேட்டல், சகுனம் பார்த்தல், அக்காலத்தவர் நேரத்தைக் கணக்கிட வழங்கிய நாழிகை வட்டிலின் இயல்பு முதலியனவும் இப்பாட்டில் கூறப்பட்டுள்ளன.

**6. மதுரைக் காஞ்சி :** இது 782 அடிகளையுடையது. இதை இயற்றினுர் மாங்குடி மருதனுர்; பாடப்பட்டவன் தலையாலங்கானத்

துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன். பாடிய நோக்கம் நெடுஞ்செழியனை மறுமையின்ப மெய்தற்கான வழியிலுய்த்தல். செழியன் நெடுநாளுலகாண்ட அரச மரபிலுதித்தவன்; பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி, ஆழிவடிம்பலம்ப நின்ற பாண்டியன் முதலியவர் வழியில் தோன்றினவன்; பொருநர்க்குக் கன்றும் பிடியும் பொற்றாமரையும் தருபவன்; சேர சோழரையும் குறுநில மன்னர் ஐவரையும் தலையாலங்கானத்துப் போரில் வென்று அவர் முரசைக் கைக்கொண்டவன்; பரதவர் படையுடையோன். இவன் நகராகிய மதுரையோ, ஆழ்கிடங்கு சூழ்ந்தது; மேகமுலாவு மாடமுடையது; மாந்தர் இடையறாது வழங்கும் அடையா வாயிலது; பல மொழியினர் நாற்றிசையினின்றும் வந்து வாணிகம் செய்யும் கடை வீதியுடையது; யானை, தேர், புரவி, காலாட்படையினர் இடையறாது தெருக்களினூடுலாவும் பெருமையது; பற்பல வகையினவாய மோதகம், பணியாரம் விற்கும் கடைகளுடையது; எண்ணிறந்த வகையினரும் தொழிலினரும் நிறைந்திருக்கும் சிறப்பினை யுடையது. அதன் தெருக்கள் ஆறு கிடந்தென்ன அகன்று நீண்டன. தெருக்கள்தோறும் விழாக் கொடிகள், வெற்றிக் கொடிகள் முதலிய நுடங்குவன. அவற்றில் மாலை வேளைகளில் பூமாலை, கதம்பம், வாசனைச்சுண்ணம், களிப்பாக்கு, வெற்றிலை, சங்குச்சுண்ணும்பு முதலிய நுகர்பொருள்கள் விற்பாரும், அந்திக் கடையில் ஆடையாதிகள் விற்பாரும் நெருங்கியிருப்பர். இத்துணை வளஞ்செறிந்தது மதுரை. இத்துணைப் பெருமையும் வீரமும் செல்வமும் பொருந்தியவன் நெடுஞ்செழியன். எனினும் இவன் தன் வாழ்வும் ஏனைச் செல்வங்களும் நிலையற்றனவென்பதையும் ஓர்ந்து தன்னைப் போல்வாரும் தன்னின் மிக்காருமாய் இந்நகரிடைத் தொன்றுதொட்டு அரசு புரிந்தாரில் எவரும் இம்மையில் நில்லாராய் மறுமை சென்றனர் என்பதை யுன்னித் தன்னிலைமையும் அற்றே என்பதனை யுணர்ந்து நன்ருற்றி நற்கதியடையுமாறு தூண்டப்படுகின்றனன். பண்டைநாட் பாண்டியர் பெருமையையும் மதுரையின் அந்நாட் சிறப்பையும் அறிதற்கு இப்பாடல் மிகவும் உதவியாயிருப்பது.

கொற்கையில் முத்துக் குளித்தல் உண்டென்பதை,

"விளைந்து முதிர்ந்த விழுமுத்தின்
இலங்குவளை யிருஞ்சேரிக்
கட்கொண்டிக் குடிப்பாக்கத்து
நற்கொற்கை......................" (135–138)

[சூல் முற்றி ஒளி முதிர்ந்த சீரிய முத்தினையும் விளங்குகின்ற சங்கினையுமுடைய பெரிய சங்குகுளிப்பா ரிருப்பினையும், கள்ளா கிய உணவினையுடைத்தாகிய இழிந்த குடிகளையுடைய சிற்றூர் களையுமுடைய நன்றாகிய கொற்கை] என்பதால் அறியலாம்.

யவனர் தேசத்திலிருந்து குதிரை வந்த செய்தியை,

" விழுமிய நாவாய் பெருநீ ரோச்சுநர்
நனந்தலைத் தேஎத்து நன்கல னுய்ம்மார்
புணர்ந்துடன் கொணர்ந்த புரவி........" (321-323)

[சீரிய மரக்கலங்களைச் செலுத்தும் மரக்கல மீகாமர் அகன்ற இடத்தையுடைய யவன தேசத்தினின்றும், இவ்விடத்துண்டாகிய பேரணிகலன்களை ஆண்டுச் செலுத்துதற்குப் பலருங்கூடிச் சேரக் கொண்டுவந்த குதிரைகள்] என்பதால் அறியலாம்.

" நன்றும் தீதும் கண்டாய்ந் தடக்கி
அன்பும் அறனும் ஒழியாது காத்துப்
பழியொரீஇ யுயர்ந்து பாய்புகழ் நிறைந்த
செம்மை சான்ற காவிதிமாக்கள் " (496-499)

[அரசனிடத்துள்ள நன்மையும் தீமையும் நெஞ்சத்தாலே கண்டு அத்தீங்குகளை ஆராய்ந்து அவற்றிலே ஒழுகாமல் அடக்கிச் சுற்றத்திடத்துச் செல்லும் அன்பும் எவ்வுயிர்க் கண்ணும் நிகழும் தருமமும் ஒரு காலமும் போகாமல் தம்மிடத்தே பரிகரித்துப் பழி தம்மிடத்து வாராமல் நீக்கி அதனாலே ஏனையோரினும் உயர்ச்சி யெய்திப் பரந்த புகழ் நிறைந்த தலைமையமைந்த காவிதிப்பட்டங் கட்டின அமைச்சர்.]

என்று இந்நூலில் அழகுறக் கூறப்பெறும் அமைச்சரிலக்க ணம் எக்காலத் தமைச்சர்க்கும் இன்றியமையாததன்றோ!

அறுத்தசங்கை வளை முதலியனவாகக் கடைவாரும், அழகிய மணிகளைத் தொளையிடுவாரும், சுடுதலுற்ற நன்றாகிய பொன்னை விளங்கும் பணிகளாகப் பண்ணும் தட்டாரும், பொன்னையுரைத்த உரையை அறுதியிடும் பொன்வாணிகரும், புடவைகளை விற் பாரும், செம்பு நிறுக்கப்பட்டதனை வாங்கிக் கொள்வாரும், கச்சுக் களைத் தம் தொழில் முற்றுப் பெற முடிவாரும், பூக்களையும் சாந் தையும் நன்றாக ஆராய்ந்து விற்பாரும், பலவகைப்பட்ட கூரிதாக வுணர்ந்த தொழில்களையும் ஒப்புக்காட்டும் கூரிய அறிவினையுடைய சித்திரகாரிகளும், அப்ப வாணிகரும் ஆகிய நாகரிகத் தொழிலினர் இந்நூலில் (511-518) சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளனர்.

இம்மதுரைக் காஞ்சியிற் காணப்படும் நெல்விளைவு (111), மீன்பட்கு (116), உப்பு விளைவு (117), கரும்பாலை (258), குழி வெட்டிப் பன்றி வீழ்த்தல் (294), அரத்தால் அறுத்த வளையல்கள் (316), பகற்கடைவீதி அந்திக்கடைவீதி (365), குதிரை பழக்கும் வட்டம் (390), ஏழாந் திருவிழாச் சிறப்பு (427), சிவப்புச் சேலை (433), சோறிடு சாலைகள் (535), மிருகக் காட்சிச்சாலை (677), தங்கத்தில் அழுத்திய கல்நகை (704) முதலியனவும், பிறவும் இற்றைக்கு இரண்டாயிரம் வருடத்தின் முன்னரே தமிழ் மக்கள் அடைந்த நனி நாகரிகம் இத்தன்மைத்தென்று உணர்த்துவனவாம்.

7. நெடுநல்வாடை: இது 188 அடிகளையுடையது. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாட்டுடைத்தலைவனாகக்கொண்டு மதுரைக் கணக்காயனார்மகனார் நக்கீரனாரால் இயற்றப்பட்டது. கார்காலத்து மழை பெய்து குளிர் மிக்கதோர் நள்ளிரவில் போர்மேற் சென்று பாசறையில் தங்கியிருக்கும் தன் கணவனின் பிரிவாற்றாமல் வருந்தியிருந்த பாண்டியன் மனைவியைத் தேற்றற்பொருட்டு அவள் சிலதியர், அரசன் பாசறைத் தொழில் இன்றே முடிவதாக எனக் கொற்றவையைப் பரவியதாகப் பாடப்பட்டது. இதனிடை விரிக்கப் பட்டுள்ள கூதிர்க்கால வருணனை, தலைவனைப் பிரிந்த தலைவியின் நிலைமை, சிற்பநூல் வல்லோர் அமைத்த அந்தப்புர அமைப்பு, அரசியின் கட்டில்வனப்பு, போர் முனையில் அமர்ந்திருக்கும் அரசன்செயல், புண்பட்ட வீரரை அவன் நேரிற்சென்று பார்த்து மகிழ்விக்கும் முறை முதலியன படிப்போர் மனத்தைத் தம்வயமாக்கும் இயல்பின. நக்கீரர் செய்யுளின் சிறப்பும் அவர் இயற்கைவனப்புகளைக் கூறும் முறையும் வியக்கத்தக்கன.

8. குறிஞ்சிப்பாட்டு: இது 261 அடிகளை யுடையது. இதனைப் பாடியவர் கபிலர். ஆரியவரசன் பிரகத்தனைத் தமிழறிவித்தற்பொருட்டு இதனைப் பாடினார். தோழியுடன் தினைப் புனங் காவலுக்கேகிய தலைவி அங்கே அருவி குடைந்தும், மலர் பறித்தும், தழைகோத்துடுத்தும் விளையாடாநிற்க, ஊழ்வயத்தால் ஆண்டுச் சென்ற ஓர்விடலை, அவளை அவள் தோழியுடன் எதிர்ப்பட்டு மெல்லென்ற நன்மொழி சில கூறவும், அவள் நாணமிக்குற்று வாளாவிருந்தனளாக, அவ்வளவில், ஆண்டுத் திரிந்த யானையால் வெருண்டு நாண் துறந்து அவ் விளவலைக் கிட்ட, அவன் யானையைத் துரத்தி அவளைத் தோழியுடன் கொண்டேகி, அவர் ஊர்ப்புறத்தே விட்டு, விரைவில் அவளை மணமுடிக்க வரைவு கடாவுவதாய்ச் சொல்லிச் சென்று காலம் நீட்டித்தனனாக, அவள் மனம் வருந்தி

உடல் மெலிந்து நைய, உண்மை அறியாத அவள்தாய், மகள் ஏதோ 'பேய்க்கோட்பட்டாள்' என ஐயுற்று நிமித்தம்பார்த்தும், பலியிட்டும் மகள் தன் வாட்டந் தவிர்ந்திலளாகவே, ஆற்றக் கவன்றுழித் தோழி நிகழ்ந்த காரியத்தைத் தாய்க்குரைப்பதாகப் பாடப் பெற்றது. அகத்திணை இலக்கணத்திற்கு இஃதோர் சிறந்த சிற்றிலக்கியம்போலும். கபிலர் குறிஞ்சி பாடுதலில் வல்லவர் என்பது அவர் பாடிய பிற பாடல்களிலிருந்தும் தெற்றெனவிளங் கும். அவற்றை ஐங்குறுநூறு, கலித்தொகை முதலிய பிற சங்க நூல்களிற் காணலாம்.

**9. பட்டினப்பாலை:** இது 301 அடிகளையுடையது. இதை இயற்றியவர் கடியலூர் உருத்திரங்கண்ணனூர். பாடப்பட்டவன் கரிகாற்சோழன். இதிற் காவிரிப்பூம்பட்டினம் சிறப்பிக்கப் பட்டுள்ளது. கரிகாலன் தன்னைச் சிறைசெய்தாரைத் தப்பிப்போய், அவரை வென்று தன்னுரிமையைப் பெற்று, அவ்வளவில் அமையா மல் மண்ணசைமிக்குப் பிறநாடுகளின்மேற் படையெடுத்துச் சென்று பகையரசரை வென்று அவர் நாடுகளை யழித்து அம்பலங் களைப் பாழ்படுத்துத் தன் நாட்டிலுள்ளார் என்றும் ஏதும் குறை யின்றி இனிது வாழக் குளந்தொட்டு நாடுதிருத்திப் பலர்க்குப் பல்வேறு சிறப்புக்களைச் செய்தவன். அவன் பட்டினமோ காவிரி கடலொடுகலக்கும் இடத்ததாய்ப் பல்வளஞ் செறிந்தது. மீன் பிடிக்கும் செம்படவர், அறவொழுக்கம் தப்பாமே எவர்மாட்டும் அன் புடன் ஒழுகும் நேர்மையாளராம் வேளாளர், வேதமோதும் அந்த ணர், வணிகர், மற்றும் எண்ணிறந்த தொழிலாளர் நிறைந்தது. எண்ணுவோர் எண்ணுவனவெல்லாம் எண்ணியபோதே கொள்ளு மாறு, தரை, கடல் ஆகிய இருவழிகளிலும் வந்துள்ள பண்டங்கள் நிறைந்த கடைவீதியுடையது. பண்டகசாலைகளையுடைய கடற் கரை வீதியிலோ ஏற்றுமதி இறக்குமதிச் சரக்குக்கள் சோழன் புலிமுத்திரை பொறிக்கப்பட்டு மலையெனக் குவிந்திருக்கும். இத்துணைச் சிறப்புவாய்ந்த காவிரிப்பூம் பட்டினத்தையே தனக் குப் பரிசிலாகப் பெறினும் தன் காதலியை விட்டுப் பிரிதற்கு ஒருப்படாத உள்ளத்தனை ஒரு தலைமகன் அவளைப் பிரிந்து போம் கானம், கரிகாலன் பகைவர்மேல் ஏவிய வேலினும் கொடி யது; அவளுடனிருத்தல் கரிகாலன் செங்கோலினும் குளிர்ச்சி வாய்ந்தது எனக் கூறும் பொருள்முடிவு கொண்டது. இதனுள் அந்நாட்டு வரலாற்றுக்குறிப்பு, அரசாட்சிஉயர்வு முதலியன ஆங்காங்கே கூறப்பட்டுள்ளன.

**10. மலைபடுகடாம்:** இது 583 அடிகளையுடையது. இதனை

இயற்றியவர் இரணியமுட்டத்துப் பெருங்குன்றூரைச் சேர்ந்த பெருங்கௌசிகனூர் என்பவர். பாடப்பட்டவன் பல்குன்றக் கோட்டத்துச் செங்கண்மாத்துவேள் நன்னன்மகன் நன்னன். பரிசில் பெறவரும் கூத்தன்ஒருவனைப் பரிசில் பெற்றவன் ஒருவன், செங்கண்மாவை ஆண்ட நன்னனிடத்தே ஆற்றுப்படுத்தியதாக அமைந்துள்ளமையின் இப்பாடல் கூத்தராற்றுப்படை எனவும் வழங்கும். இதனிடை நன்னனைக் காணச் செல்லும் கூத்தன் நன்னனுடைய ஊரை அடைதற்குரிய வழிகளின் நன்மை தீமையினதளவு, அவன் அங்கங்குப் பாடவேண்டிய பண், இடையிற் றங்கும் இடங்கள், இடையூறு நேர்ந்தால் தப்பும் வழி, அவ்வந்நாட்டில் விளைகின்ற உணவுப் பொருள்கள், மலை சோலைகளின் தன்மை, நன்னன், தன்னிடம் வந்த பரிசிலர்க்குப் பரிசில் கொடுத்து விடுக்கும் திறம், ஈகையின் வன்மை, அவன் சுற்றத்தார் ஒழுக்கம், அவனுடைய நவிரமலையின் சிறப்பு, அம்மலையில் எழுந்தருளியிருக்கும் காரியுண்டிக்கடவுளியல்பு, ஊரின் பெருமை தன்மைகள், குடியினர் தோற்றம் முதலியன விளக்கப்பட்டுள்ளன.

இச் செய்யுளில், மலைச்சாரலின் வளமும், குறிஞ்சி முல்லை மருத நிலமக்கள் இயல்பும், அவர்கள் தம்மிடம் வரும் விருந்தினரை உபசரிக்கும் திறமும், பல்வகை இசைக் கருவிகளின் பெயர்களும், யாழின் சிறப்பும் இனிது விளக்கப்பட்டுள்ளன. செங்கத்திலிருந்து புறப்பட்டு அண்மையிலுள்ள மலையடிவாரம் நெடுகச் சுற்றி வந்து, மலைமேலும் ஏறிச் சென்று மலை நாட்டு வளத்தை அறிந்த ஒருவர், இம்மலைபடுகடாத்தில் வந்துள்ள மலைவள வருணனையை நன்கு உணர்ந்து இன்புறுதல் கூடும்.

சுருங்கக் கூறின், இப்பத்துப் பாடல்களும், தமிழக வரலாற்றையும் தமிழர் பண்பாடுகளையும் அறியப் பெருந்துணை செய்யும். இவை, பிற்காலச் செய்யுட்போக்குக்களின் மிகமாறுபட்டுப் பெரும்பாலும் கற்பனை முதலியன இல்லாதனவாய்க் கண்டவற்றைக் கண்டவாறே கூறுமியல்பின. அந்நாள் இலக்கணங்களுக்கு இலக்கியமாக விளங்கியவை. உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் இந்நூலுக்குச் சிறந்ததோர் உரை கண்டுள்ளார்.

---

## திருக்குறள்*

இனி, திருக்குறளைப்பற்றிச் சில கூறுவேன். இதனை, கி. பி. முதல் நூற்றுண்டில் இயற்றப்பட்ட நூலாகக்கொள்ளலாம். இந்நூல் அரங்கேற்றப்பட்டது மதுரையில் உக்கிரப்பெருவழுதி அரசாண்டிருந்த காலமாகும். அவ்வரசன் காலம் கி. பி. 50-ஆம் ஆண்டாக இருக்கலாம். பிறவழியானும் இவ்வுண்மையை வற்புறுத்தலாம். என்னை? சிலப்பதிகாரம் பாடினவர் சேரன் செங்குட்டுவனின் இளவலாகிய இளங்கோவடிகள். இவர் காலமும் கி. பி. இரண்டாம் நூற்றுண்டாகவேயிருக்கலாம் எனக் கருதப்படுகிறது. சிலப்பதிகாரம் பாடிய இளங்கோவடிகளும், மணிமேகலைபாடிய சீத்தலைச்சாத்தனுரும் ஒருகாலத்தவர் என்பது சிலப்பதிகாரப் பதிகச் செய்யுளாலும் சிலப்பதிகாரப் பிற பகுதிகளாலும் வெளியாகின்றது. அன்றியும் இளங்கோவடிகள் பாடிய சிலப்பதிகாரம் சாத்தனுர் முன்னிலையினும், சாத்தனுர் பாடிய மணிமேகலை இளங்கோவடிகள் முன்னிலையினும் அரங் கேறின வென்பது,

> " உரைசா லடிக ளருள மதுரைக்
> கூல வாணிகன் சாத்தன் கேட்டனன் " (88-89)

எனும் சிலப்பதிகாரப் பதிகச்செய்யுளடிகளானும்;

> " இளங்கோ வேந்த னருளிக் கேட்ப
> வளங்கெழு கூல வாணிகன் சாத்தன்
> மாவண் டமிழ்த்திற மணிமேகலை துறவு
> ஆறைம் பாட்டினுள் அறியவைத் தனனென் " (95-98)

எனும் மணிமேகலைப் பதிகச் செய்யுளடிகளானும் தெரிய வரும்.

இவ் விரு நூல்களில் மணிமேகலையே சிலப்பதிகாரத்தின் முன்னர் எழுதப்பட்டது. இதனை அடியார்க்கு நல்லாரே கூறினர். என்னை? 'மணிமேகலை துறந்தாள் என்பதுணர்ந்து அத்துற வினைப் பின்வைத்து அதனோடு நாற்பொருளும்பூரித்துப் பெருங் காப்பியமாக முடித்தலைக்கருதி, அடிகள் சாத்தனுருக்கு இவ்வுரையை யுரைத்துழி, அவர் மணிமேகலை பெயரால் அவள் துறவே துறவாக அறனும் வீடும் பயப்ப ஓர் காப்பியஞ் செய்து அமைத்தனர் எனக்கேட்டு, அவ்வடிகள் விரும்பி இவ்விரண்டினை

* திருக்குறள். இங்கிலீஷ், பிரஞ்சு, ஜர்மன், லத்தீன், தெலுங்கு மலையாளம் முதலிய பல மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டது.

யும் ஒரு காப்பியமாக்கி உலகின்கண் நடாத்துவான் வேண்டவும், இருவர் செய்தலின் இரண்டாக நடந்தன வென்க' என்றாராகலின்.

மணிமேகலை இயற்றப்பட்ட காலத்திலேயே திருக்குறள் உலகில் பலராலும் ஒப்புக்கொள்ளத்தக்கதோர் உறுதிநூலாய் விளங்கிய தென்பதும், அதனைப்பாடிய திருவள்ளுவனார் தெய்வப் புலவராகப் பாராட்டப் பட்டனரென்பதும் மணிமேகலையில்,

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்" (22 : 59-61)

எனக் கூறப்படும் அடிகளிலிருந்து விளங்குகின்றன. ஏனெனில் இவ்வடிகள் திருவள்ளுவர், இல்லறவியல்—வாழ்க்கைத் துணை நலம் எனும் பகுதியில் உரைத்த குறளேயாதலினாலும் 'பொய்யில் புலவன்' என்பதனாற் குறிக்கப்பட்டவர் திருவள்ளுவரேயாதலி னாலும் என்க.

இங்ஙனமாகக் குறளும் அதனைப் பாடிய திருவள்ளுவரும் உலகினராற் பாராட்டப்படுதற்குக் குறள் இயற்றப்பட்டுக் குறைந்தது அரைநூற்றாண்டளவேனும் சென்றிருக்கவேண்டும். இவற்றையெல்லாம் நோக்குமிடத்து, திருக்குறள் இயற்றப்பட்ட காலம் கி. பி. முதல் நூற்றாண்டெனக் கொள்வது தவறாகாது.

இந்நூல் இயற்றப்பட்டு ஏறக்குறைய இரண்டாயிரம் யாண்டு கள் கழிந்தன. இதற்கிடையே தோன்றி மறைந்த நூல்கள் பல. எனினும் இக்குறள் அன்றேபோல் இன்றும் சிறப்புடன் விளங்கு கின்ற நூலாயிருக்கிறது. உலகில் தற்கால நாகரிக மொழி என வழங்கும் ஒவ்வோர் மொழியிலும் இதனை மொழி பெயர்த்துப் படிக்கின்றனர் என்பதும் இந்நூலின் பெருமையை விளக்கும். 'ஆலும் வேலும் பல்லுக்குறுதி, நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி' எனும் பழமொழியும், குறள் இக்காலத் தமிழ்மக்களால் எத்துணை யளவு மேலான நூலாகக் கருதப்படுகின்ற தென்பதைக் காட்டும். திருக்குறளின் பெருமையினையும் அதனை இயற்றிய திருவள்ளுவர் பெருமையினையும் விதந்து பாராட்டும் பாடல்களைத் 'திருவள்ளுவ மாலை' என வழங்குவர். திருவள்ளுவமாலையில் வழங்கும் செய்யுட்களைப் பாடியோர் பலரும் ஒரு காலத்தவரல்லராதலால், பற்பல புலவர் பல காலங்களிற் பாடிய செய்யுட்களையே பிற்காலத் தவர் 'திருவள்ளுவமாலை' யெனத் தொகுத்தனர் எனக் கொள்வதே சாலவும் பொருந்தும்.

திருவள்ளுவமாலையில் பாண்டியன் உக்கிரப்பெருவழுதி கூற்ருக அடியில் வரும் வெண்பாக் காணப்படுகின்றது.

" நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன்
தான்மறைந்து வள்ளுவனுய்த் தந்துரைத்த—நூன்முறையை
வந்திக்க சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சஞ்
சிந்திக்க கேட்க செவி " (4)

இதன்பொருள்: பிரமதேவன் தன் உருவை மறைத்து வள்ளுவஞர் உருத்தாங்கி உலகில் தோன்றி நான்கு வேதங்களினும் கூறப்பட்ட உண்மைப்பொருள்களை யெல்லாம் அறம் பொருள் இன்பமெனும் மூன்று பொருட்பகுதிகளாக்கிக் குறள் எனும் நூலினுல் உரைத்தாஞதலின் அந்நூலினை எனது செவி, நெஞ்சம், வாய், தலை என்பன கேட்டுச் சிந்தித்துப் புகழ்ந்து வணங்கக் கடவன என்பது.

வையகத்தார் நினைப்பன எல்லாவற்றையும் வள்ளுவர் தம் குறளினுல் அளந்துரைத்தார் எனவும், திருக்குறள் தமிழ் மூவேந்தர் முடிகள் மேலும் சூட்டத்தக்க மாலையெனவும், திருக் குறளைப் படித்தவர் வேறுநூல் படித்தல் வேண்டுவதின்றெனவும், ஆரியமொழியும் தமிழும் முறையே வேதங்களையும் குறளையும் உடைமையின் ஒத்தனவெனவும், திருக்குறள் நினைக்குந்தோறும் மனத்தை உருக்குமெனவும், எல்லாப்பொருளும் இதன்பால் உண்டு; இதன்பால் இல்லாத பொருள்கள் இல்லை யெனவும், பூமேற்புலவர் திருவள்ளுவர் ஒருவரே எனவும், பாவில் வள்ளுவர் வெண்பாவே சிறந்ததெனவும், வள்ளுவர் பாட்டின் சுவைக்குத் தெள்ளமுதின் தீஞ்சுவையும் ஒவ்வாதெனவும் புலவர் பலபடப் பாராட்டித் திருவள்ளுவமாலையிற் புகழ்ந்துள்ளனர்.

ஒரு நாட்டுக்கும், அந்நாட்டுமக்களுக்கும், குறித்த ஓர் அரசுக்கு மன்றி உலக மக்கள் அனைவர்க்கும் பொருந்தும் வகையில் அறி வுரை கூறிச் செல்லும் இந்நூல், உலக இலக்கியங்களில் தலையாயது என்று கூறுவதில் தடை உண்டோ ? மிகச் சிறந்த கருத்துக்களை இரண்டே அடிகளையுடைய குறட்பாவில் சுருங்கச்சொல்லி விளங்க வைக்கும் திறன் திருவள்ளுவர்க்கே உரியது.

சங்கநூல்களுள் இவ் வொருநூலையன்றே புலவர் பலர் பாராட்டித் திருவள்ளுவமாலை சூட்டியுள்ளனர். அன்றியும், பரிமே லழகர் முதலிய பண்டைத் தண்டமிழ்ச் சான்றேர் பதின்மரால் உரைவரையப்பட்ட பெருமையும் இவ்வொருநூலுக்கே தனிச் சிறப் பாயமைந்ததன்றே ! அன்றும் பல்லோர் பாராட்டுக்குரியதாய்

இன்றும் ஜி. யூ. போப் முதலிய மேனாட்டார் பாராட்டுக்கும் நமது பாராட்டுக்கும் உரியதாய் விளங்குவது இவ்வொரு நூலேயன்றோ! இதன்பெருமையை நன்கறிந்தன்றோ காலஞ்சென்ற பாரதியார்,

'வள்ளுவன் றன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு'

என்று உளமாரப் பாராட்டினார்.

திருவள்ளுவரைப் பொய்யில்புலவர், செந்நாப்போதார், தெய்வப்புலவர், நாயனார் முதலிய பல்வேறு சிறப்புப் பெயர்களா லும், அவர் பாடிய திருக்குறளைப் பொய்யாமொழி, தமிழ்மறை, முப்பால், உத்தரவேதம் முதலிய சிறப்புப்பெயர்களாலும் வழங்குவர்.

சில ஆண்டுகட்குமுன்வரை தமிழ்ப் புலவர் மட்டும் திருக் குறளைப் படித்து வந்தனர். முன்னாள் அமைச்சர் திரு. அவிநாசி லிங்கனார் தூண்டுதலுக்குப் பிறகும் நற்றமிழறிஞர்களின் முயற்சிக் குப் பின்னரும் தமிழகத்திலுள்ள எல்லாப் பள்ளிகளிலும் மேடை களிலும் சங்கங்களிலும் திருக்குறள் கொலுவீற்றிருக்கின்றது என்று கூறுதல் பொருந்தும். இவ்வாறு அனைவரும் திருக்குறளைப் போற்றத் தொடங்கியதால் அறிஞர் பலர் திருக்குறளுக்குப் புத்துரையெழுதி வெளியிட்டு வருகின்றனர். இப்புத்துரையிற் சில தவறுகள் இருக்கலாம். கருத்துவேறுபாடுகள் இருக்கலாம். எனி னும் இம்முயற்சி வரவேற்கத்தக்கது.

குறள் என்பது வெண்பா வகையுள் ஒன்று. அது நாற்சீரடி யொன்றும் முச்சீரடியொன்றும் ஆகிய இரண்டடியானியன்றது. குறள்வெண்பாவின் பெயர் அவ்வெண்பாவினால் இயற்றப்பட்ட நூலுக்காயிற்று. இனி, குறள்போல்வது; ஆதலிற் குறள் எனப் பட்டது எனினும் ஆம். குறள்—வாமனன். திரு என்பது சிறப்புக் குறித்துநின்றது.

திருக்குறள் பப்பத்துப் பாடல்கள் அமைந்த நூற்றுமுப்பத்து மூன்று அதிகாரங்களையுடையது. எனவே இந்நூற்செய்யுளின் தொகை ஆயிரத்து முந்நூற்று முப்பதாகும்.

இந்நூல் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று பேறுகளை யுணர்த்தும் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்னும் மூன்று பெரும் பிரிவுகளையுடையது. பொருட்பேறு நான்கனுள் வீடு முற்கூறப்பட்ட மூன்றின்வழியே சுட்டிக்காட்டப்பட்டு நிற் கின்றது.

இந்நூலின் அதிகாரப் பாகுபாடுகளை,

" வீடொன்று பாயிரம் நான்கு விளங்கறம்
நாடிய முப்பத்து மூன்றென்றாழ்—கூடுபொருள்
எள்ளி லெழுப திருபதிற் றைந்தின்பம்
வள்ளுவர் சொன்ன வகை " (20)

" பாயிரம் நான்கில் லறமிருபான் பன்மூன்றே
தூய துறவறமொன் றாழாக—ஆய
அறத்துப்பால் நால்வகையா ஆய்ந்துரைத்தார் நூலின்
திறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து " (25)

" அரசியல் ஐயைந் தமைச்சியல் ஈரைந்து
உருவல் லரணிரண்டொன் றொண்கூழ்—இருவியல்
திண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்
றெண்பொருள் ஏழாம் இவை " (26)

" ஆண்பாலே ழாறிரண்டு பெண்பா லடுத்தன்பு
பூண்பால் இருபாலோர் ஆறாக—மாண்பாய
காமத்தின் பக்கமொரு மூன்றாகக் கட்டுரைத்தார்
நாமத்தின் வள்ளுவனார் நன்கு " (27)

எனத் திருவள்ளுவமாலையில், சிறுமேதாவியார், எறிச்சலூர் மலாடனார், போக்கியார், மோசிகீரனார் என்பவரால் பாடப்பட்டனவாகக் காணப்படும் வெண்பாக்களால் அறியலாம்.

முதல் நான்கு அதிகாரங்கள் பாயிரம் எனப்படும். அவை முறையே கடவுள் வாழ்த்தும், உலகினுக்கு இன்றியமையா மழைச் சிறப்பும், இம்மை மறுமைகட்கு இன்றியமையாத நால்வகைப் பொருட்பேறுகளுள் சிறந்த அறத்தையே பூண்ட நீத்தார்தம் பெருமையும், அவரால் போற்றப்படும் அறத்தின்சிறப்பும் உரைப்பன.

**அறத்துப்பால்:** இல்லறவியல், துறவறவியல் என இரு பிரிவுகளையுடையது.

**இல்லறவியல்** ஐந்தாவது அதிகாரமாகிய இல்வாழ்க்கை முதலாகப் புகழ் ஈறாக இருபது அதிகாரங்களையுடையது. இவ்வதிகாரங்களிடையே வள்ளுவர் கூறும் அமுதமொழி அவரது உலக அனுபவத்தை யுரைப்பன மாத்திரமேயன்றி எவரும் எக்காலத்தும் வியந்து மகிழ்ந்து தமதாக்கிப் பயனடையத் தக்க உறுதிமொழிகளேயாம்.

" அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது." (5 : 5)

" தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்." (6 : 6)

" குழலினிது யாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்." (7 : 6)

" அறத்திற்கே யன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கு மஃதே துணை." (8 : 6)

" இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது." (10 : 9)

" பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கின்
நன்மை கடலிற் பெரிது." (11 : 3)

" யாகாவா ராயினும் நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு." (13 : 7)

" நன்றே தரினும் நடுவிகந்தா மாக்கத்தை
யன்றே யொழிய விடல்." (12 : 3)

" ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்." (16 : 6)

" அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்." (17 : 8)

" சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்." (20 : 10)

" தீயவை செய்தார் கெடுதல் நிழறன்னை
வீயா தடியுறைந் தற்று." (21 : 8)

" அற்று ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி." (23 : 6)

இக் குறட்பாக்களிற் பொதிந்துள்ள நீதி சாரங்களின் பெருமை யிருந்தவா றென்னே ! சொல்லற்கரியனவாம்.

துறவறவியல், அருளுடைமையெனும் 25-ஆம் அதிகாரமுதல் அவாவறுத்தல் எனும் 37-ஆம் அதிகாரம் ஈறுயுள்ள பதின்மூன் றதிகாரங்களையுடையது.

தன்னின் மெலியாரை வருத்த எண்ணுமொருவன் தன்னினும் வலியா னொருவன் தன்னை வருத்தும்போது தானிருக்கும் நிலைமையை நினைக்கக் கடவன். (25 : 10)

உயர்ந்தவர்களால் குற்றமுடையனவென விலக்கப்பட்டவை களை ஒருவன் செய்யாமல் நல்வழியில் நடப்பானேல் அவன் மறுமைப்பயன் பெறுதற்பொருட்டுத் தலைமயிரை மழித்தலும் சடையாக்கலுமாகிய தவ வேடம் தரிக்க வேண்டியதில்லை. (28 : 10)

உடலுக்குத் தூய்மை தருவது நீர், மனதுக்குத் தூய்மை தரு வது மெய்யுரைத்தலாம். (30 : 8)

தனது கோபம் செல்லமாட்டாத வலியார் மீது சினங்கொள்ளு தல் தீது. தம்மின் எளியார் மீது சினங்கொள்வதோ அதனினும் தீதேயாம். (31 : 2)

முற்பகலில் பிறர்க்குத் தீமைசெய்தால், தனக்குத் தீமை பிற் பகலே வந்துவிடும். (32 : 9)

உலகின்பெருமை யென்ன? நேற்றிருந்தான் இன்றிறந்தா னென்பதே. (34 : 6)

இக்கருத்துக்கள் அடங்கிய குறட்பாக்களை மக்கள் கற்றுணர் வரேல் உலகின் ஒழுக்கநிலை உயர்ந்துவிடுமெனற் கையமுண்டோ?

முப்பத்தெட்டாம் அதிகாரம் 'ஊழ்' என்பதைக் குறிப்பது. காரியங்கள் தெய்வத்தின் வரையறைப்படி நிகழும் என்பதை இவ் வதிகாரம் கூறும்.

பொருட்பால்: பொருள் இம்மைக்கும் மறுமைக்கும் உதவியா யிருப்பது. வள்ளுவர்காலத்து அரசியலறிவை—நம்முன்னோர் களுடைய பண்பட்ட அரசியலறிவைப் பொருட்பாலில் அறிந்து இன்புறலாம். பொருட்பாற் பகுதிகளை ஐந்து இயல்களாக எழுபது அதிகாரங்களான் வகுப்பர். அவற்றுள் :—

அரசியல் என்பது இறைமாட்சியாகிய முப்பத்தொன்பதாம் அதிகாரம் முதல் 'இடுக்கணழியாமை' எனும் அறுபத்துமூன்றும் அதிகாரம் வரையுள்ள இருபத்தைந்ததிகாரங்களான் உரைக்கப்பட் டுள்ளது. இவற்றுள் அரசன்சிறப்பு, அரசனுக்கு இன்றியமை யாதனவாகிய கல்வி, கேள்வி, அறிவுடைமை, அவன்பால் அமைய வேண்டிய ஒழுக்கம், கூட்டுறவு, அவன் அரச காரியங்களைத் தெள்ளிதின் உணர்ந்து காலம், இடம், செயல்களின் மூலம் அவற்றின் விளைவு முதலியவற்றை ஆராய்தல், பிற அரசர்மாட் டொழுகும் இயல்பு, தன் குடிகளிடத்தும் தன்னையடுத்தாரிடத்தும் நடந்துகொள்ளும் முறை, நல்லாரைப் பாதுகாத்தல், குற்றஞ் செய்வாரைத் தண்டித்தல், அவனுக்கு இருக்கவேண்டிய பிற

இலக்கணங்கள் ஆகியவை விரிவாக உரைக்கப்பட்டுள்ளன. அரசாளும் இக்கால அமைச்சரும் திருக்குறளில் இப்பகுதியைக் கற்றுப் பெரிதும் பயனடையலாம்.

அங்கவியல் : அரசுபுரிதற்கு அங்கமாவன ஆறு : அவை முறையே அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பு எனப்படும்.

அறுபத்துநான்கு முதல் எழுபத்து மூன்று முடிய அமைச்சனின் இயல்பு உரைக்கப்பட்டுள்ளது.

" பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்லது அமைச்சு." (64 : 3)

[போர் முதலிய காரணங்கள் நேர்ந்தவழித் தம் பகைவர்க்குத் துணையாயினரை அவரிடத்திலிருந்து பிரித்து விடுதலும், தம் பக்கத்தைச் சார்ந்தவரைக் கொடை, இன்சொல் முதலியவற்றால் பேணிக்கொள்ளுதலும், தம்மைவிட்டுப் பிரிந்திருப்பவரை மீண்டும் தம்மோடு பொருந்தும்படி செய்தலும் வல்லவனே அமைச்சனுவான்.]

" ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை." (66 : 6)

[தன் தாயானவள் பசித்திருத்தல் காணச் சகியாது அப் பசியைக் களைதற்பொருட்டும் அறிவுடையார் பழிக்கும் வினைகளைச் செய்யலாகாது.]

" கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது
தூக்கங் கடிந்து செயல்." (67 : 8)

[மனந்தெளிந்து செய்வதாகத் தீர்மானித்த எக்காரியத்தையும் பின்னிடுதலும் தாமதமுமின்றிச் செய்யவேண்டும்.

" அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு." (69 : 4)

[பிறர்நாடுகளுக்குத் தூதுவராகவோ வேறெப்பொருட்டோ மாற்றரசரிடம் செல்வோர் இயற்கையாகிய அறிவும் கண்டார் விரும்பும் அழகிய தோற்றமும் தீர்ந்த கல்வியு முடையராயிருத்தல் வேண்டும்.]

" அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்." (70 : 1)

" செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுகல்
ஆன்ற பெரியா ரகத்து." (70 : 4)

[அரசரை விட்டுச் சேய்மையின் நீங்காமலும் அவரிடம் மிகவும் நெருங்கிப் பழகாமலும் நெருப்பினில் குளிர்காய்பவர் போன் றிருக்க; அரசன் முன்னிலையில் மந்திரி நகையாமலும், கூட விருப்பவரிடம் இரகசியம் பேசாமலும் இருக்கக் கடவன்.

" பழையம் எனக்கருதிப் பண்பல்ல செய்யும்
கெழுதகைமை கேடு தரும்." (70 : 10)

[அரசன் நம்மோடு நெடுநாட் பழகியவன், ஆதலின் ஏதோ குற்றம் செய்யினும் பொறுத்துக்கொள்வான் என நினைத்து நடக்கும் அமைச்சன் கேடடைவது உறுதியாம்.]

" பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையுள்
நன்கு செலச்சொல்லா தார்." (73 : 8)

[நல்லவர் சபையின்கண் குற்றமறச் சொல்லாதவர் கற்றும் கற்றிலரே யாவார்.] என்பவை அமைச்சர் முதலியோரால் நன் கறிந்து நடைமுடையிற் கொள்ளத்தக்கன.

அடுத்த மூன்றதிகாரங்கள் நாடு, அரண், அரசிறை முதலிய வற்றைக் குறிப்பன.

" உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு." (74 : 4)

[குடிகள் பசியின்றி உண்ணுதற்கேற்ற வளமுடையதாயும், தீராத நோய்க்கிடமாவதன்றுயும், பகைவர் படையெடுப்புக்கிட மின்றிக் காக்கப்பட்டதாயு மிருப்பதே நாடாகும்.]

" கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார்
நிலைக்கெளிதாம் நீர தரண்." (75 : 5)

[பகைவர் கொள்ளுதற்கரிதாய்ப் பலவகை யுணவுகளை உள்ளே யுடையதாய்த் தன்னுள்ளிருப்பவர் போர் செய்வதற்கெளிதா யிருப்பது அரணாகும்.]

" உறுபொருளு முல்கு பொருளுந்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்." (76 : 6)

[உடையாரின்மையிற்றனே வந்துசேர்ந்த பொருளையும், சுங்க மாகிய வரியையும், தன் பகைவரைத் தெறுதலால் திறையாக வரும்

பொருளையும் தன் பொருளாகக் கொள்வான்.] என்னுங் குறட் பாக்கள் குறிப்பிடத்தக்கன. அடுத்துப் படையைப்பற்றிக் கூறப் படுகின்றது.

" மறமான மாண்ட வழிச்செலவு தேற்றம்
எனநான்கே யேமம் படைக்கு." (77 : 6)

[வீரமும், மானமுமுடையராய் வீரர் மரபினுள்ளவருடைய வீர வழியில் நடக்க முயலுனராய் அரசனால் நம்பப்படத்தக்கவருமா யிருப்பார்.]

" கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்." (78 : 4)

[தன் கையிலிருந்த வேலைத் தன்னை எதிர்த்து வந்த யானை யின்மீது எறிந்து குத்தியபின் பிறிதோர் யானையின்மீது எறியக் கையில் வேலில்லாமல் வருந்துபவன் தன் மார்பிலேயே பகை வீரனால் எறியப்பட்ட வேல் குத்துண்டிருப்பதைக் கண்டு தனக்கு வேலகப்பட்டதெனக் களிக்கும் தன்மையனும்] என்பனவற்றால் படைவீரர் இயல்பை அறியலாம்.

பொருட்பாலில் எஞ்சிய எழுபத்தொன்பது முதல் நூற்றெட்டீ ருகவுள்ள முப்பது அதிகாரங்களுள் நட்பு குடியென்னும் இரு பொருள்கள் முறையே பதினேழு பதின்மூன்றதிகாரங்களில் விரித் துரைக்கப்பட்டுள்ளன. விரிவஞ்சிக் குறட்பாக்களை எடுத்துக் காட்டாது விடுகின்றேன்.

காமத்துப்பால் : மூன்றாவது காமத்துப்பால். இதில் அகப் பொருள்களைக் கூறும் முறை மிகச் சிறந்ததாகும். அகப்பொருளின் துறைகள் பலவற்றுள் உயிர் நாடியாக உள்ள மிகச் சில துறைகளை மட்டும் அடிப்படையாகக் கொண்டு, காதல் வாழ்க்கையைச் சித் திரித்துக் காட்டுவதே காமத்துப்பால். இதனுள் களவியலை ஏழு அதிகாரங்களானும், கற்பியலைப் பதினெட்டதிகாரங்களானும் கூறுவர். இவற்றுள் முதல் ஏழு அதிகாரங்கள் பெரும்பாலும் ஆண்பாற்கூற்றும் இடைப்பட்ட பன்னிரண்டதிகாரங்கள் பெண் பாற் கூற்றும், இறுதியான ஆறு அதிகாரங்கள் அன்பினாற் பிறக்கும் இருபாற் கூற்றுக்களுமெனலாம்.

உலகின் பயன்கருதி நூலியற்றிய வள்ளுவர் இக்காமத்துப் பாலையும் இயற்றித் தம் நூலைக் கறைப்படுத்தினரேயெனச் சிற் சிலர் குறைகூறக் கேட்டுள்ளேன். இத்தகையாருள் பலர் மேனாட்டுக் கலைகளைக் கணக்கற வோதினருமாவர். 'ஷேக்ஸ்பியர், ட்ரைடன் முதலிய மேனாட்டுக் கவிகளின் வருணனைகளைப் பாராட்

டும் இவர் தம் நாட்டுக் கவிகளிற் குறைகூறுவது தமிழ் செய்த தவக்குறைபோலும். காதலென ஒன்றில்லையாயின் உலகமே காடு போலாம் என்பதையும், அகப்பொருளை மிகவுயர்ந்த முறையில் கூறும் தலைசிறந்த நூல் திருக்குறள் என்பதையும் இவர்களுக்குக் கூறுவோம்.

" ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரு முட்குமென் பீடு." (109 : 8)

[பகைவரும் அஞ்சுகின்ற என்வலிமை இவள் முன்னிற்க வலியற்றது.]

" இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து." (110 : 1)

[இவள் கண்கள் இருவகையாக நோக்கவல்லன. ஒரு நோக்கினால் எனக்குக் காதல்நோய் உண்டாக்குகின்றாள், மறு நோக்கினால் அக்காதல் நோய்க்கே மருந்து செய்கின்றாளாதலின்.]

" கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனு மில." (110 : 10)

[காதல் கொள்ளும் ஆண், பெண் கண்கள் தாம் கருதியவற்றை உரைத்துக் கொள்கின்றன. அங்ஙனமாயின் அவர் தம் வாயால் பேச வேண்டியது முண்டோ?]

" உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியேன்
ஒள்ளமர்க் கண்ணாள் குணம் " (113 : 5)

[என் காதலியின் குணங்களை யான் நினைத்தறியேன். காரண மென்னை? மறந்த வொன்றையன்றோ நினைப்பது வழக்கம். அவள் குணங்களை ஒருபொழுதும் மறந்தறியேன். ஆதலின், நினைத்து மறியேன்.] என்பவைபோல்வன ஆண்பாற் கூற்றுக்கள்.

" செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை " (116 : 1)

[என்னைப் பிரிந்துபோவதில்லையெனும் காரியத்தை என்னிட முரைக்க. விரைவில் வந்து விடுவேன் என்று சொல்ல வேண்டுமாயின் நீர் வரும்போது எவர் உயிரோடிருப்பாரோ அவரிடம் சொல்லிச் செல்க.] (யான் நீர் பிரியின் உயிர் விடுவேன் என்றவாறு)

" வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா ஆயிடை
ஆரஞ ருற்றன கண்." (118 : 9)

[என் கண்கள் பெரிதும் துயருற்றன. அவை, அவர் பிரியின்

எப்பொழுது வருவாரோ என ஏங்கு நெஞ்சமொடு தூங்கா. அவர் வந்து உடனிருப்பினும் விரைவில் பிரிந்துபோவாரோ எனக் கலங்கித் துயிலா.]

"நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல்
சினைப்பது போன்று கெடும்" (121 : 3)

[எனக்குத் தும்மல் வருவதுபோலிருக்கிறது. ஆனாலும் தும்முகிறேனில்லை. என்னைப் பிரிந்திருக்கும் என் காதலர் என்னை நினைப்பவர்போல் நினையாமலேயிருப்பார்போலும்.]

(அயலூரிலிருப்பவர் தம்மை நினைப்பின் தும்மல் வருதலியற்கையென்பது சிலர் கொள்கை.)

"நனவென வொன்றில்லை யாயிற் கனவினால்
காதலர் நீங்கலர் மன்." (122 : 6)

[நனவென்கின்ற வொன்றில்லையாயின் கனவில் என் காதலர் என்னைப் பிரியாமல் உடனுறைவர்.]

"காலைக்குச் செய்தநன் றென்கொல் எவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை." (123 : 5)

காலைக்கு நான் என்ன நன்மை செய்தேன்? மாலைநேரத்துக்கு நான் என்ன தீமை செய்தேன்? என் காதலர் பிரிந்திருக்கும் இந்நாட்களின் மாலை நேரம் என்னை மிகவும் வருத்துகின்றதே.

"புலப்ப லெனச்சென்றேன் புல்லினே னெஞ்சங்
கலத்த லுறுவது கண்டு." (126 : 9)

[அவர் பிரிந்துபோய் நான் தனியேயிருந்த நாட்களில் அவர் வந்தால் இனி அவரோ டுபேசக்கூடாது என்றிருந்தேன். அவரைக் கண்டவுடனேயே என்னெஞ்சம் அவரோடு கலந்து கொண்டது. அவரோடு கோபித்துக் கொள்ள வேண்டுமெனச் சென்ற நானே அவரைத் தழுவிக் கொண்டேன்.]

"உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு." (129 : 1)

[நினைத்தலே மகிழ்ச்சி; காண்டலோ அதனிலும் மகிழ்ச்சி. இத்தன்மை காதலுக்கே யுரித்து; கள்ளுக்கிலது.]

"அவர்நெஞ் சவர்க்காதல் கண்டும் எவனெஞ்சே
நீயெமக் காகா தது." (130 : 1)

[அவர் என்னை விட்டுப் பிரிந்துபோகக் கருதினால் அவர் நெஞ்

சம் அவர்க்கு உடன்படுகிறது. இது உனக்குத் தெரிந்திருந்தும் எனது நெஞ்சமே நான் மறந்திருக்க வேண்டுமென்ருல் நீ ஏன் எனக்கு உடன்படுகின்ருயில்லை ?]

" கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செலல்." (130 : 3)

[என் காதலர் என்னைப் பிரிந்தார். யானே வறியளானேன். என் நெஞ்சமே நீயும் என்னைப் பிரிந்த காதலரையே நினைத்து அவர்பின் செல்கின்ருய். என்னேடு தரிப்பாயில்லை. கெட்டவர்க்கு எவருந் துணையாகா ரென்பது உண்மையே போலும்.] என்பவை போல்வன பெண்பாற் கூற்றுக்கள்.

திருக்குறளில் தலைமுதல் அடிவரையும் சொற்ருேறும் குறள் தொறும் அதிகாரந்தொறும் காணப்படும் அழகுகளை விரிப்ப தெனின் இது இடமாகாது. எனவே இவ்வளவில் நிறுத்துகிறேன்.

திருக்குறளை இயற்றியவர் திருவள்ளுவர். இவர் சாதி, மதம், பிறப்பு, பெற்ருேர், உடன் பிறந்தோர் முதலியவற்றைப் பற்றிய பற்பல கதைகள் தமிழுலகில் உலவுகின்றன.

திருவள்ளுவர் எம்மதத்தினர் என்று தெளிந்து கூறுதற்கு இயலவில்லை. இந்திரனைப் பற்றியும், அந்தணரைப் பற்றியும், வேதம் முதலியவற்றைப் பற்றியும் ஆங்காங்கே கூறுகின்றமை யின் இவர் வைதிக மதத்தினர் என்பர் ஒரு சாரார். ஸ்ரீ வைஷ்ண வர்கள் இவரை வைணவரெனக் கூறிக் கொள்வார்கள். புத்த மார்க்கத்தினர் எனவும், சமண சமயத்தினர் எனவும் கூறுவாரும் உளர். கிறிஸ்தவ சமயாசாரியர்களாகிய சிற்சில பாதிரிகள் இவர் கிறிஸ்துவின் போதன சாரங்களையறிந்தே தமது குறளை இயற் றினரெனவும் கூறக் கேட்டுளேன். பகவத் கீதையின் சாரம் செறிந்ததென்பர் மற்றும் சிலர். எவ்வெம் மதத்தினர் இவரைத் தத்தம் மதத்திற் சேர்ந்தவரெனக் கூற விரும்பினும் அவற்றிற் கெல்லாம் இவர் குறள் இடங் கொடுக்கின்றதென்பது முண்மை. ஆதலின் இவர் ஒரு சமயவாதியாயிருந்தனரெனக் கொள்வதைக் காட்டிலும் எல்லாச் சமயத்திற்கும் பொதுவான நல்லொழுக்கத் தோடு ஒட்டிய கடவுள்நம்பிக்கை உடையராயிருந்தனரெனக் கொள்வதே பொருந்துவதாகின்றது. இதனுலன்றே " சமயக் கணக்கர் மதிவழி கூருது, உலகியல் கூறிப் பொருளிது வென்ற வள்ளுவன் " எனக் கல்லாட ஆசிரியர் கூறுவாராயினர்.

இனி, திருக்குறளின் பெருமையைப் பலவகையானும் புலப் படுப்பனவற்றுள் முன் எண்ணத்தக்க சிறப்புடையது, பரிமேலழ

கர்உரையென்பது நல்லறிஞர் துணிபு. இது பற்றியே தமிழ் மொழியிலுள்ள உயர்ந்த நூல்களை யெண்ணுமிடத்து,

" வள்ளுவர்நூல் அன்பர்திரு வாசகம் தொல்காப்பியமே
தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை—ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணம் தொகுசித்தி யோராறும்
தண்டமிழின் மேலாம் தரம்."

எனப் பெரியோரும் கூறுவாராயினர். இவ்வுரை திருக்குறள் போலவே சுருங்கச்சொல்லல் முதலிய அழகனைத்தும் ஒருங்கு அமையப் பெற்று விளங்குவது; மேலும் இதன் பெருமை விரிப்பிற் பெருகும்.

## சிலப்பதிகாரமும், மணிமேகலையும்

தமிழ் இலக்கியப்பரப்பினுள் ஐம்பெருங்காப்பியங்கள் எனும் பெயரான் வழங்கப்படுவன, சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதி யெனும் நூல்களாம். இவற்றுள் மகாமகோபாத்தியாய சாமிநாதையரவர்களின் அரும் பெரு முயற்சியின்பயனாய் முழுவதும் அச்சேறித் தமிழ் நாட்டில் பயிலக்கிடைத்தன முதல் மூன்று நூல்களுமாம். இவற்றுள் சீவக சிந்தாமணி பிற்கால நூலாதலின் கடைச்சங்க நூல்களை யாராயும் பகுதியில் சிலப்பதிகாரம் மணிமேகலையென்னும் இருநூல்களையுமே எடுத்துக்கொள்வோம்.

சிலப்பதிகாரம் மணிமேகலை இருநூல்களும் சரித்திர ஆராய்ச்சிக்கு இன்றியமையாதன. இந்நூல்களின் ஆதாரமின்றேல் கடைச்சங்ககாலம் இதுவேயெனத் துணிதலும் தொலலையாய்விடும்.

இவ்விருநூல்களும் கரிகாற்சோழன், பாண்டியன் நெடுஞ்செழியன், சேரன்செங்குட்டுவன் முதலிய புகழ்பெற்ற தமிழ் வேந்தர் ஆண்டிருந்த கால நிகழ்ச்சிகளைக் கூறும் காப்பியங்களாதலினாலும், இவற்றை இயற்றினோரும் அதே காலத்தவராதலினாலும் இந்நூல்கள் நமக்கு எத்துணைப் பேருதவியாயிருக்கின்றன வென்பது கூறாதே அமையும்.

**சிலப்பதிகாரம் :**

இதிற் கூறப்பட்டுள்ள வரலாறு, கல்லாதாரும் நன்கறிந்த தொன்றாதலின் அதனை ஈண்டுக் கூறுதல் வேண்டுவதன்று. கோவலன், கண்ணகி எனும் நாடகம் இப்போது தமிழ் நாடெங்கும் நாடகசாலைகளில் பன்முறை நடிக்கப்பட்டு வருகின்றது.

பதிகச்செய்யுள் நீங்கலாகப் புகார்க்காண்டம், மதுரைக் காண்டம், வஞ்சிக் காண்டம் எனச் சிலப்பதிகாரம் மூன்று காண்டங்களாக வகுக்கப்பட்டுள்ளது. இவற்றுள் :

**புகார்க்காண்டம் :**

(1) மங்கலவாழ்த்துப்பாடல்
(2) மனையறம் படுத்தகாதை
(3) அரங்கேற்றுகாதை
(4) அந்திமாலைச்சிறப்புச்செய் காதை
(5) இந்திரவிழவூரெடுத்தகாதை
(6) கடலாடுகாதை
(7) கானல்வரி
(8) வேனிற்காதை
(9) கனாத்திறமுரைத்தகாதை
(10) நாடுகாண்காதை.

எனப் பத்துப் பிரிவுகளையுடையது. இவற்றுள் கோவலன் கண்ணகி இருவரும் பிறந்த இடமாகிய காவிரிப்பூம்பட்டினத்தில் அவர்கள் மணம், கோவலன் மாதவியின்பாற் சேறல், செல்வங்களை யிழத்தல், மாதவிக்கும் கோவலனுக்கும் ஊடல்பிறத்தல், கோவலன் கண்ணகியை மீண்டும் சேர்தல், தன்குலத்தொழிலாகிய வாணிகத்தின் பொருட்டு மூலதனப் பொருளாகக் கண்ணகியின் சிலம்பைக் கைக்கொள்ளல், இருவரும் மதுரை நோக்கிப் புறப்படல் ஆகிய நிகழ்ச்சிகள் கூறப்பட்டுள்ளன.

**மதுரைக்காண்டம் :**

(1) காடுகாண்காதை
(2) வேட்டுவவரி
(3) புறஞ்சேரியிறுத்தகாதை
(4) ஊர்காண்காதை
(5) அடைக்கலக்காதை
(6) கொலைக்களக்காதை
(7) ஆய்ச்சியர்குரவை
(8) துன்பமாலை
(9) ஊர்சூழ்வரி
(10) வழக்குரைகாதை
(11) வஞ்சினமாலை
(12) அழற்படுகாதை
(13) கட்டுரைகாதை

எனப் பதின்மூன்று பிரிவுகளையுடையது.

இதில் கோவலன், கண்ணகியை மதுரைப் புறத்துச் சேரிவரையும் உடனழைத்துவந்து அங்கே மாதரியெனும் ஆய்ச்சியினிடம் அடைக்கலமாக வைத்துவிட்டுக் கண்ணகியின் சிலம்பைக் கைக்கொண்டு மதுரைக்குச் சென்று அங்கே பொற்கொல்லனின் சூழ்ச்சியால் கொலையுண்டான். அதுகேட்டுக் கண்ணகி, தன் மற்றொரு சிலம்பொடு அரசவைக்கேகித் தன் கணவன் கள்வன் அல்லன் என்று காட்டவே, அரசன் உயிர்விட்டனனாக, இவள் மதுரையை யெரியூட்டிக் குடதிசை மலைக்கேகிப் பதினான்காம் நாள் அங்கு வந்த தன்

கணவனைக் கூடி இருவரும் சுவர்க்கம் ஏகியதுவரை கூறப் பட்டுள்ளது.

வஞ்சிக்காண்டம் :

(1) குன்றக்குரவை
(2) காட்சிக்காதை
(3) கால்கோட்காதை
(4) நீர்ப்படைக்காதை
(5) நடுகற்காதை
(6) வாழ்த்துக்காதை
(7) வரந்தருகாதை.

என ஏழு பிரிவுகளையுடையது.

மேற்றிசை மலையில் தன் கணவனோடு சுவர்க்கஞ் சென்ற கண்ணகியைக் கண்டிருந்த குறவர், ஆங்கு வந்த தம் அரசனாகிய செங்குட்டுவனிடம் தாம் கண்ட காட்சியைக் கூறச் செங்குட்டுவன் கண்ணகியைப் பத்தினித் தெய்வமாக வழிபடும்பொருட்டுக் கற்கொணருமாறு இமயமலைக்குச் சென்றவன், இடையில் பல ஆரிய மன்னரை வென்று சிறைப்பிடித்து இறுதியில் இமயத்தி லிருந்து கற்கொணர்ந்து, பத்தினித் தேவிக்குக் கோயில் அமைத் துப் பிறநாட்டு வேந்தரையும் வரவழைத்துத் திருவிழாக் கொண்டா டினன். ஆண்டு வந்திருந்த இலங்கைக் கயவாகுமன்னன் முதலிய வரும் தத்தம் நாடுகளில் பத்தினித் தேவிக்குக் கோயிலெடுக்க உறுதிகொண்டுசென்றனர் என வரலாறு முடிவுறும்.

புகார்க்காண்டத்தின் ஐந்தாவது பிரிவாகிய இந்திரவிழவூ ரெடுத்தகாதை அக்காலச் செய்திகள் அறிய விரும்புவார்க்கு இன்றி யமையாதது. அதனிடைக் காவிரிப்பூம்பட்டினப் பெருமையும், அந்நகரின் செல்வச் செழிப்பும், அங்கு வாழும் பற்பல மக்களின் பிரிவுகளும், கடைவீதி முதலியவற்றின் சிறப்புக்களும், அரசர் பெருமையும் ஆய பற்பல செய்திகள் பரக்கக் கூறப்பட்டுள்ளன.

காவிரிப்பூம்பட்டினத்தில் மரக்கலம்தரும் செல்வப்பொருட் டால் தாம் பிறந்த நிலத்தைவிட்டுப் போந்த பிறநாட்டார் பலரும் வந்து அலைவாய்க்கரையில் குடியிருந்தனர். (5 : 11–12) பட்டு நூலினாலும், எலிமயிராலும், பருத்திநூலாலும் (5 : 16–17.) நுண் ணிய துகில்களை ஊசியால் வேலைப்பாடமைய நெய்யும் பட்டுச் சாலியர் இருந்தனர். அந்நாட்டரசனாகிய கரிகாலன் தமிழ்நாட் டெல்லையுள் தன்னோடு எதிர்த்துப் போர்செயும் அரசரின்மையின் வடதிசை மன்னரைப் பொருதற்கு அத்திசைநோக்கிப் படையெடுத் தேகி, இமயமலையில் தன் புலியிலச்சினையைப் பொறித்துத் திரும் பினன். (5 : 81–99.) அரசாட்சிக்குத் துணைபுரிய ஐம்பெருங் குழுவினரிருந்தனர். (5 : 157.)

இந்திர விழவு முடியும் இருபத்தொன்பதாம் நாளில் கோவலனும் மாதவியும் கடற்கரை மணலில் அமர்ந்து யாழ் கைக்கொண்டு பாடிய பாடல்களினுல் ஒருவரோடொருவர் ஊடிப் பிரிந்தனர் எனும் வரலாறு பலரும் அறிந்ததொன்றே. அப்பாடல்கள் மிகச் சிறந் தன. அவற்றிற் சில வருமாறு :

" வலைவாழ்நர் சேரி வலையுணங்கு முன்றின் மலர்கையேந்தி
விலைமீ னுணங்கற் பொருட்டாக வேண்டுருவங் கொண்டுவேறோர்
கொலைவேல் நெடுங்கட் கொடுங்கூற்றம் வாழ்வது
அலைநீர்த்தண் கானல் அறியேன் அறிவேனேல் அடையேன்
மன்னோ : (கானல்வரி 10.)

இப்பாடல் படித்து இன்புறத் தக்கது.

'கடலில் மீன்பிடித்துஉயிர்வாழும் பரதவர் சேரியில் வலைகாயும் முற்றங்களில் காயும் மீனைக் காப்பதற்காகக் கையில் மலர்களைப் பிடித்துக் கூற்றமாகிய யமன், தான் வேண்டும் பெண்ணுருக் கொண்டு வாழ்தலை, யான் இதுகாறும் அறிந்திலேன். அறிந்தே னுயின் இக்கானலில் வந்திரேன் ' என்பது இதன் கருத்து.

" பொழில்தரு நறுமலரே புதுமணம் விரிமணலே
பழுதறு திருமொழியே பணையிள வனமுலையே
முழுமதி புரைமுகமே முரிபுரு வில்லிணையே
யெழுதரு மின்னிடையே யெனையிடர் செய்தவையே."
(கானல் 14.)

" கடல்புக் குயிர்கொன்று வாழ்வர்நின் ஐயர்
உடல்புக் குயிர்கொன்று வாழ்வைமன் நீயும்
மிடல்புக் கடங்காத வெம்முலையோ பாரம்
இடர்புக் கிடுகும் இடையிழவல் கண்டாய்." (கானல் 17.)

" புன்கண்கூர் மாலைப் புலம்புமென் கண்ணேபோல்
துன்ப முழவாய் துயிலப் பெறுதியால்
இன்கள்வாய் நெய்தால்நீ யெய்துங் கனவினுள்
வன்கணார் கானல் வரக்கண் டறிதியோ." (கானல் 33.)

" புன்னை நீழல் புலவுத் திரைவாய்
அன்ன நடப்ப நடப்பாள் செங்கண்
அன்ன நடப்ப நடப்பாள் செங்கண்
கொன்னே வெய்ய கூற்றங் கூற்றம்." (கானல் 21.)

" நன்னித் திலத்தின் பூணணிந்து நலஞ்சார் பவளக் கலையுடுத்துச்
செந்நெற் பழனக் கழனிதொறுந் திரையு லாவு கடற்சேர்ப்ப
புன்னைப் பொதும்பர் மகரத்திண் கொடியோ னெய்த புதுப்புண்கள்
என்னைக் காணு வகைமறைத்தா லன்னை காணி னென்செய்கோ."

(கானல் 37.)

மதுரைக் காண்டத்தில் ஆய்ச்சியர் குரவையுள் ஆயர்மகளிர் மாயவனை முன்னிலைப்படுத்திப் பாடும் பாடல்கள் வியக்கத்தக்கன :

" வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிக்
கடல்வண்ணன் பண்டொருநாட் கடல்வயிறு கலக்கினையே
கலக்கியகை யசோதையார் கடைகயிற்றாற் கட்டுண்கை
மலர்க்கமல வுந்தியாய் மாயமோ மருட்கைத்தே."

" அறுபொரு ளிவனென்றே யமரர்கணந் தொழுதேத்த
வுறுபசியொன் றின்றியே யுலகடைய உண்டனையே
உண்டவாய் களவினால் உறிவெண்ணெய் உண்டவாய்
வண்துழாய் மாலையாய் மாயமோ மருட்கைத்தே."

" திரண்டமரர் தொழுதேத்துந் திருமால்நின் செங்கமல
இரண்டடியான் மூவுலகும் இருள்தீர நடந்தனையே
நடந்தவடி பஞ்சவர்க்குத் தூதாக நடந்தவடி
மடங்கலாய் மாறட்டாய் மாயமோ மருட்கைத்தே."

ஆய்ச்சியர்குரவையுள் கொளுச்சொல் என வழங்கும் பதினான்கு வரிகளிலும் அக்கால ஆயர்மகளிரைப் பெண்கொள்ளவரும் ஆயரிளைஞர் புரியும் வீரச்செயல்கள் கூறப்பட்டுள்ளன.

இனி, கோவலன் கொலையுண்டது கேட்ட கண்ணகியின் நிலைமையை அழகுற விளக்கும் பாடல்களை நோக்குவோம்.

" பொங்கி யெழுந்தாள் விழுந்தாள் பொழிகதிர்த்
திங்கள் முகிலோடுஞ் சேணிலங் கொண்டெனச்
செங்கண் சிவப்ப அழுதாள்தன் கேள்வனை
எங்கணு என்று இனைந்தேங்கி மாழ்குவாள்.

இன்புறு தங்கணவர் இடரெரி யகமூழ்கத்
துன்புறு வனநோற்றுத் துயருறு மகளிரைப்போல்
மன்பதை அலர்தூற்ற மன்னவன் தவறிழைப்ப
அன்பனை யிழந்தேன்யான் அவலங்கொண் டழிவலோ.

நறைமலி வியன்மார்பின் நண்பனை யிழந்தேங்கித்
துறைபல திறமூழ்கித் துயருறு மகளிரைப்போன்
மறனொடு திரியுங்கோன் மன்னவன் தவறிழைப்ப
அறனென்னு மடவோய் ! யான் அவலங்கொண் டழிவலோ.

தம்முறு பெருங்கணவன் தழலெரி யகமூழ்கக்
கைம்மைகூர் துறைமூழ்குங் கவலைய மகளிரைப்போற்
செம்மையி னிகந்தகோற் றென்னவன் றவறிழைப்ப
இம்மையு மிசையொரீஇ யினைந்தேங்கி யழிவலோ.

(துன்பமாலை 30–45)

கண்ணகியின் நிலைமையைக் கண்ட மதுரை மக்கள்,

“ மல்லன் மதுரையா ரெல்லாருந் தாமயங்கிக்
களையாத துன்பம் இக்காரிகைக்குக் காட்டி
வளையாத செங்கோல் வளைந்த திதுவென்கொல் !
மன்னவர் மன்னன் மதிக்குடை வாள்வேந்தன்
தென்னவன் கொற்றஞ் சிதைந்த திதுவென்கொல்!
மண்குளிரச் செய்யும் மறவே னெடுந்தகை
தண்குடை வெம்மை விளைத்த திதுவென்கொல் !
செம்பொற் சிலம்பொன்று கையேந்தி நம்பொருட்டால்
வம்பப் பெருந்தெய்வம் வந்த திதுவென்கொல் !
ஐயரி யுண்கண் அழுதேங்கி யரற்றுவாள்
தெய்வமுற்றுள் போலுந் தகைய ளிதுவென்கொல்!”

(ஊர்சூழ்வரி 16–26.)

எனக் கூறி வாடினர்.

மதுரையைத் தீயூட்டுங் கண்ணகி,

“ பார்ப்பா ரறவோர் பசுப் பத்தினிப் பெண்டிர்
மூத்தோர் குழவி யெனுமிவரைக் கைவிட்டுத்
தீத்திறத்தார் பக்கமே சேர்கென்று ”........

(வஞ்சினமாலை 53–55.)

தீயை ஏவினள்.

இனி, வஞ்சிக் காண்டத்தில், மஞ்சுசூழ் சோலை மலைகாண் குவமெனப் பைந்தொடியாய மொடு செங்குட்டுவன் சென்றபோது மலைக்கண் வதிந்த குறவர் அவனுக்குக் காணிக்கையாகப் படைத்த பொருள்கள் இன்னின்னவெனக் கூறப்பட்டிருக்கின்

றன. (காட்சிக்காதை 37-54) இவை மலைவளத்தை நன்கு விளக்குவனவாம்.

கால்கோட்காதையில் சேரன்செங்குட்டுவனின் வீரமும் பெருமையும் விளக்கப்பட்டிருக்கின்றன.

நீர்ப்படைக்காதையுள் மாடலனுகிய அந்தணன், செங்குட்டுவனேடு உரையாடிக் காரியங்களைக் கூறியபின்னர்ச் செங்குட்டுவன் நீலன் வாயிலாகத் தமிழ்வேந்தராகிய சோழரும் பாண்டியரும் தன்னையிகழ்ந்து கூறியதுகேட்டுப் பொருனுய்ப் போர்க்கெழ, அங்கே மாடலமறையோன் கூறும் முதுமொழிகள் மிகவும் பாராட்டத்தக்கன. செங்குட்டுவன் பத்தினித் தேவிக்குக் கோயிலெடுத்துப் பூசைநடத்திய முதல்நாளில் அவனுடன் அவனுல் சிறைவிடப்பெற்றுநின்ற ஆரியமன்னரும், குடகக் கொங்கரும், மாளுவ வேந்தரும், கடல்சூழ்இலங்கைக் கயவாகு வேந்தனும் இருந்தனர். (வரந்தருகாதை 157-161.)

இம்மன்னரும் தத்தம் நாடுகளில் பத்தினிதேவி கண்ணகிக்குக் கோயில் அமைத்து அவளைத் தெய்வமாய் வணங்கி வந்தனர். இவ்வுண்மை பதிகத்தோ டொட்டியுள்ள உரைபெறுகட்டுரையானும் இனிது விளங்கும்.

சிலப்பதிகாரத்திற் கண்டுள்ள நிகழ்ச்சிகள் யாவும் சோழ பாண்டிய சேரநாடுகளில் முறையே நிகழ்ந்தன.

கோவலனும் கண்ணகியும் சோழ நாட்டிலிருந்து வெளியேறும் வரை அந்நாட்டையாண்டிருந்தவன் சோழன் கரிகாலனுவன் என்பது 'செருமிகுசினவேற் செம்பியன், ஒருதனியாழி யுருட்டுவோனெனவே' எனும் மங்கல வாழ்த்துப்பாடல் இறுதி ஈரடிகளுக்கும், 'ஏழாண் டியற்றியோ ரீரா ருண்டில், சூழ்கழல் மன்னற்குக் காட்டல் வேண்டி' (10–11) எனும் அரங்கேற்றுகாதை யடிகளுக்கும் அடியார்க்குநல்லார் கூறும் உரையால் தெரியலாகும்.

**மணிமேகலை :**

சிலப்பதிகாரத்தினேடு அக்காலத்திலே இயற்றப்பட்ட பிறிதொரு பெருங்காப்பியம் மணிமேகலையாகும். இதனை இயற்றியவர் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனுர். இவர் கடைச்சங்கப் புலவருள் ஒருவர். சங்கத்திற்கு அரங்கேற்ற வரும் புலவர்களுடைய பாடல்களைக் கேட்டு இவர் தம் கருத்துக்களை வெளியிடுபவரென்றும் தெரியவருகின்றது. தவறுன பாடல்களைத் தாம் கேட்க நேரிடின் தமது கையிலுள்ள ஒரு சலாகையால் தமது தலையில் மோதிக்

கொள்வார் என்றும், இதனால் இவருடைய தலையிலிருந்த புண் ஆறுமலே யிருந்தமையால் இவருக்குச் சீத்தலைச் சாத்தனார் எனும் பெயர் வழங்குவதாயிற்று என்றும் கூறுவர். இது பொருந்துவதாக இல்லை; சீத்தலை என்னும் ஊரிற் பிறந்தவர் என்னும் கருத்தே பொருந்துவதாகும். இவர் சேரர் மாளிகையில் அவைக்களப் புலவராக இருந்தவரோ எனும் ஐயமும் சிலருக்குண்டு. சேரன் செங்குட்டுவன் மலைவளங்காணச் சென்றிருந்த போது மலைக் குறவர் வாயிலாகக் கண்ணகியின் வரலாற்றைக் கேட்டு அவன் திகைத்துநிற்கச், சாத்தனார் அவளுடைய வரலாறு முழுவதையும் தாம் கண்டறிந்திருப்பதாக அதனை எடுத்துக் கூறியிருக் கின்றனர்.*

புத்தமதக் கோட்பாடுகளையும் அம்மதத்தின் பிற செய்தி களையும் † அறிய விரும்புவோர்க்கு மணிமேகலையாராய்ச்சி இன்றி யமையாதது.

மணிமேகலை பதிகச்செய்யுள் நீங்கலாக, விழாவறை காதை முதல் பவத்திறம் அறுகெனப் பாவைநோற்ற காதை ஈறாக முப்பது காதைகளையுடையது ; சொல்நயம் பொருள்நயம் செறிந்து விளங்கு வது ; அக்கால வரலாற்றுணர்ச்சிக்கு இன்றியமையாதது ; எண் ணிறந்த நீதிகளையும், ஒழுக்கங்களையுங் கூறுவது ; அக்காலப் பழக்க வழக்கங்கள் பலவற்றை இடையிடையே கூறிப்போவது.

இறந்தவர்களை அடக்கஞ்செய்யுமிடத்தில் அதை அறிவிக்கும் கோட்டங்கள் கட்டும் வழக்கமும், இறந்தவரைச் சுடுதலும், எறிந்து விடுதலும், குழியிற்புதைத்தலும், அறைகட்டி உள்வைத்து மூடு தலும், தாழியிற் கவித்தலுமாகிய பல வழக்கங்கள் அக்காலத்தி லிருந்தனவென்பது,

“ அருந்தவர்க் காயினு மரசர்க் காயினும்
ஒருங்குடன் மாய்ந்த பெண்டிர்க் காயினும்
நால்வேறு வருணத்துப் பால்வேறு காட்டி
யிறந்தோர் மருங்கிற் சிறந்தோர் செய்த
குறியவும் நெடியவும் குன்று கண்டன்ன
சுடுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டம் ” (6 : 54–59.)

---

* சிலப்பதிகாரம் காட்சிக்காதை 65-வது வரிமுதல் பார்க்க.

† புத்த சரித்திரம், பௌத்த சங்கம், பௌத்த தருமம் எனும் பௌத்த மத மும்மணிகளை மகாமகோபாத்தியாய சாமிநாதையரவர்கள் இந் நூலுடன் வெளியிட்டிருக்கின்றனர்.

" சுடுவோ ரிடுவோர் தொடுகுழிப் படுப்போர்
தாழ்வயி னடைப்போர் தாழியிற் கவிப்போர் " (6 : 66–67.)

என்னும் அடிகளால் விளங்கும்.

அரசன் தன் நீதிகெட்டு அரசாளுவனேல் நாடு பாழ்படு மென்னும் நீதியை மணிமேகலாதெய்வம் உதயகுமரனுக்குக் கூறியதாக,

" ..............மன்னவன் மகனே,
கோன்நிலை திரிந்திடின் கோள்நிலை திரியுங்
கோள்நிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்
மாரிவறங் கூரின் மன்னுயிர் இல்லை
மன்னுயி ரெல்லாம் மண்ணாள் வேந்தன்
தன்னுயிர் என்னுந் தகுதியின் றாகும்." (7. 7. 12.)

எனக் காரணகாரிய முறையிற் கூறுகின்றார்.

பசிக்கொடுமை நீக்குவோர்பெருமையை,

" ஆற்றா மாக்கள் அரும்பசி களைவோர்
மேற்றே யுலகின் மெய்ந்நெறி வாழ்க்கை
மண்திணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே." (11 : 93–96.)

என ஆசிரியர் நயம்படக் கூறுகிறார்.

சாவக (Java) நாட்டுக்கும் பண்டைத் தமிழ்நாட்டிற்கும் போக்குவரவுண்டென்பது,

" மாநீர் வங்கம் வந்தோர் வணங்கிச்
சாவக நன்னாட்டுத் தண்பெயன் மறுத்தலின்
ஊனுயிர் மடிந்த துரவோ யென்றலும்
அமரர்கோ னாணையி னருந்துவோர்ப் பெறாது
குமரி மூத்தவென் பாத்திர மேந்தி
அங்கந் நாட்டுப் புகுவதென் கருத்தென
வங்க மாக்களொடு மகிழ்வுட னேறிக்
கால்விசை கடுகக் கடல்கலக் குறுதலின்
மாலிதை மணிபல் லவத்திடை வீழ்த்துத்
தங்கிய தொருநாள் தானுங் கிழிந்தனன்
இழிந்தோன் ஏறின னென்றிதை யெடுத்து
வழங்குநீர் வங்கம் வல்லிருட் போதலும் " (14 : 73–84.)

என்னும் அடிகளால் விளங்கும்.

மணிமேகலை வஞ்சி நகரம் சென்றகாலத்து அங்கு ஆண்டிருந்தவன் சேரன்செங்குட்டுவனேயென்பது அவன் கனகவிசயர் முதலியவரை வென்றவன் எனக் கூறப்படும் பல செய்திகளால் இனிது விளங்கும்.

" கங்கையம் பேர்யாற் றடைகரைத் தங்கி
வங்க நாவியின் அதன்வடக் கிழிந்து
கனக விசயர் முதற்பல வேந்தர்
அனைவரை வென்றவர் அம்பொன் முடிமிசைச்
சிமைய மோங்கிய இமைய மால்வரைத்
தெய்வக் கல்லுந் தன்திரு முடிமிசைச்
செய்பொன் வாகையுஞ் சேர்த்திய சேரன் " (26 : 84–90.)

என்பது காண்க.

மாவண்கிள்ளியின் காலத்தில் காவிரிப்பூம்பட்டினம் கடல் கொள்ளப்பட்டதென்பது இருபத்துநான்காவது இருபத்தொன்பதாவது காதைகளிற் கூறப்பட்ட செய்திகளால் அறியலாகும்.

## பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்

இனி, பதினெண் கீழ்க்கணக்கைப்பற்றி ஆராய்வேன். கடைச்சங்கத்தில் அரங்கேறிய நூல்களுள் பதினெண்கீழ்க்கணக்கும் அடங்குமென்பாரும் உளர்.

" அகவலுங் கலிப்பா வும்பரி பாடலும்
பதிற்றைந் தாதி பதிற்றைம்ப தீறு
மிகுத்துடன் றெடுப்பன மேற்கணக் கெனவும்
வெள்ளைத் தொகையும் அவ்வகை யெண்பெறின்
எள்ளறு கீழ்க்கணக் கெனவும் கொளலே."

(பன்னிருபாட்டியல், 344.)

" அடிநிமிர் பில்லாச் செய்யுட் டொகுதி
அறம்பொரு ளின்பம் அடுக்கி யவ்வத்
திறம்பட வுரைப்பது கீழ்க்கணக் காகும்."

(பன்னிருபாட்டியல், 346.)

என்பன முதலிய சூத்திரங்களால் கீழ்க்கணக்கென்பது, ஐம்பதிற் குறையாதும் ஐந்நூற்றின் மேற்படாதும், வெண்பாக்களினாலாகிய அறம்பொருள் இன்பங்களைப்பற்றிக் கூறும் நூல்களுக்கு வழங்கும் பெயரென அறியலாம். எனினும், ஐம்பதிற் சிறிதுகுறைந்து

நாற்பதுசெய்யுட்களையுடைய நூல்களிற் சிலவற்றையும், ஐந்நூற் றின் ஏறிய செய்யுட்களையுடைய நூலையும் முன்னோர் கீழ்க்கணக் கினுள் அடக்கிக்கூறியுள்ளனர்.

கீழ்க்கணக்குநூல்கள் பதினெட்டென்பது,

“ நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி மாமூலம்
மெய்ந்நிலைய காஞ்சியோ டேலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு.”

என்னும் வெண்பாவால் தெரியவருகின்றது. இவ்வெண்பாவின் ஈற்றடி யிரண்டும் பாடபேதமாய்ப் பல நூல்களில் பலவாறு காணப் படுகின்றன.

“ இன்னிலைய காஞ்சியுட னேலாதி யென்பவே
நன்னிலைய தாகுங் கணக்கு.”

எனவும்,

“ இன்னிலைசொல் காஞ்சியுடன் ஏலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு.”

எனவும்,

“ மெய்ந்நிலைசொல் காஞ்சியுடன் ஏலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு.”

எனவும், வழங்குவது உண்டு.

இச்செய்யுளிலே கூறப்பட்ட பதினெட்டுநூல்களுள் கீழ்க் கணக்கு நூல்களென எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டன பன்னிரண்டே. அவையாவன :

1. நாலடியார்
2. நான்மணிக்கடிகை
3. இனியவை நாற்பது
4. இன்னா நாற்பது
5. கார் நாற்பது
6. களவழி நாற்பது
7. திரிகடுகம்
8. ஆசாரக்கோவை
9. பழமொழி
10. சிறுபஞ்சமூலம்
11. முதுமொழிக் காஞ்சி
12. ஏலாதி

என்பனவே.

எஞ்சிய ஆறு நூல்களையும் பற்றிப் பல்வேறு கருத்துக்கள் உள்ளன. மேற்காட்டிய வெண்பாவில் கருத்து வேறுபாட்டுக்கு இடங்கொடுக்கும் சொற்கள் ‘ ஐந்திணை முப்பால் ’ ‘ இன்னிலை சொல் ’ ‘ கைந்நிலை ’ என்பனவாம்.

சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் தாம் வெளியிட்ட கலித்தொகைப் புதிப்புரையில் 'ஐந்திணை' என்பது மாறன் பொறையனரது ஐந்திணை ஐம்பதைக் குறிக்குமென்றும், முப்பால் என்பது திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி, சிறுபஞ்சமூலம் முதலியனபோல நாலடிவெண்பாவானியன்று அக்காலத்திலே வழங்கிய மூன்று சிறு அறநூல்களையென்றும், இன்னிலை இன்னிலைசொல் என்றது இன்னிலை, இன்சொல் என்னும் பெயரிய இரண்டு நூல்களின் பெயரேயென்றும் நினைப்பதாகக் கூறியிருக்கின்றனர்.

இவர் கருத்துப்படி கீழ்க்கணக்கு நூல்கள் மேற்கூறிய பன்னிரண்டும்,

13. ஐந்திணை, 14, 15, 16 மூன்று சிறு அறநூல்கள் 17 இன்னிலை 18. இன்சொல் எனும் ஆறுமாம்.

மற்றொருசாரார் 'ஐந்திணை' என்பது நால் நாற்பது என்பது போல் திணைப்பொருளைக் குறிக்கும் ஐந்து நூல்களென்றும் முப்பாலென்பது திருக்குறளேயென்றும் தக்க காரணங்காட்டிக் கூறுவார்.

இவர்கள் கருத்துப்படி கீழ்க்கணக்கு நூல்கள் முற்கூறிய பன்னிரண்டும்,

13. ஐந்திணை ஐம்பது
14. திணைமொழி ஐம்பது
15. ஐந்திணை அறுபது (திணைமாலை)
16. ஐந்திணை எழுபது
17. திணைமாலை நூற்றைம்பது
18. திருக்குறள்

என்னும் ஆறுமாம்.

மற்றையோர் நானுற்பதைந்திணை என்னும் தொடரில் நாலென்னும் பதம் நாற்பதோடுமாத்திரமல்ல, ஐந்திணையோடும் செல்லும் எனப் பொருள்கொள்வார். அவர் கொள்கைப்படி நான்கு ஐந்திணையாவன.

13. ஐந்திணை ஐம்பது 15. ஐந்திணையெழுபது
14. திணைமொழி ஐம்பது 16. திணைமாலை நூற்றைம்பது

என்பர்.

எஞ்சிய நூல்கள் :

17. முப்பாலாகிய திருக்குறள் 18. இன்னிலை

என்பர்.

இக்கருத்தே இப்போது பெரும்பாலோரால் கொள்ளப்படுவது.

மேற்காட்டியுள்ள பதினெண்கீழ்க்கணக்கு நூல்களும் சங்க காலத்திலேயே இயற்றப்பட்டனவல்ல. அவற்றிற்சில பல நூற்றுண்டுகட்குப் பின்னர் உண்டாயின. இங்ஙனமிருப்பவும் சங்ககால நூல்களை ஆராயும் இப்பகுதியில் இந்நூல்களைப் புகுத்தியது, பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள், சங்ககாலத்தில் உண்டாயினவெனும் உலகவழக்குப் பற்றியும் பதினெண்கீழ்க் கணக்கு நூல்களிற் பலப்பல சங்ககாலத்தில் இயற்றப்பட்ட காரணம் பற்றியுமேயாம்.

இனி, இப்பதினெட்டு நூல்களையும்பற்றிச் சிறிது சிறிது கூறலாகும்.

**1.** நாலடியார் : இந்நூல் ஜைன முனிவரால் இயற்றப் பட்டது; கடவுள்வாழ்த்தொடு நானூற்றொரு வெண்பாக்களை யுடையது. ஒவ்வொரு வெண்பாவும் தனித்தனி வெவ்வேறு முனிவரால் இயற்றப்பட்டது. இஃது ஏறத்தாழ, கி. பி. எட்டாம் நூற்றுண்டில் இயற்றப்பட்டதென்பது பெரும்பாலார் கொள்கை. இதனுள் 200, 296-ஆம் வெண்பாக்களில் பெருமுத்தரையர் என்பார் குறிக்கப்பட்டிருக்கின்றனர். பெருமுத்தரையர்காலம் எட்டாம் நூற்றுண்டின் தொடக்கத்திலாகும். நாலடிநானூறு செய்யுட்களையும் பால் அதிகாரங்களாக வகுத்து அதற்கு முதன் முதல் உரையும் எழுதினவர் பதுமனுரென்பவர்.

நாலடியார் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என முப்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இவற்றுள் அறத்துப்பால் செல்வநிலையாமை முதல், தீவினையச்சம் ஈறாகப் பதின்மூன்று அதிகாரங்களையுடையது. பொருட்பால் கல்வி முதல் கற்புடை மகளிர் ஈறாக இருபத்தாறு அதிகாரங்களையுடையது. காமத்துப் பால் காமநுதலியல் எனும் ஒரே அதிகாரத்தையுடையது. ஒவ்வோ ரதிகாரமும் பத்துப் பத்து வெண்பாவாக நானூறு வெண்பாக்களை யுடையது. இந்நானூறு வெண்பாக்களும் ஒருவராலாக்கப்பட்டன வல்லவாதலின் ஒருமுறை கூறப்பட்டதே, மறுமுறையும் கூறப் படுவதுபோல் இடையிடையே காணப்படுவதுண்டு.

இந்நூற்பெயர் திருக்கோவையார்போல உயர்வுகுறிக்கும் ஆர் விகுதி பெற்றது. ''ஆலும் வேலும் பல்லுக்குறுதி, நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி'' எனும் பழமொழியினாலும் நாலடி யாரும், குறளும் கூறுவோர் கூற்றுக்களுக்கெல்லாம் ஆதாரமாய் வலியுறுத்தத் தக்கனவென்பது போதருதலால், நாலடியார் உலகில் எத்துணைப் பெருமதிப்பையடைந்துளதென்பது தெரியவரும்.

இந்நூலில் காணப்படும் வெண்பாக்கள் மிகவும் அருமை யானவை.

" நேர்த்து நிகரல்லார் நீரல்ல சொல்லியக்கால்
வேர்த்து வெகுளார் விழுமியோர்—ஓர்த்ததனை
உள்ளத்தா னுள்ளி யுரைத்துராய் ஊர்கேட்பத்
துள்ளித்தூண் முட்டுமாங் கீழ்." (7 : 4.)

[அற்பர் செய்யும் நிந்தனையைக் குறித்துச் சினங்கொள்ள மாட்டார் பெரியோர். கீழ் மக்களோ தம்மை மிகவும் உயர்ந்தவராக நினைத்திருப்பதனால் வசையினைக் கேட்ட மாத்திரத்தில் நம்மை இப்படிச் சொல்லலாமா என்று மனம் பொறாமல் பலருக்குஞ் சொல்லிச் சினம் விஞ்சுவதனால் துள்ளித் தூணில் முட்டிக் கொள்வார்கள்.]

" சக்கரச் செல்வம் பெறினும் விழுமியோர்
எக்காலுஞ் சொல்லார் மிகுதிச்சொல்—எக்காலும்
முந்திரிமேற் காணி மிகுவதேற் கீழ்தன்னை
இந்திரனா எண்ணி விடும்." (35 : 6)

[மேலோர் எவ்வளவு மிக்க செல்வமுடையரான நிலையினும் வரம்புகடந்து பேசார்; கீழோரோ தாம் இருக்கிற தாழ்ந்த நிலைக்குமேல் சிறிது செல்வம் பெற்றாலும் தம்மை இந்திரனாக நினைந்து வரம்புகடந்து பேசுவர்]

" அறிமின் அறநெறி அஞ்சுமின் கூற்றம்
பொறுமின் பிறர்கடுஞ்சொற் போற்றுமின் வஞ்சம்
வெறுமின் வினைதீயார் கேண்மை எஞ்ஞான்றும்
பெறுமின் பெரியார்வாய்ச் சொல்." (18 : 2)

[எப்பொழுதும் அறநெறிகளை அறிக; யமனை நினைந்து அஞ்சுக; பிறர்கூறும் கடுஞ்சொற்களைப் பொறுத்துக்கொள்க; வஞ்சனையை விலக்குக; தீயோர் நட்பைக் கைவிடுக; பெரியோர் சொற்களைப் பெறுக]
என்பவற்றால் நாலடிப்பாடல்களின் அருமை பெருமைகளை அறியலாம்.

**2. நான்மணிக்கடிகை :** இது நான்கு வகையான மணிகள் பதித்தமைக்கப்பட்ட ஒருவகை அணிகலன் எனப் பொருள் படும். இந்நூலுள் ஒவ்வொரு பாடலிலும் நான்கு நான்கு நீதி

மணிகள் கோக்கப்பட்டிருத்தலின் இஃது இப்பெயர்பெற்றது. இதனை இயற்றியவர் விளம்பிநாகனுர் என்னும் புலவர் பெருமானுவர். 101 பாடல்கள் அமைந்த இந்நூலுள் முதலிரண்டு பாடல்களும் திருமாலைப் பற்றிய காப்புச் செய்யுட்களாகும். இந்நூற் பாடல்கள் தெளிவும் இனிமையும் வாய்ந்தன.

**3.** இனியதுநாற்பதை இயற்றியஆசிரியர் மதுரைத் தமிழாசிரியர்மகனுர் பூதஞ்சேந்தனுர்.

இந்நூல் கடவுள்வாழ்த்து உட்பட நாற்பத்தொரு வெண்பாக்களையுடையது. ஒவ்வோர் செய்யுளிலும் இனிய அறிவுரைகள் மூன்று கூறப்பட்டிருக்கின்றன. நான்கு இனிய பொருள்களைக் கூறும் வெண்பாக்களும் சிற்சிலவுள. இனியவை என இதிற் காட்டப்பட்டுள்ள பொருள்கள் நூற்றிருபத்தாறும்.

இரந்துண்டாயினும் கற்றல் இனிது. (2) கடன்கொண்டு உண்டு வாழாமை இனிது. (11) நட்டாரைப் புறங்கூருமல் வாழ்தல் இனிது. (20) வருவாயறிந்து வழங்கல் இனிது. (23) உயர்வுள்ளி ஊக்கம் பிறத்தல் இனிது. (30) என்பவை முதலியன மிகவும் அரிய அறிவுரைகளாகும்.

**4.** இன்னுநாற்பது : இயற்றியவர் கபிலர். இவர் வரலாறு முன்னரே கூறப்பட்டது. இந்நூல் கடவுள்வாழ்த்து உட்பட நாற்பத்தொருவெண்பாக்களையுடையது. ஒவ்வொரு செய்யுளினும் இனிமையில்லாதனவான (துன்பந்தருவனவாய) நான்கு பொருள்கள் கூறப்பட்டிருக்கின்றன. இந்நூலிற் கூறப்பட்டுள்ள துன்பந்தரும் பொருள்கள் நூற்றறுபத்து நான்கு. அவற்றுள்,

மாற்றம் அறியானுரை துன்பம் (8), உடம்பாடில்லாத மனைவி தோளின்னு, இடனில் சிறியாரோடியாத்த நட்பின்னு, கடனுடையார் காணப்புகல் இன்னு (12), பெற்றதாயைப் பாதுகாவாது விடல் துன்பந்தரும் (18), மூத்தவிடத்துப் பிணியின்னு (22), தீமை செய்கின்றவர் அருகில் குடியிருத்தல் துன்பந்தரும் (25), பெரியாரோடு கொண்ட நட்பை யிழத்தல் துன்பந்தரும் (27), பெரிய நகரிற் பொருளின்றிக் குடியிருத்தல் மனத்துன்பமாம் (37), சிறியவர்மீது கோபங்கொள்ளுதல் துன்பந்தரும் (38) என்பவை முதலியன அருமையானவை.

**5.** கார்நாற்பதின் ஆசிரியர் மதுரைக்கண்ணங் கூத்தனுர். இந்நூல் நாற்பது வெண்பாக்களாலாயது. கார்காலத்துத் திரும்பி வருவதாகச் சொல்லித் தலைவன் வினைவயிற்சென்றனன். அவன் திரும்புங்காலத்தைத் தலைவி எதிர்பார்த்திருந்தனள். கார்காலம் வந்தது ; அவன் வரவு தாழ்த்தது ; அதனுல் ஆற்ருளாய தலைவி

யைத் தோழி ஆற்றுவித்தலும், வினைமுடித்த தலைவன் தலைவியை நினைந்து கூறலும், பாகனோடுரைத்தலுமாகிய பல அகப்பொருட் டுறைகள் நிறைந்தது இந்நூல். இதனுள் கார்காலத்தின் இயற்கை வனப்புக்கள் பல ஆங்காங்கே அழகுபெற விரிக்கப்பட்டுள்ளன.

**6. களவழிநாற்பதை** இயற்றியவர் பொய்கையார். இப் பொய்கையார் ஆழ்வார்களில் ஒருவராகிய பொய்கையாழ்வாரே எனச் சிலர் கூறுவர். எனினும் இப்பொய்கையார் வேறு, பொய்கையாழ்வார் வேறு என்பதே துணியக் கிடந்தது. இந்நூல் இயற்றப்பட்ட காலம் கி. பி. ஆறும் நூற்றாண்டென ஊகிக்க இடமுண்டு.

சேரமான் கணைக்காலிரும் பொறையும், சோழன் செங்கணானும் கழுமலமெனுமிடத்தில் பொருதவிடத்துச் சேரமான் தோல்வி யடைய அவனைச் செங்கணான் குடவாயிற் கோட்டத்துச் சிறை வைத்தானாகச் சேரமானின் உயிர் நண்பராகிய பொய்கையார், சோழன் செங்கணானின் வெற்றியைப் புகழ்ந்து இக்களவழி நாற்ப தைப் பாடித் தம் நண்பன் சேரமானைச் சிறைமீட்டனர் என்பர்.

இதனிடை நால்வகைச் சேனைகளின் போர்த்திறமும், போரின் கொடுமையும், தோற்றமும் படிப்போர் துணுக்குறும்படி கூறப்பட் டுள்ளன. ஒரெடுத்துக்காட்டாக,

“ இணரிய ஞாட்பினுள் ஏற்றெழுந்த மைந்தர்
சுடரிலங்கு எஃகம் எறியச்சோர்ந் துக்க
குடர்கொண்டு வாங்குங் குறுநரி கந்தில்
தொடரொடு கோணாய் புரையும் அடர்பைம்பூண்
சேய்பொருது அட்ட களத்து.” (34)

என்பது காண்க.

இதன்பொருள் : செங்கட் சோழன் போர் செய்து பகைவரைக் கொன்ற போர்க்களத்தில் சரிந்து சிந்திய வீரர்களது குடர்களைக் கௌவிக்கொண்டு இழுக்கும் குறுநரிகள் கட்டுத்தறியில் கட்டப் பட்ட சங்கிலியோடு நின்ற நாய்களை யொக்கும் என்பதாம்.

**7. ஐந்திணை ஐம்பது :** இயற்றியவர் மாறன் பொறையனார். இது, அகப்பொருள்தழுவியது ; ஐந்திணைகளாகிய முல்லை, குறிஞ்சி, மருதம், பாலை, நெய்தல்கட்குரிய இருத்தல், கூடல், ஊடல், பிரிதல், இரங்கலாய ஐந்து ஒழுக்கங்களையும் முறையே பப்பத்து வெண்பாக்களால் கூறுவது ; ஐம்பது வெண்பாக்களை யுடையது.

இதில் ஆயர் குழலூதி நிரை மேய்த்தல் (7), கவலைக் குறியாகக்

கவுள் மிசைக் கையூன்றல் (10), மகள் நோய்க்குத் தாய் வேலனைத் தந்து மறியறுத்து உதிரத்தைத் தூவி வெறியாட்டயர்தல் (20), போரின்கட்பட்ட வீரர்பெயர் பொறித்த கல்நாட்டல் (35) முதலிய பலவகைப் பழக்கங்கள் கூறப்பட்டுள்ளன. 'கொல்லர்தெருவில் ஊசி விற்றல்' எனும் பழமொழி இதனுள் 21-ஆம் செய்யுளில் ஆளப்பட்டிருக்கிறது.

இதில் மிக அழகிய பாடல்கள் பல உள்ளன ; அவற்றுள்

"சுனைவாய்ச் சிறுநீரை யெய்தாதென் றெண்ணிப்
பிணைமான் இனிதுண்ண வேண்டிக் கலைமாத்தன்
கள்ளத்தி னூச்சுஞ் சுரமென்பர் காதலர்
உள்ளம் படர்ந்த நெறி." (38)

[சுனையின்கண் உள்ள சிறியநீரைத் தானும் தன்பிணையும் உண்ண நிரம்பாது என்று எண்ணிப் பிணைமான் இனிதாக உண்ண வேண்டிக் கலையாகிய மாத் தனது கள்ளத்தினாலே பொய்யே உறிஞ்சும் சுரமென்று சொல்லுவர் ; நங்காதலர்தாம் போயினநெறி.]

"கொண்கன் பிரிந்த குளிர்பூம் பொழில்நோக்கி
உண்கண் சிவப்ப அழுதேன் ஒளிமுகங்
கண்டன்னை எவ்வம்யா தென்னக் கடல்வந்தென்
வண்டல் சிதைத்ததென் றேன்." (44)

[கணவன் பிரிந்த பூம்பொழிலை நோக்கிக் கண்சிவப்ப அழுத என்னுடைய முகத்தைக்கண்டு அன்னை நினக்கு வந்த துன்பம் யாது என்ன, கடல்வந்து, என்னுடைய விளையாட்டுச் சிற்றிலைச் சிதைத்தது என்று சொன்னேன்.]

என்பவை எடுத்துக்காட்டாகத் தக்கன.

**8.** திணைமொழியைம்பது என்னும் நூலை இயற்றியவர் சாத்தந்தையார் மகனார் கண்ணஞ்சேந்தனாராவர். இந்நூல், ஐந்திணையுள் ஒவ்வொரு திணைக்கும் முறையே பப்பத்து வெண்பாக்களாகப் பாடிய ஐம்பது வெண்பாக்களை யுடையது.

**9.** ஐந்திணை யெழுபது : இயற்றியவர் மூவாதியார். அகப்பொருள் ஐந்திணைக்கும் முறையே பதினான்கு பதினான்கு வெண்பாக்களாகப் பாடப்பட்ட எழுபது வெண்பாக்களையுடையது.

**10.** திணைமாலை நூற்றைம்பது : ஆக்கியவர் கணிமேதாவியார். இப்பெயரானே அவர் மிகச் சிறந்தபுலவர் என்பது பெறப்படும்.

குறிஞ்சி, நெய்தல், பாலை, முல்லை, மருதம் ஆய ஐந்திணைக்கும் முறையே முப்பத்தொன்று, முப்பத்தொன்று, முப்பது, முப்பத்தொன்று, முப்பது ஆக நூற்றைம்பத்துமூன்று வெண்பாக்களுடையது. இதனுள், பல நிலங்களின் இயற்கையழகுகள் செவ்வனே வருணிக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக,

" பொன்வாளாற் காடில் கருவரை போர்த்தாலும்
என்வாளா வென்றி யிலங்கெயிற்றாய்—என்வாள்போல்
வாளிழந்த கண்தோள் வனப்பிழந்த மெல்விரலும்
நாளிழந்த எண்மிக்கு நைந்து." (99)

என்பது காண்க.

'வெயிலாற் கரிந்து வாடிய மலைச்சரிவுகள் மலரிதழ்களால் மூடப்பட்டாலும் அதனால் பயனென்? நீயோ இதனைப் பருவமன்று என்கிறாய்! என் மேனியும் கண்களும் ஒளியிழந்தன. நாட்களை ஒற்றி எண்ணி விரல்களும் தேய்ந்தன' என்பது இதன் பொருளாகும்.

இங்கே,

" வாளற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல்."

என்னும் திருக்குறள் நினைக்கத்தக்கது.

**11.** முப்பால்: இது திருக்குறளுக்கு வழங்கும் மற்றொரு பெயராகும். திருக்குறளைப்பற்றி முன்னே கூறினேன்.

**12.** திரிகடுகம்: சுக்கு மிளகு திப்பிலி யென்னும் மூன்றும் திரிகடுகம் எனப்படும். இம்மூன்றாலும் ஆகிய மருந்து மக்களுடைய உடல் நோயைப் போக்கி நலம் புரிதல்போல, ஒவ்வொரு பாட்டிலும் அருமையான மூன்று பொருள்கள் அமைய இயற்றப் பட்ட இந்நூல் மக்களின் உளநோயாகிய அறியாமை முதலியவற்றைப் போக்கி நலம்செய்தலால் திரிகடுகம் எனப்பட்டது. இதனை இயற்றியவர் நல்லாதனாராவர். இது கடவுள் வாழ்த்துடன் 101 வெண்பாக்களால் ஆகியது. கடவுள் வாழ்த்து திருமாலைப் பற்றியது.

" வைததனை இன்சொல்லாக் கொள்வானும் நெய்பெய்த
சோறென்று கூழை மதிப்பானும்—ஊறிய
கைப்பதனைக் கட்டியென் றுண்பானும் இம்மூவர்
மெய்ப்பொருள் கண்டுவாழ் வார்." (48)

என்பது இந்நூற் செய்யுளமைதிக்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

**13.** ஆசாரக்கோவை : இயற்றியவர் பெருவாயின் முள்ளியார் என்பவர். இதன் கடவுள் வணக்கம் சிவபிரானைப் பற்றியது. இந்நூல் வடமொழியிலுள்ள இத்தகையதோர் நூலின் மொழிபெயர்ப்பென்பர். இதன்கண் ஒவ்வொருவரும் மேற்கொள்ள வேண்டிய ஒழுக்கமுறைகள் மிகவும் விரிவாய் உரைக்கப்பட்டுள்ளன. தூய்மை, ஒழுக்கம், மரியாதை முதலியவை பற்றிய தமிழ்நாட்டு ஆசாரங்களைக் கைக்கொண்டு நடக்க விரும்புவோர் இந்நூலை யோதியுணரலாம்.

இந்நூலிற் கூறப்பட்ட ஆசாரங்களிற் சில வருமாறு :—

**காலை மாலை கடவுள் வணக்கம் :**

" நாளந்தி கோறின்று கண்கழீஇத் தெய்வத்தைத்
தானறியு மாற்றால் தொழுதெழுக அல்கந்தி
நின்று தொழுதல் பழி. " (9)

காலையில் கோலால் பல் துலக்கிக் கண்கழுவித் தெய்வம் வணங்கிச் செயல் தொடங்குக. மாலைப்பொழுதில் தெய்வத்தை நின்று தொழாமல் இருந்து தொழுக.

**உண்ணும் முறை :**

" நீராடிக் கால்கழுவி வாய்பூசி மண்டலஞ்செய்து
உண்டாரே உண்டா ரெனப்படுவார் அல்லாதார்
உண்டார்போல் வாய்பூசிச் செல்வர் அதுவெடுத்துக்
கொண்டார் அரக்கர் குறித்து. " (18)

**துயில் கொள்ளும் முறை :**

" கிடக்குங்கால் கைகூப்பித் தெய்வந் தொழுது
வடக்கொடு கோணம் தலைசெய்யார் மீக்கோள்
உடற்கொடுத்துச் சேர்தல் வழி. " (30)

(மீக்கோள் - போர்வை.)

**விருந்தினர்க்குச் செய்யும் உபசாரம் :**

" முறுவல் இனிதுரை கால்நீர் மணைபாய்
கிடக்கையோ டிவ்வைந்தும் என்ப தலைச்சென்றார்க்கு
ஊணொடு செய்யுஞ் சிறப்பு. " (54)

புன்சிரிப்பு, இனியபேச்சு, கால்கழுவ நீர், இருக்க மணை, கிடக்கப் பாய், தங்க இடம் : இவை விருந்தினர்க்குச் செய்யும் சிறப்புக்கள்.

பெரியாரிடமும் ஆசிரியரிடமும் ஒழுகும் முறைமை :

" நகையொடு கொட்டாவி காறிப்புத் தும்மல்
இவையும் பெரியார்முன் செய்யாரே செய்யின்
அசையாது நிற்கும் பழி. " (73)

" நின்றக்கால்-நிற்க அடக்கத்தால் என்றும்
இருந்தக்கால் ஏவாமை ஏகார் பெருந்தக்கார்
சொல்லிற் செவிகொடுத்துக் கேட்டீக மீட்டும்
விறுவற்க சொல்லொழிந்தக் கால். " (74)

**14.** பழமொழி : இயற்றியவர் முன்றுறையரையனார் என்பார். இது கடவுள் வணக்கம் உட்பட நானூறு வெண்பாக்களை யுடையது. இதனுள், கடவுள்வணக்கம் அருகனைக் குறித்தது ; ஒவ்வொரு வெண்பாவிலும் ஒரொரு பழமொழியை எடுத்தாண்டு நீதி ஒழுக்கம் முதலியவை விளக்கிக் கூறப்பட்டுள்ளன. சங்க காலத்திலேயே தமிழ்மக்கள் அடைந்திருந்த தேர்ச்சிக்கு இந்நூலும் ஒரு ஆதாரமாகும். பழைய வரலாறுகள் சில இதனுள் சுட்டப்பட் டுள்ளன.

இந்நூற்பாக்களைப் பெரும்பிரிவுகளாகவும், அவற்றின் உட் பிரிவுகளாகவும் பாகுபாடு செய்து செல்வகேசவராய முதலியா ரவர்கள் வெளியிட்டுள்ளார்கள். இந்நூலில் வழங்கும் பழமொழிகள் பல இன்றளவும் தமிழுலகில் வழக்கிலிருந்து வருகின்றன.

**15.** சிறுபஞ்சமூலம் : இயற்றியவர் காரியாசான் என்பார். இந்நூல் கடவுள் வாழ்த்துடன் 97 வெண்பாக்களையுடையது. பஞ்சமூலம் - ஐவகை வேர். அவை சிறுபஞ்சமூலம் பெரும் பஞ்சமூலம் என இருவகைப்படும். கண்டங்கத்தரி, வழுதுணை, மல்லி, பெருமல்லி, நெருஞ்சி என்பவற்றின் வேர் சிறுபஞ்சமூலம் எனப்படும். இச் சிறுபஞ்சமூலங்களாலான மருந்து, மக்களை உடற்பிணி தீர்த்து மகிழ்விப்பது. அதுபோல ஒவ்வொரு செய்யுளும் உயர்ந்த ஐந்து பொருள் வாய்ந்ததாக இயற்றப்பட்ட இந்நூல், மக்கள் மனத்து நிகழும் அறியாமை முதலிய நோய்களை நீக்கி வாழ்விப்பது ஆதலின் இப்பெயர் பெற்றது.

“ நாணிலான் சால்பும் நடையிலான் நன்ஞேன்பும்
ஊணிலான் செய்யும் உதாரதையும்—ஏணிலான்
சேவகமும் செந்தமிழ் தேற்ருன் கவிசெயலும்
நாவகமே நாடின் நகை.” (12)

என்பது இந்நூற் செய்யுட் போக்குக்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

**16.** இன்னிலை : இயற்றியவர் பொய்கையார். இந்நூலைத் தொகுத்தவர் மதுரையாசிரியர் என்னும் சிறப்புப்பெயர் பெற்ற மாறனர் அல்லது நல்லந்துவனராக இருக்கலாம். கடவுள் வாழ்த்துப் பாடியவர்: பாரதம்பாடிய பெருந்தேவனர். அறப்பால் பத்தும் பொருட்பால் ஒன்பதும் இன்பப்பால் பன்னிரண்டும் வீட்டிலக்கப்பால் பதினென்கும் ஆகிய நாற்பத்தைந்து வெண்பாக்களை யுடையது. இந்நூற் செய்யுட்களின் நடையழகு பொருட் சிறப்பு முதலியவற்றை,

“ ஒத்த வுரிமையளா வூடற் கினியளாக்
குற்றம் ஒரூஉம் குணத்தளாக்—கற்றறிஞர்ப்
பேணும் தகையளாக் கொண்கன் குறிப்பறிந்து
பேணும் தகையினள் பெண்.”

என்னும் செய்யுளால் அறியலாம். இதன் பொருள் : ஒத்த உரிமை யுடையவளும், ஊடற்கண் இனிமையுடையவளும், குற்றமற்ற குணங்களையுடையவளும், கற்றவரை யுபசரிக்கும் தன்மையுடைய வளும், கணவனது நோக்கத்தை அறிந்து பணிந்து நடக்கும் குண முடையவளுமானவளே இல்லறம் நடத்தத்தக்க பெண்ணவாள் என்பதாம்.

**17.** முதுமொழிக்காஞ்சியின் ஆசிரியர் மதுரைக் கூடலூர் கிழார். இவர் கடைச்சங்கப்புலவருள் ஒருவர்போலும். வேளாள வருணத்தினர். புலத்துறைமுற்றிய கூடலூர்கிழாரெனச் சிறப் பித்துக் கூறப்பெற்றவர்.

இந்நூல் ‘ சிறந்த பத்து ’ முதல் ‘ தண்டாப் பத்து ’ ஈருகப் பத்துப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவற்றுள்,

“ நலனுடை மையின் நாணுச் சிறந்தன்று.” (1 : 6)

பொருள் : அழகிலும் நாணம் சிறந்தது.

“ கற்ற துடைமை காட்சியி னறிப.” (2 : 4)

பொருள் : ஒருவன் கல்வியை அவன் அறிவினல் அறியலாம்.

“ நிறையச் செய்யாக் குறைநிலை பழியார்.” (3 : 5)

பொருள் : வெளிப்படை.

"கொண்டுகண் மாறல் கொடுமையிற் றுவ்வாது." (4 : 7)

**பொருள் :** நட்புச்செய்தபின் நண்பனுக்குக் கண்ணேட்டம் காட்டாமை கொடியது.

"ஈரமில் லாதது கிளைநட் பன்று." (5 : 3)

**பொருள் :** மனத்தின்கண் அன்பில்லாதது சுற்றமுமன்று நட்புமன்று.

"நசையிற் பெரியதோர் நல்குர வில்லை." (6 : 7)

**பொருள் :** ஆசையின் மிக்க வறுமையில்லை.

"காலமறி யாதோன் கையுறல் பொய்." (7 : 4)

**பொருள் :** காலமறிந்து முயற்சி செய்யாதவன் பயனடையான்.

"உறழ்வெய் யோருக் குறுசெரு வெளிது." (8 : 2)

**பொருள் :** கலகப் பிரியருக்குச் சண்டை எளிது.

"சொற்செல் லாவழிச் சொலவுநல் கூர்ந்தன்று." (9 : 7)

**பொருள் :** தன் சொல் செல்லாவிடத்துச் சொல்லியசொல் வறுமையுறும்.

"இன்பம் வேண்டுவோன் துன்பந் தண்டான்." (10 : 7)

**பொருள் :** இன்பத்தை விரும்பிய ஒருவன் துன்பத்தைத் துன்பமென்று களையான்.

என்பன ஓரோர் எடுத்துக்காட்டாகும்.

**18.** ஏலாதி இயற்றியவர் கணிமேதையார். இந்நூல் கடவுள் வாழ்த்து, சிறப்புப் பாயிரம் உட்பட எண்பத் திரண்டு வெண்பாக்களை யுடையது. ஏலாதி என்பது, திரிகடுகம் என்பது போன்று ஒருவகை மருந்தின் பெயராகும். இம்மருந்து ஏலம் முதலிய ஆறு சரக்குக்களால் ஆக்கப்படுவது; ஆயினும் அவற்றுள் சிறந்தது (தாய்ச்சரக்கு) ஏலமாதலின் ஏலாதி என வழங்கலாயிற்று. ஏலாதி உடலுக்கு உறுதி பயப்பதோர் அருமருந்து. அதுபோல உயிர்க்கு உறுதி பயப்பதாதலின் இந்நூலும் ஏலாதி என வழங்கப்பட்டது. இந்நூலுள் ஒவ்வொரு பாடலும் ஆறு பொருளுடையதாக இயற்றப்பட்டிருப்பினும் அவ்வாறனுள் ஒன்று தலைமை வாய்ந்ததாயிருக்கும் என்பதும் குறிப்பாற் கொள்ளத்தகும்.

"பொய்யுரையான் வையான் புறங்கூறான் யாவரையும்
மெய்யுரையான் உள்ளனவும் விட்டுரையான்—எய்யுரையான்
கூந்தன்மயி லன்னாய் குழீஇயவான் விண்ணோர்க்கு
வேந்தனும் இவ்வுலகம் விட்டு."

என்பது இந்நூற் செய்யுளுள் ஒன்று. இச்செய்யுளிற் கூறப்பட்ட பொருள் ஆறனுள்ளும் பொய்யாமை சிறந்ததென்பது கூறுதே விளங்கும். இன்ஞேரன்ன அரும்பொருள்கள் செறிந்த பாடல்கள் பல இந்நூலில் விரவிக் கிடக்கின்றன.

இதுகாறும் கூறியவற்ருல் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களைப் பற்றிய செய்திகள் ஓரளவு புலனுகும்.

## தமிழர் வாழ்க்கைக் குறிப்புக்கள்

இதுகாறுங் கூறப்பெற்ற சங்க நூல்களிலிருந்து தமிழ் மக்களுடைய வாழ்க்கைக்குறிப்புக்கள் பலவற்றை அறியலாம். அவற்றுள் கீழ்வருவன சிலவாகும்.

சங்ககாலத்தமிழர் தெய்வநம்பிக்கையுடையவர்; சைவம், வைணவம், பௌத்தம், சமணம் முதலிய பல சமயங்களைச் சார்ந்தவர்; உழைப்பும் ஊக்கமும் மிகுந்தவர்; பயிர்த்தொழில் கைத்தொழில்களில் வல்லுநர்; உள்நாட்டு வாணிகத்திலும் அயல்நாட்டு வாணிகத்திலும் தேர்ந்தவர்; காதல் வாழ்க்கையில் திளைத்தவர்; ஆடவர் பெண்டிர் என்ற வேறுபாடின்றிக் கல்வி கற்றவர்; கல்வியின் பயனை நன்கு அறிந்தவர்.

தமிழ்வீரர் மானத்தைப் பெரிதெனக் கருதியவர்; நாட்டுப் பற்று மிக்கவர்; மறக்குடி மக்கள் வீரத்தையே பெரிதென மதித்தனர்; புறப்புண்படுதலை நாணினர்.

தமிழ்வேந்தர் தம்மாலியன்ற அளவு தம் குடிகளுக்குப் பல வழிகளிலும் நலத்தைச் செய்தனர். பஞ்சகாலங்களில் வரி நீக்கினர். தம் நாட்டையும் குடிகளையும் காப்பதே கடனெனக் கொண்டு வாழ்ந்தனர். தம் உயிரையும் விடுத்துச் செங்கோல் முறையைக் காத்தனர். புலவர் அறிவுரைகளைப் போற்றினர். இயற்றமிழ்ப் புலவரையும் இசைத்தமிழ்ப் பாணரையும், நாடகத் தமிழ்க் கூத்தரையும் ஆதரிக்குமுகத்தான் முத்தமிழையும் பேணி வளர்த்தனர். வீரத்தையும் மானத்தையும் தம் இருகண் என மதித்தனர்.

சங்ககாலப் பெண்மணிகள் அறிவுநலம் பெற்றிருந்தனர். அவருள் ஔவையார், நப்பசலையார் முதலிய புலமைவாய்ந்த பெண்மணிகளும் இருந்தனர். இக்காலத்தில் நமது விஜயலட்சுமி பண்டிதர் அரசியற்றூதராக விளங்குவதுபோலச் சங்ககாலத்தில் ஔவையார் அதிகமானுக்கு அரசியற்றூதராக விளங்கினுர் என்பது இங்கு நினைவுகூரத்தக்கது.

சங்ககாலப் புலவர்கள் அஞ்சாநெஞ்சினர். தவறு கண்ட விடத்து அரசருக்கும் இடித்துரைக்கும் ஆற்றல் வாய்ந்தவர். பேகன் வரலாறும் வெள்ளைக்குடிநாகனர் அறிவுரையும் கோவூர் கிழார் நல்லுரையும் இதற்கு ஏற்ற சான்றுகளாகும். "புலவர் பாடாது வரைக என் நிலவரை" எனப் பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் தன் சூளுரையிற் கூறினன் எனின், அக்காலப் புலவர்பெருமக்கள் தமிழ்வேந்தரிடம் பெற்றிருந்த பெருமதிப்பை என் என்பது! இங்ஙனம் மன்னரால் மதிக்கப்பெற்ற இந்நல்லிசைப் புலவர் பாக்களே சங்ககாலத் தமிழக வரலாற்றைக் காட்டப் பெருந்துணை புரிகின்றவை என்று கூறுதல் முற்றிலும் பொருத்தமாகும்.

---

# இடைக்கால இலக்கியம்

## (கி. பி. 301—1300)

## (இரண்டாம் நாள் சொற்பொழிவு)

அறிஞர்களே! நேற்று என்னுடைய சொற்பொழிவில் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், மணிமேகலை, பதினெண்கீழ்க்கணக்கு முதலியவை சங்க நூல்கள் என்றும், சங்ககாலம் ஏறத்தாழ, கி. மு. 300 முதல் கி. பி. 300 வரை கொள்ளலாம் என்றும் கூறினேன்; புறநானூறு முதலிய ஒவ்வொரு நூலிலும் சொல்லப்பட்டுள்ள செய்திகளை ஒருவாறு சுட்டிக்காட்டினேன்; இறுதியில் சங்ககாலத் தமிழ்மக்களுடைய தொழில்களையும், நல்லியல்புகளையும் சுருக்கிக் கூறினேன்; இன்று இடைக்காலத் தமிழிலக்கியத்தைப்பற்றி ஒருவாறு பேசுவேன்.

### இடைக்காலம் எது?

தமிழகத்தின் பெரும்பகுதியை ஏறத்தாழ, கி. பி. 300 முதல் 900 வரை பல்லவர் ஆண்டனர். அதன் பிறகு தென்னிந்தியா முழுவதையும் அடிப்படுத்திச் சோழப் பேரரசர் ஏறத்தாழக் கி. பி. 900 முதல் 1300 வரை ஆண்டனர். இந்த மரபினர் இருவருடைய ஆட்சிக் காலத்தையும் (அதாவது கி. பி. 300 முதல் 1300 வரை உள்ள காலத்தை) இடைக்காலம் என்று யான் கொண்டுள்ளேன். இப் பரந்துபட்ட காலத்தைப் 'பல்லவர் காலம்' என்றும் 'சோழர் காலம்' என்றும் இரண்டாகப் பிரித்துக் கொள்ளலாம்.

### பல்லவர் காலம் (கி. பி. 300–900)

கடைச்சங்க காலத்திற்குப் பிறகு தொண்டை நாடும், சோழ நாட்டின் பெரும்பகுதியும் பல்லவர் என்னும் புதிய அரசமரபினர் ஆட்சிக்கு உட்பட்டன. 'பல்லவர் தமிழரல்லர்; பாரசீகநாட்டிலிருந்து வந்தவர்' என்னும் கொள்கை இப்பொழுது ஆராய்ச்சியாளரிடை வலுத்து வருகின்றது. அதற்கு ஏற்ப கி. பி. 300 முதல் ஏறத்தாழ, கி. பி. 600 வரையில் தொண்டைநாட்டை ஆண்ட பல்லவர்கள், சோழர்—பாண்டியர் முதலியோருடன் ஓயாது போரிட்ட வண்ணம் இருந்தனர். இந்நூற்றுண்டுகளில் அவர்கள்

நிலையாகக் காஞ்சியிலிருந்து அரசாளமுடியவில்லை என்பது பல்லவர் பட்டயங்களாலேயே அறியலாம். கந்தவர்மன் முதலிய பல்லவ அரசர்கள் பிராகிருதமொழியில் பட்டயங்களை வெளியிட்ட னர். பின்வந்த கந்தசிஷ்யன் முதலிய பல்லவர்கள் தங்கள் பட்டயங்களை வடமொழியில் வெளியிட்டனர். இந்த முந்நூறு வருடகாலத்துப் பல்லவருள் ஒருவரேனும் தமிழில் பட்டயம் வெளி யிடவில்லை. கி. பி. 600-க்குப் பின் வந்த பல்லவர்காலத்தில் வல்லம், திருத்தணிகை முதலிய இடங்களில் தமிழ்க் கல்வெட்டுக்கள் காணப் படுகின்றன. மகேந்திரவர்மனுடைய கல்வெட்டுக்கள் குடுமியான் மலைவரையிலும் காணப்படுவதைக் கொண்டு, அவனது ஆட்சி, சோழநாட்டின் பெரும்பகுதியைக் கவர்ந்திருந்தது என்பது தெரி கிறது. கி. பி. 9-ஆம் நூற்றுண்டின் கடைப்பகுதியில் அபராஜித வர்மன் என்னும் பல்லவனைக் கொன்று ஆதித்தசோழன் சோழப் பேரரசை நிலைநாட்டினன். இந்த 600 வருடகாலம் தமிழக வரலாற்றின் அமைதியான காலம் அன்று. தென்னிந்தியாவில் பேரரசராக இருந்த பல்லவர், மேற்கே கங்கர், கதம்பர், சாளுக்கி யர், இராஷ்டிரகூடர் என்பவருடனும், தெற்கே சோழ பாண்டிய ருடனும் ஓயாது போரிடவேண்டியவராயினர். இத்தகைய குழப்ப நிலையாலும், பல்லவர் அந்நியராதலாலும், அவராட்சியில் தமிழிலக் கியம் மிகுதியாக வளரவில்லை.

மேலும், சமணமும் பௌத்தமும் நான்கு, ஐந்து, ஆறும் நூற் றுண்டுகளில் தமிழகம் முழுவதும் பரவிச் சைவ-வைணவ சமயங் களின் செல்வாக்கைப் பெரிதும் குறைத்தன. தென்னுட்டு அரசர் களும் (சோழரைத் தவிர) இப்புதிய மதங்களை ஆதரித்தனர். இதனல் இந்நூற்றுண்டுகளில் பாலி மொழியிலும் வடமொழியிலும் எழுதப்பட்ட சமண பௌத்த நூல்கள் தமிழகத்தில் பரவின.

கி. பி. 7-ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் அப்பரும் சம்பந் தரும் சமண பௌத்த சமயங்களின் செல்வாக்கைப் பெரிதும் குறைத்த பிறகே தமிழ்நாட்டில் சைவம் தலைதூக்கலாயிற்று. இவ்வாறே வைணவமும் ஆழ்வார்கள் பிரசாரத்தால் தலைநிமிரலா யிற்று. சமணரும், பௌத்தரும் செல்வாக்குப் பெற்றிருந்த நான்கு, ஐந்து, ஆறும் நூற்றுண்டுகளில் அவர்கள் மதுரையில் வைத்து வளர்த்த தமிழ்ச்சங்கத்திலே பல தமிழ்நூல்கள் தோன்றின; குண்டலகேசி, வளையாபதி, நீலகேசி, சூளாமணி முதலிய காப்பியங்கள் தோன்றின என்று கூறலாம். கி. பி. ஏழு, எட்டு, ஒன்பதாம் நூற்றுண்டுகளில் நாயன்மார்கள் அருளிச்செய்த திருமுறைகளும், ஆழ்வார்கள் அருளிச்செய்த நாலாயிர திவ்யப்

பிரபந்தமும் தோன்றின. மூன்றும் நந்திவர்ம பல்லவன் காலத்தில் நந்திக்கலம்பகம், பாரத வெண்பா என்னும் நூல்கள் பிறந்தன.

பல்லவர்காலத்திலேதான் தமிழகத்தில் வடமொழி நூல்கள் மிகுதியாகப் பரவின. வடமொழி யாப்பிலக்கணம் தமிழ்ப்புலவரிடை செல்வாக்குப்பெற்றது. அதன் பயனாய் விருத்தப்பா முதலிய பாவினங்கள் தமிழில் பரவலாயின. சமண, பௌத்த, வைதிக மதங்களின் செல்வாக்கால் வடமொழிச்சொற்கள் மிகுதியாகத் தமிழில் பரவின. இவ்வேறுபாடுகளால், தமிழ்ச்செய்யுளின் நடை வேறுபட்டது ; பாக்களும் வேறுபட்டன. இதிகாச புராணகதைகள் சங்க இலக்கியங்களில் இடம்பெற்றதைவிடப் பிற்காலத் தமிழிலக்கியங்களில் மிகுதியாக இடம்பெறலாயின.

## சோழர்காலம் (கி. பி. 900–1300)

பல்லவரை வென்று தென்னிந்தியாவில் சோழப் பேரரசை ஏற்படுத்திய விசயாலயன் முதலிய சோழ மன்னர்கள் வழிவழிச்சைவராதலால், நாயன்மாரால் நிலைநாட்டப்பெற்ற சைவசமயத்தைக் கண்ணும் கருத்துமாகப் பாதுகாக்கலாயினர். எனினும் வைணவம் முதலிய பிறசமயங்களையும் மனமார ஆதரித்தனர். இப் பரந்த கொள்கையால் எல்லாச் சமயத்தவரும் இலக்கியவளர்ச்சியில் ஈடுபட்டனர். சைவத்திருமுறைகள் மேலும் வளர்ந்தன ; சைவ சித்தாந்த சாத்திரங்கள் தோன்றின. நாலாயிர திவ்யப்பிரபந்தத் திற்கு விளக்க உரைகள் தோன்றின. சீவக சிந்தாமணி என்ற பெருங்காவியம் சமணமுனிவரான திருத்தக்கதேவரால் பாடப் பெற்றது. கலிங்கத்துப்பரணி, மூவர்உலா, குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ், அம்பிகாபதிக்கோவை என்பன தோன்றின. வாடாத மலர்மாலை போல அனைவர் உள்ளங்களையும் கவர்ந்துள்ள கம்பராமாயணமும் இக்காலத்திலேதான் கம்பர் என்னும் கவிஞர்பெருமானால் பாடப்பெற்றது.

நாயன்மார்களும் ஆழ்வார்களும் வாழ்ந்த பல்லவர் காலத்தில் தென்னாட்டுக் கோயில்களெல்லாம் பெரும்பாலும் அழிந்துவிடக் கூடிய செங்கல், மண், சுண்ணாம்பு, மரம் இவற்றால் கட்டப்பட்டிருந்தன. பின்வந்த சோழப் பேரரசர் அக்கோயில்களில் பெரும்பாலானவற்றைக் கருங்கற்களால் கட்டிமுடித்தனர். ஒவ்வொரு கோயிலிலும் பூசையும் விழாக்களும் நடைபெற ஏற்பாடுசெய்தனர். நிலங்களை மானியமாக விட்டனர். அரசர் முதல் ஆண்டி ஈறாக அக்கால மக்கள் அனைவருமே கோயில்களுக்குப் பல நிபந்தங்கள்

விடுத்தனர். இச்செய்திகளையெல்லாம் அக்கோயில்களில் பொறிக்கப்பட்டுள்ள ஆயிரக்கணக்கான கல்வெட்டுக்கள் நமக்கு உணர்த்துகின்றன. இன்று அச்சிடப்படாது அழிந்துபோன பல நூல்கள் சோழர்காலத்தில் செய்யப்பட்டனவாக இக் கல்வெட்டுக்களில் பொறிக்கப்பட்டுள்ளன.

## இடைக்கால இலக்கியம்

இப்பரந்துபட்ட காலத்தில் செய்யப்பட்ட இலக்கிய நூல்களை நாம் நான்கு பிரிவாகப் பிரிக்கலாம். அவை (1) திருக்குறள் ஒழிந்த பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், (2) சமய நூல்கள், (3) காவிய நூல்கள், (4) பிரபந்த நூல்கள் என்பன. இனி இவற்றை முறையே காண்போம்.

(1) திருக்குறள் ஒழிந்த நீதிநூல்களைக் குறித்துப் பதினெண் கீழ்க்கணக்கு என்ற பிரிவில் முன்பே கூறிவிட்டேன்.

## சமய நூல்கள்

இத்தலைப்பில் (1) பௌத்த நூல்கள் (2) சமண நூல்கள் (3) சைவ நூல்கள் (4) வைணவ நூல்கள் என நான்குவகையாகச் சமய நூல்களைப் பிரிக்கலாம்.

### 1. பௌத்த நூல்கள்

குண்டலகேசி, சித்தாந்தத் தொகை, திருப்பதிகம், விம்பசார கதை என்பன இக்காலத்திற் செய்யப்பட்ட பௌத்த இலக்கியங்கள் என்னலாம். இந்நூல்கள் அனைத்தும் இறந்துபட்டன. இனி இவற்றின் விவரம் வருமாறு :—

**1.** குண்டலகேசி தர்க்கவாயிலாகச் சமணம், வைதிகம் முதலிய சமயங்களைக் கண்டிப்பதாகும். இந்நூல் விருத்தங்களாலும் கலிப்பாக்களாலும் இயன்றது. இந்நூலாசிரியர் நாதகுத்தனர் என்பவர். இக்காவியத் தலைவி சுருண்ட மயிருடையவளாதலால் ‘ குண்டலகேசி ’ எனப்பட்டாள். இவள் புத்தர் காலத்தில் வடநாட்டில் வாழ்ந்திருந்த ஒரு பெண்துறவி. இவள் இராஜகிருக நகரத்தை ஆண்ட அரசனது அமைச்சன் மகள் ; கொலைக் குற்றவாளி ஒருவனைக் காதலித்து மணந்து கொண்டாள். பின்பு அவர்களுக்குள் மனவெறுப்பு ஏற்பட்டது. இவள் கணவன் இவளைக் கொல்லத் துணிந்து, ஒரு மலையுச்சிக்கு அழைத்துச் சென்றான். அவன்கருத்தை உணர்ந்த இவள் அவனை மலையுச்சியிலிருந்து

தள்ளி இறக்கச்செய்தாள். பின்னர் உலகவாழ்க்கையில் வெறுப் புற்றுச் சமணத்துறவியானாள்; சமய சாத்திரங்களையும், தர்க்க நூல்களையும் கற்றுத் தேர்ந்து, பல ஊர்களுக்கும் சென்று சமய வாதம் செய்யலானாள். அவள் இறுதியில் சாரிபுத்தரிடம் வாதத்தில் தோல்வியடைந்தாள்; அதனால் புத்தரிடம் உபதேசம் பெற்று, பௌத்த பிட்சுணி ஆனாள். இதுவே குண்டலகேசியின் வரலாறு. இந்நூற் செய்யுட்கள் சில, 'புறத்திரட்டு' என்னும் நூலிலும், தொல் காப்பிய உரை, யாப்பருங்கலவிருத்தியுரை, வீரசோழியவுரை என்ப வற்றிலும் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன. அவையனைத்தும் சீரிய செந்தமிழ் நடையில் இயன்றவை.

**2.** சித்தாந்தத் தொகை: இது பௌத்த சமயக்கொள்கை களைத் தொகுத்துக் கூறும் நூல். இதன் ஆசிரியர் பெயர் தெரிய வில்லை. சிவஞானசித்தியாருக்குத் தத்துவப்பிரகாசர் வரைந்த உரையில் (பரபக்கம்-2-சௌத்திராந்திகன் மதம் - 31-ஆம் பாட்டின் உரை) இந்நூற் செய்யுள் ஒன்றினை மேற்கோளாகக் காட்டியுள்ளார்.

"மருள்தரு மனம்வாய் மெய்யிற் கொலைமுதல் வினைபத் தாமே" என்பது சித்தாந்தத்தொகை." என்று நீலகேசி, புத்த வாதச் சருக்கத்தில் (64-ம் செய்யுளுரையில்) கூறப்பட்டுள்ளது.

**3.** திருப்பதிகம்: சிவஞானசித்தியார் (பரபக்கம்: சௌத் திராந்திகன் மதம் - 2-ம் செய்யுள்) உரையில் 'எண்ணிகந்த' என்று தொடங்கும் செய்யுள் மேற்கோளாகக் காட்டப்பட்டு, 'இது திருப்பதிகம் எனக்கொள்க' என்று குறிப்பிடப் பட்டுள்ளது. இந் நூலைப் பற்றி வேறொன்றுந் தெரியவில்லை.

**4.** விம்பசார கதை: இந்நூலும் இப்பொழுது கிடைக்க வில்லை. விம்பசாரன், புத்தர் காலத்தில் வாழ்ந்த மகதநாட்டு அரசன்; புத்தருடைய சீடன். இவனது வரலாற்றைக் கூறுவதே இக்காவியம். நீலகேசி உரையாசிரியர் விம்பசார கதையிலிருந்து நான்கு அடிகளை மேற்கோள்காட்டி, "இது விம்பசார கதை என்னும் காவியம்; பௌத்தருடைய நூல்; அதன்கண் கண்டு கொள்க" என்று குறித்துள்ளார். நீலகேசி உரையாசிரியர் காட்டி யுள்ள நான்கு அடிகள்

"உலும்பினி வனத்துள் ஒண்குழைத் தேவி
வலம்படு மருங்குல் வடுநோ யுறுமல்
ஆன்றோன் அவ்வழித் தோன்றினன் ஆதலின்
ஈன்றோள் ஏழ்நாள் இன்னுயிர் வைத்தாள்."

என்பனவாகும்.

வீரசோழியம் என்னும் இலக்கணநூலைச் செய்த புத்த மித்திரரும் இவ்விடைக்கால பௌத்த ஆசிரியரே யாவர்.

## 2. சமண நூல்கள்

**1. வளையாபதி:** இது ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்று. இக் காவியத்தின் பாடல்கள் சில 'புறத்திரட்டு' என்னும் நூலிலும், சிலப்பதிகார உரையிலும், யாப்பருங்கலவிருத்தி யுரையிலும் காட்டப்பட்டுள்ளன. கிடைத்துள்ள பாடல்களில் திருக்குறளில் காணப்படும் சொற்களும் சொற்றொடர்களும் எடுத்து ஆளப்பட்டிருத்தலைக் காணலாம். இக்காவியச்செய்தி, ஆசிரியர் பெயர் முதலியவற்றை அறிந்துகொள்ள வழியில்லை. இன்று நமக்குக் கிடைத்துள்ள இக்காவியச் செய்யுட்கள் எளிமையும், இனிமையும் பொருந்தியனவாகக் காணப்படுகின்றன. சான்றாக ஒரு செய்யுளைக் கூறுவேன்.

> "பொறையிலா அறிவு போகப் புணர்விலா இளமை மேவத்
> துறையிலா வனச வாவி துகிலிலாக் கோலத் தூய்மை
> நறையிலா மாலை கல்வி நலமிலாப் புலமை நன்னர்ச்
> சிறையிலா நகரம் போலும் சேயிலாச் செல்வ மன்றே."

யாப்பருங்கலக்காரிகை, யாப்பருங்கலம் என்னும் இரண்டையும் செய்த அமிதசாகரரும் இக்காலப் பகுதியில் வாழ்ந்த சமண ஆசிரியரே.

**2. பெருங்கதை:** இந்நூல் வடஇந்தியாவில் கௌசாம்பி நகரத்தில் அரசாண்ட உதயணன் என்னும் வீரனைப்பற்றியவரலாறு. இந்நூலை இயற்றியவர் 'கொங்குவேள்' என்பவர். இவர் காலம் ஏறத்தாழ கி. பி. 7-ஆம் நூற்றாண்டு என்னலாம். இந்நூல் சமணச் சார்புடையது. இது மணிமேகலை போல அகவற்பாவால் இயன்றது. இதன்கண் ஊழின்வலி, அமைச்சர் சூழ்ச்சித்திறன், அரசாட்சி முறை, நண்பர் கடமை, நீத்தார்பெருமை, சமணசமயக் கொள்கைகள், விமானமூர்தல், இசைச்சிறப்பு, நாவிதனிலக்கணம் முதலிய பிறவும் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. இந்நூலில் மேற் சொல்லப் பட்டவை தவிரப் பலவகை அம்பலங்கள், ஆண் பெண் கல்விமுறை, அரண்மனைகள், கோட்டைகள், படைகள், உடைகள், அணிகள், கைத்தொழில்கள், நடனம், ஓவியம், சிற்பம், பலவகை மாலைகளைக் கட்டும்கலை, விழாக்கள், கோயில்கள் முதலிய பலதிறப்பட்ட செய்திகளைப்பற்றிய விளக்கங்களும் காணப்படுகின்றன.

**3. நீலகேசி:** இந்நூல் முன் சொல்லப்பட்ட குண்டலகேசிக்கு எதிராகச் சமணரால் எழுதப்பட்டது. இந்நூலாசிரியர் பெயரும் காலமும் தெரியவில்லை. இந்நூல் சமண சமயத்தை உயர்த்திப் பேசும் தருக்கநூலாகும். குண்டலகேசியைப் போல நீலகேசி என்னும் சமணப் பெண்மணி சமயவாதம் செய்வதில் வல்லவளாய், பௌத்தம், ஆசீவகம், சாங்கியம், வைசேடிகம், வேதம் முதலிய பல நெறிக் கொள்கையுடையவரோடு சமயவாதம் செய்து, சமணமே உயர்ந்தது என்று நிலைநாட்டியதாக இந்நூற் செய்திகளால் அறியக் கிடைக்கிறது. இந்நூலில் தருமவுரைச் சருக்கம், குண்டலகேசி வாதச்சருக்கம், அருக்க சந்திர வாதச் சருக்கம், மொக்கலவாதச்சருக்கம், புத்தவாதச்சருக்கம், ஆசீவக வாதச்சருக்கம், சாங்கியவாதச்சருக்கம், பூதவாதச்சருக்கம், வைசேடிகவாதச்சருக்கம், வேதவாதச்சருக்கம் என்னும் பத்துச்சருக்கங்கள் இடம்பெற்றுள்ளன. இந்நூலுக்குச் சமயதிவாகர வாமன முனிவர் என்பவர் மிகச் சிறந்த உரை வரைந்துள்ளார். இவ்வுரை சமயதிவாகர விருத்தி எனப் பெயர்பெறும். இவ்வுரையாசிரியர் காலம் ஏறத்தாழ கி. பி. 14-ஆம் நூற்றுண்டு என்னலாம்.

**4. சூளாமணி:** இதுவும் சமணக் காப்பியம். இது வடநாட்டு அரசன் திவிட்டன் வரலாற்றைக் கூறுவது. இதன் செய்யுட்கள் விருத்தப்பாவில் இயன்றவை. இதனைச் செய்தவர் தோலாமொழித்தேவர் என்பவர். இந்நூற் செய்யுட்கள் எளிமையும், இனிமையும் வாய்ந்தவை. இது பன்னிரண்டு சருக்கங்களையுடையது.

**5. உதயணகுமாரகாவியம்:** இந்நூல் முன்சொன்ன உதயணன் வரலாற்றை விருத்தப்பாவில் கூறுவது. இது 367 செய்யுட்களை உடையது. இதன் செய்யுட்கள் எளிய நடையில் இயன்றவை.

**6. யசோதர காவியம்:** இந்நூல் ஐந்து சருக்கங்களையும், 320 செய்யுட்களையும் உடையது. இதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இந்நூல் மாரிதத்தன் என்னும் இராசமாபுர மன்னனுக்கு உயிர்ப்பலி தீயது என்பதை அறிவுறுத்தற் பொருட்டு, யசோதரன் என்பவனுடைய பல பிறப்புக்களைப் பற்றிச் சொல்லப்பட்ட கதையாகும். யசோதரனது கதை கேட்ட மாரிதத்தன், துறவுபூண்டு, தவம்செய்தனன் என்பது வரலாறு. இதன் செய்யுட்கள் மிக எளிய நடையின.

சான்றாக,

"மாதரார் எனைய ரேனும் வதையினுக் குரிய ரல்லர்;
பேதைதான் இவனும் பெண்ணின் அனையனே; பிறிதும் ஒன்றுண்டு
ஏதிலார் மன்னர் சென்னி யிடுதலுக் கரிய வாளின்
தீதுசெய் சிறுபுன் சாதி சிதைத்தலுந் திறமன் றென்றான்."

என்பது காண்க.

7. **சீவக சிந்தாமணி :** இது ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்று. ஏமாங்கத நாட்டு அரசனான சீவகன் வரலாற்றை விரித்துக் கூறும் இக்காவியம், விருத்தப்பாவினால் செய்யப்பட்டது. இந்நூல் 13 இலம்பகங்களை உடையது; மூவாயிரத்துக்கு மேற்பட்ட பாடல்களைக் கொண்டது. இதன்கண் சீவகன் செய்துகொண்ட பல மணங்களும் அவற்றிற்குரிய காரணங்களும் நன்கு விளக்கப்பட்டுள்ளன. ஒன்பதுவகைச் சுவைகளும் மிகப் பொருத்தமாக அமைந்துள்ளன. மயிற்பொறியில் பறந்து செல்லுதல்; இசையின்பம், இல்லறவின்பம், ஐந்திணைச்சிறப்பு, பகைவரை வெல்லும் உபாயங்கள் முதலியன நன்கு பேசப்பட்டுள்ளன. இத்தாலிநாட்டில் வெஸுவியஸ் எரிமலையால் 'பாம்பியை' நகரம் அழிந்த வரலாற்றை ஆங்கிலங் கற்றார் அறிவர். அந்நகரக் கோயில்களில் தெய்வச் சிலைக்குப் பின்னால் மறைந்திருந்து பத்தர்கள் வேண்டுதலைக் கேட்டு, 'அவ்வாறே வரங்கொடுத்தோம்' என்று குருமார் கூறுதல் வழக்கம். இவ்வழக்கம் சிந்தாமணியில் சுரமஞ்சரியார் இலம்பகத்தில் பேசப்பட்டிருப்பது,

"மட்டவிழ் கோதை பெற்றாய் மனமகிழ் காத லானை
இட்டிடை நோவ நில்லா தெழுகென ஏந்தல் தோழன்
பட்டிமை உரைத்த தோராள் பரவிய தெய்வந் தன்வாய்
விட்டுரைத் திட்ட தென்றே வேற்கணாள் பரவி மீண்டாள்."

என்பதனால் விளங்கும்.

8. **நரிவிருத்தம் :** திருத்தக்கதேவர் ஐம்பது செய்யுட்களையுடைய இந்நூலையும் பாடியுள்ளார். வாழ்க்கையின் நிலையற்ற தன்மையும், வாழ்க்கையின்பமும் இதில் பேசப்படுகின்றன. இளமை, யாக்கை, செல்வம் இவற்றின் நிலையாமை விளக்கப்பட்டுள்ளன; கொலை, களவு, கோபம், பற்றுள்ளம், பொய்கூறுதல், புலால் உண்ணல் முதலியன கடியப்படுகின்றன.

9. **மேருமந்தர புராணம் :** இந்நூல் மேரு மந்தரர் என்னும் கணதரர் வரலாறுகளைக் கூறுதலால் இப்பெயர் பெற்றது. இதனை

இயற்றியவர் வாமனுசாரியர் என்பவர். இந்நூல் பன்னிரண்டு சருக்கங்களையும், 1406 செய்யுட்களையும் உடையது; சமணர் கொள்கைகளும், சமய நம்பிக்கைகளும் இந்நூலில் மிகுதியாகப் பேசப்படுகின்றன.

இவ் விலக்கிய நூல்களே யன்றி இவ்விடைக்காலச் சமண ஆசிரியருள் குணவீரபண்டிதர் என்பவர் 'நேமிநாதம்' என்னும் இலக்கண நூலையும், பவணந்தி முனிவர் 'நன்னூல்' என்னும் இலக்கண நூலையும் இயற்றினர்; திவாகரர் என்பவர் 'திவாகரம்' என்னும் நிகண்டையும், பிங்கலர் என்பவர் 'பிங்கலந்தை' என்னும் நிகண்டையும் செய்தனர்.

## 3. சைவ நூல்கள்

சைவத்திருமுறைகள் பன்னிரண்டும் சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கும், கந்த புராணம் முதலிய சைவ நூல்களும் இவ்விடைக் காலத்தைச் சேர்ந்தவை. இவற்றில் காலத்தால் முற்பட்டது திருமந்திரம்.

**1. திருமந்திரம் :** இது மூவாயிரம் செய்யுட்களை உடையது; திருமூலர் என்னும் சைவப் பெரியாரால் எழுதப்பெற்றது. இதனில் ஒன்பது தந்திரங்கள் உள்ளன. இந்நூலில் யாக்கைநிலையாமை முதலிய அறிவுரைப் பகுதியும், பலவகை யோகப் பயிற்சிகளும், சிவ சத்தி வழிபாட்டுமுறைகளும், சமயபேதங்களும், சரியை முதலிய மார்க்கங்களும், அடியார்பெருமை சிவபூசை முதலியனவும், ஐந்தெழுத்தின் சிறப்பும், இறைவன் திருக்கூத்திலக்கணமும், பிறவும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினான்கும் தோன்றுவதற்குமுன் சைவசமய முழுமுதல் நூலாக விளங்கியது திருமந்திரமேயாகும். திருமூலர், திருவாவடுதுறையில் யோகத்திலிருந்து இந்நூல் செய்தார் என்பது மரபு. இதற்கு ஏற்ப ஆவடுதுறைக் கோயிலுள் இவருக்குத் தனிக்கோயில் அமைந்துள்ளது. திருமந்திரம் பத்தாம் திருமுறை எனப்படும். திருமூலர், சம்பந்தருக்கு முற்பட்டவர் என்பது அறிஞர் கருத்து.

**2. அப்பர்தேவாரம் :** இது 4, 5, 6-ஆம் திருமுறைகளாகத் தொகுக்கப்பட்டுளது. கலையறிவினுலும் சைவப்பற்றினுலும் பண்பட்ட உள்ளமுடைய திருநாவுக்கரசர் பல பதிகங்கள் பாடிக்கொண்டு தலயாத்திரை செய்துவந்தார் என்பது பெரிய புராணத்தால் அறியக்கிடக்கிறது. இவருடைய பாடல்களில் இயற்கையழகு மிகுதியாக இடம்பெறவில்லை; இவரது சிவபத்தியும், அனுபவமும், இறைவனைப்பற்றிய தோத்திரங்களும், சிவபிரானைப்பற்றிய புராண

இதிகாசச் செய்திகளுமே மிகுதியாக இடம்பெற்றுள்ளன. தாண்டகம், விருத்தம் முதலிய புதிய செய்யுள் வகைகளை இத் திருமுறைகளில் காணலாம். அப்பர் தம் வரலாற்றைத் தம் பதிகங்களில் படிப்பவர் மனம் உருகும்படி பாடியிருத்தல் இவரது அனுபவ முதிர்ச்சியை நன்கு விளக்குகிறது.

**3. சம்பந்தர் தேவாரம் :** முதல்மூன்று திருமுறைகளாக வகுக்கப்பட்டுளது. ஈரடிமேல் வைப்பு, மாலை மாற்று, சக்கர மாற்று, திருஇயமகம், திருமுக்கால் முதலிய பல பாவகைகள் சம்பந்தர் திருமுறைகளில் இடம்பெற்றுள்ளன. சம்பந்தர் பதிகங்களில் இயற்கை வருணனைகளை நிரம்பக் காணலாம்.

" புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி யறிவழிந்திட் டைம்மேலுந்தி
அலமந்த போதாக அஞ்சேலென் றருள்செய்வான் அமருங் கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட முழவதிர மழையென் றஞ்சிச்
சிலமந்தி யலமந்து மரமேறி முகில்பார்க்குந் திருவை யாறே."

என்னும் பாடலில் இயற்கை வருணனை மிளிர்தல் காண்க.

சம்பந்தர் ஒவ்வொரு பதிகத்திலும் சமணரையும் பௌத்தரையும் கண்டித்துப் பாடியுள்ளமை இவர் காலத்துச் சமயப் போராட்டத்தை நன்கு விளக்குவதாகும். அப்பர் வழிபட்ட தமிழ் நாட்டுத் திருப்பதிகளைவிட மிகுதியான தலங்களைச் சம்பந்தர் வணங்கிப் பாடியிருக்கின்றார். மறையவர் வீடுகள்தோறும் பெண்கள் கழங்கு பந்து அம்மனை முதலியவற்றை ஆடும் பொழுதும், சிவபெருமான் சிறப்பினைப் பாடுதல் மரபு என்பது போன்ற பல செய்திகளைச் சம்பந்தர் திருமுறைகளால் அறிந்து இன்புறலாம்.

" பெருந்தடங்கண் செந்துவர்வாய்ப் பீடுடைய
மலைச்செல்வி பிரியா மேனி
அருந்தகைய சுண்ணவெண்ணீ றலங்கரித்தான்
அமரர்தொழ அமருங் கோயில்
தருந்தடக்கை முத்தழலோர் மனைகள்தொறும்
இறைவனது தன்மை பாடிக்
கருந்தடங்கண் ணார்கழல்பந் தம்மானைப்
பாட்டயருங் கழுமலமே "

என்பது அப்பாடலாகும். திருமயிலைப் பதிகத்திலிருந்தும், வேறு சில பதிகங்களிலிருந்தும் கபாலீச்சரம் போன்ற பெரிய கோயில்

களில் மாதந்தோறும் திருவிழாக்கள் நடைபெற்றுவந்தன என்பதை அறியலாம்.

4. சுந்தரர் தேவாரம்: இது "ஏழாம் திருமுறை" எனப் படும். சுந்தரர் காலத்தில் சமயப் போராட்டம் பெரிதும் குறைந்து விட்டதாதலால், இவருடைய பாக்களில் புறச்சமயக் கண்டனம் இல்லை. ஏறத்தாழ, இவர் பாடிய, ஆயிரம் பாடல்களிலிருந்து இவ ருடைய வரலாற்றை ஒருவாறு அறியலாம்; ஒவ்வொரு தலத்தை யும் பற்றிய சில குறிப்புக்களையும் அறியலாம். இவருடைய பாக்கள் செந்தமிழ் நடையும் சுவை மிகுதியும் கொண்டவை. தலத்தைப் பற்றிய இயற்கையழகை வருணிப்பதில் சுந்தரர் மிகச் சிறந்தவர்.

" அரும்பருகே சுரும்பருவ அறுபதம்பண் பாட
அணிமயில்கள் நடமாடும் அணிபொழில்சூ ழயலின்
கரும்பருகே கருங்குவளை கண்வளருங் கழனிக்
கமலங்கள் முகமலருங் கலயநல்லூர் காணே."

" அரும்புயர்ந்த அரவிந்தத் தணிமலர்க ளேறி
அன்னங்கள் விளையாடும் அகன்துறையி னருகே
கரும்புயர்ந்து பெருஞ்செந்நெல் நெருங்கிவிளை கழனிக்
காளுட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே."

இவ் விருபாட்டுக்களும் இயற்கை வருணனைக்கு நல்ல எடுத்துக் காட்டுக்களாகும். நாட்டுப் பிரிவுகள், பலவகை ஆறுகளின் சிறப்பு, கோயிற் பண்டாரம் ஆகியவை பற்றியும், அடியார் பலரைப் பற்றியும் சுவை பயக்கும் பல செய்திகளைச் சுந்தரர் பதிகங்களி லிருந்து அறியலாம்.

சுருங்கக் கூறின், 'தேவாரம்' என்று சொல்லப்படும் முதல் ஏழு திருமுறைகளிலிருந்து கி. பி. 7, 8, 9-ஆம் நூற்றாண்டுகளில் தமிழகத்தில் இருந்த சிவன்கோயில்கள், சைவசமயக் கொள் கைகள், சைவப் பிரசாரம், பிறசமயக் கொள்கைகள், கோயில் களில் வளர்ச்சி பெற்ற இசை—நடனக் கலைகள், பல தலங்களின் இயற்கை வருணனைகள், தமிழ் நாட்டில் உள்ள ஆறுகள், அக்கால நாட்டுப் பிரிவுகள், சைவ அடியார்களைப் பற்றிய குறிப்புக்கள், இதிகாச புராணக் கதைகள், அக்காலப் பழமொழிகள், அரசர், சேனைத் தலைவர் போன்ற சிலரைப் பற்றிய செய்திகள் முதலிய வற்றை ஆராய்ச்சியுணர்வுடன் படிப்பவர் அறிதல் கூடும்.

இவை யனைத்திற்கும் மேலாக அக்கால இசைத்தமிழ் வளர்ச்சி

யையும், தமிழில் 'பண்கள்' இருந்தன என்பதையும் அறிந்து கொள்ளவும், இன்று தமிழிசையை விளக்கத்துடன் வளர்க்கவும், டாக்டர் ஆர். கே. சண்முகஞ் செட்டியாரவர்கள் தலைமையில் 'பண்' ஆராய்ச்சி நடத்தவும் பேருதவியாக இருப்பவை இத்திரு முறைகளே என்பதையும் அறிஞர்களாகிய நீங்களே நன்கு அறி வீர்கள். இத்திருமுறைகளின் மதிப்பை உள்ளவாறுணர்ந்து இவற் றைப் பொன்னேபோற் போற்றுதல் நமது கடமையாகும்.

**5. திருவாசகம் :** திருவாசகத்தைச் செய்த மாணிக்க வாசகர் கி. பி. மூன்றும் நூற்றுண்டினர் என்பது சிலர் கொள்கை. சிலர் கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டினர் என்று கூறுகின்றனர். இந்த இருதிறத்தாரும் காட்டும் காரணங்களை ஆராய்கையில் மாணிக்கவாசகர் கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டைச் சேர்ந்தவராக லாம் என்பது என்னுடைய கருத்து. 'திருவாசகத்திற்கு உருகா தார் ஒரு வாசகத்திற்கும் உருகார்' என்னும் முதுமொழியின் உண்மையை நாம் அனைவரும் அறிந்திருக்கிறோம். இந்நூல் சிவ புராணத்தையும், மூன்று அகவல்களையும், அந்தாதித் தொடையாற் பாடப்பெற்ற திருச்சதகத்தையும், பெண்கள் நீராடல், மலர்கொய் தல், உந்தி, அம்மானை, ஊசல், தோள்நோக்கம், சாழல் முதலிய வற்றை இடமாகக்கொண்ட பல பதிகங்களையும், குயிற்பத்து, கிளிப் பத்து, திருப்பள்ளியெழுச்சி முதலியவற்றையும் கொண்டுள்ளது. சுருங்கக் கூறின், திருவாசகம் இனிய செஞ்சொற்கள் அமையப் பெற்றது; கனிவு மிகுந்தது; பொருள் நயம் செறிந்தது; மன வுருக்கத்தை விளைப்பது. இந்நூலில் உள்ள இச் சீரிய நலங்களை நன்கு அனுபவிக்க விரும்புபவர் மகாமகோபாத்தியாய பண்டித மணி மு. கதிரேசச் செட்டியார் அவர்களின் திருவாசக விளக்க வுரையைப் படித்து இன்புறுவாராக.

**6. திருக்கோவையார் :** இதுவும் மணிவாசகரால் அருளிச் செய்யப்பட்டது. இப்போது உள்ள கோவை நூல்களில் பொரு ளாலும், நடையாலும், தொன்மையாலும் தலைசிறந்தது என்று இதனைக் கூறலாம். இதன் பொருட்சிறப்பினைப் பேராசிரியர் உரைகொண்டு நன்கறியலாம். இதில் பேரின்பக்கருத்தும் சிற்றின் பக்கருத்தும் பொதிந்திருக்கின்றன. இந்நூல் கட்டளைக்கலித்துறை யில் செய்யப்பட்டது; நானூறு துறைகளையுடையது; செய்யுட்கள் இனிய–எளிய தமிழ்நடையில் இயன்றவை.

இவ்விரண்டும் எட்டாந் திருமுறை என வழங்கப்படும்.

**7. ஒன்பதாம் திருமுறை :** இத்திருமுறை திருமாளிகைத் தேவர், சேந்தனர், கருவூர்த்தேவர், பூந்துருத்திநம்பிகாடவநம்பி,

கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார், புருடோத்தமநம்பி, சேதிராயர் என்னும் ஒன்பதின்மர் பாக்களைக் கொண்டது. இவர்களுடைய பாடல்களில் பத்திச்சுவை காணப்படும் அளவு இலக்கியச் சுவை காணப்படவில்லை. எனினும், சில பாக்கள் பொருட்சுவை மிகுந்து காணப்படுகின்றன. மகளிரிடம் வைக்கும் காதலில் நூறாயிரத்தில் ஒரு பங்கு அன்பு கடவுளிடம் செலுத்துவோர் நன்னெறியடைவர் என்னும் கருத்தமைந்த கருவூர்த்தேவர் பாடல் நமது கருத்தைக் கவர்வதாகும். அது,

" தத்தையங் கனையார் தங்கண்மேல் வைத்த
தயாவைநூ றாயிரங் கூறிட்
டத்திலங் கொருகூ றுன்கண் வைத்தவருக்
கமருல களிக்குநின் பெருமை
பித்தனென் றொருகாற் பேசுவ ரேனும்
பிழைத்தவை பொறுத்தருள் செய்யும்
கைத்தலம் அடியேன் சென்னிமேல் வைத்த
கங்கைகொண் டசோ ளேச்சரத் தானே."

என்பதாம். இத்திருமுறையுள் சில பாடல்கள் சிவபெருமானிடத்துக் காதல்கொண்ட ஒரு பெண்ணின் தாய் கூறும் முறையில் அமைந்துள்ளன. சான்றாக,

" சேவேந்து வெல்கொடி யானே என்னும்
சிவனேயென் சேமத் துணையே என்னும்
மாவேந்து சாரல் மகேந்தி ரத்தில்
வளர்நாயகா இங்கே வாராய் என்னும்
பூவேந்து மூவா யிரவர் தொழப்
புகழேந்து மன்று பொலிய நின்ற
கோவே என்னும் குணக்குன்றே என்னும்
குலாத்தில்லை அம்பலக் கூத்தனையே "

என்னும் பாடலைக் காண்க.

**8. பத்தாம் திருமுறை:** முன்னே யான் சொன்ன திருமந்திரம் பத்தாம் திருமுறை என்று சொல்லப்படும்.

**9. பதினோராம் திருமுறை:** இதனுள் திருஆலவாயுடையார், காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர்கோன் நாயனார், சேரமான்பெருமாள் நாயனார்; நக்கீரதேவர், கல்லாடனார், கபிலதேவர், பரணதேவர், இளம்பெருமானடிகள், அதிராவடிகள், பட்டினத்துப் பிள்ளையார், நம்பியாண்டார்நம்பி என்பவர் பாடல்

கள் அடங்கியுள்ளன. இதன் முதலில் சிவபெருமான் பாணபத் திரருக்குப் பாடிக்கொடுத்த திருமுகப் பாசுரம் வைக்கப்பட்டுள்ளது. அடுத்து, காரைக்காலம்மையார் பாடிய திருவாலங்காட்டுத் திருப் பதிகங்கள் இரண்டும், திரு இரட்டைமணிமாலை ஒன்றும், நூற் றொரு வெண்பாக்கள் அடங்கிய அற்புதத்திருவந்தாதி ஒன்றும் சேர்க்கப்பட்டுள்ளன. அடுத்து ஐயடிகள் பாடிய க்ஷேத்திர வெண்பா காணப்படுகிறது. ஒவ்வொரு வெண்பாவிலும் ஒவ் வொரு தலத்தைக் குறிப்பிட்டு, அத்தலத்தை வழிபடுமாறு நெஞ்சிற்கு அறிவுறுத்துவதாக இவ்வெண்பாக்கள் பாடப்பட்டுள் ளன. அடுத்து, சேரமான்பெருமாள்நாயனூர் பாடிய பொன்வண் ணத்தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை, திருக்கயிலாய ஞான வுலா என்பன காணப்படுகின்றன. எளியநடையில் அமைந்த செய்யுட்களே இம்மூன்று நூல்களிலும் இருக்கின்றன. திருக் கயிலாய ஞானவுலா, உலா நூல்களில் சிறந்தது. நக்கீர தேவர் செய்த கயிலைபாதி – காளத்திபாதி – அந்தாதி, திருவீங் கோய்மலை யெழுபது, திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, திரு வெழு கூற்றிருக்கை, பெருந்தேவபாணி, கோபப்பிரசாதம், காரெட்டு, போற்றித் திருக்கலிவெண்பா, திருமுருகாற்றுப்படை, திருக்கண்ணப்பதேவர் திருமறம் என்னும் பத்துச் சிறுநூல்களும் இத்திருமுறையுள் சேர்க்கப்பட்டுள்ளன. இந்நூல்களில் பெரிய புராண அடியார் சிலரைப்பற்றிய குறிப்புக்களும், கண்ணப்ப ருடைய வரலாறும், சிவபெருமான் சிறப்பும், பிறவும் அறியக் கிடக்கின்றன. இவற்றை அடுத்து, கல்லாடதேவ நாயனுர் பாடிய திருக்கண்ணப்பதேவர் திருமறம் காணப்படுகிறது. இது முப்பத்தெட்டு வரிகளையுடைய அகவற்பா. இதனை அடுத்து, கபில தேவநாயனுர் அருளிச்செய்த மூத்தநாயனுர் திரு இரட்டைமணி மாலை, சிவபெருமான் திரு இரட்டை மணி மாலை, சிவபெருமான் திருவந்தாதி என்பன உள்ளன. இப் பாடல்களில் இடைமருது, ஆரூர், ஒற்றியூர், தில்லை முதலிய தலங்கள் குறிக்கப்பட்டுள்ளன. இவற்றை அடுத்துப் பரணதேவர் பாடிய சிவபெருமான் திருவந் தாதி உள்ளது.

இளம்பெருமான் அடிகள் அருளிச் செய்த சிவபெருமான் திரு மும்மணிக் கோவையும், அதிரா அடிகள் அருளிச் செய்த மூத்த பிள்ளையார் திரு மும்மணிக் கோவையும் அடுத்துக் காணப் படுகின்றன. இவை அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறை என்னும் மூன்று பாமணிகளால் இயன்றவை. இவற்றை அடுத்து, பட்டினத்துப்பிள்ளையார் செய்த கோயில் நான்மணிமாலை,

திருக்கழுமலமும்மணிக்கோவை, திருவிடைமருதூர் மும்மணிக் கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது என்னும் சிறு நூல்கள் வைக்கப்பட்டுள்ளன. கோயில் நான்மணிமாலையில் அடிகள் இறைவனைப் பார்த்து,

"......................................நின்
தமர்பெயர் எழுதிய வரிநெடும் புத்தகத்து
என்னையும் எழுத வேண்டுவன்."

என்று கூறிய அடிகளின் கருத்து நினைந்து இன்புறத் தக்கது. 'ஆபு' (Abuben Adam) என்பவன் தன் அறையுள் தோன்றிய தேவதூதனைப் பார்த்து, "உனது புத்தகத்தில் ஒரு புதிய ஏட்டைப் புரட்டி, அதில் மக்களை நேசிப்பவர் பெயர்களை எழுது. அப்பட்டியலில் என் பெயரையும் சேர்த்துக்கொள்," என்று கூறிய தாக ஆங்கிலத்தில் ஒரு பாடல் உண்டு. அப்பாடற் கருத்து மிகப் பிற்பட்டது. அதே கருத்தினைப் போன்ற ஒன்றைத் தமிழிற் காண்பது மிகுந்த உள்ளக் கிளர்ச்சியைத் தருகின்றதன்றோ?

திருக்கழுமல மும்மணிக் கோவையில் இறைவனது சிறப்பும், சம்பந்தர் வரலாற்றுக் குறிப்பும் காணப்படுகின்றன. திருவிடை மருதூர் மும்மணிக்கோவையில், "உழப்பின் வாரா உறுதிகள் உளவோ?" என்று தொடங்கும் அகவல் சிறந்த கருத்தினை உடையது. மேலும், இச்சிறுநூலில் பிற சமயத்தார் செயல்களும், சைவர் வாழ்க்கையும், வரகுணன் பத்திச் சிறப்பும் நன்கு விளக்கப் பட்டுள்ளன. இவருடைய சிறுநூல்களில் நாயன்மார் பலருடைய வரலாற்றுக் குறிப்புக்களும், கடம்பூர், காரிக்கரை, சிராமலை முதலிய சிவதலப் பெயர்களும் பிறவும் குறிக்கப்பட்டுள்ளன.

நம்பியாண்டார் நம்பி என்னும் சைவப் பெரியார் செய்த சிறு நூல்கள் இத்திருமுறையின் இறுதியிலே இடம் பெற்றுள்ளன. இவர் கூத்தப்பெருமான் மீது கோயில் திருப்பண்ணியர் விருத்தம் என்பதையும், விநாயகர்மீது இரட்டைமணிமாலையை யும், திருஞானசம்பந்தர் மீது திருவந்தாதி, திருவுலா மாலை, திருக்கலம்பகம், திருத்தொகை என்பவற்றையும், திருநாவுக் கரசர் மீது திரு ஏகாதச மாலையையும் செய்துள்ளார்; இவற்றோடு, நாயன்மார் அறுபத்துமூவர் வரலாறுகளையும் சுருக்கமாகப் பாடி யுள்ளார். அந்நூலின் பெயர் திருத்தொண்டர் திருவந்தாதி என்பது. அது சுந்தரர் அருளிய திருத்தொண்டத் தொகையைப் பின்பற்றி அமைந்துள்ளது. இப்பெரியார் சம்பந்தரைப் பற்றிப் பாடியிருப்பவை சேக்கிழார் பாடிய சம்பந்தர் புராணத்திற்குப்

பெருந்துணைசெய்தன. இவ்வாறே, இவர் பாடிய திருத்தொண்டர் திரு அந்தாதியே பெரிய புராணத்திற்கு அமைந்த மூலநூல்களுள் தலையாயது என்று கூறலாம். இவ்வாசிரியர் முதல் இராசராச சோழன் காலத்தவர். அவ்வரசன் வேண்டுகோளின்படி திரு முறைகளை வகுத்தார் என்பது வரலாறு. இப்பதினோராந் திரு முறையில் தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் அந்தாதி, மும்மணிக் கோவை, இரட்டைமணி மாலை, நான்மணி மாலை, கலம்பகம், உலா, மாலை முதலியன இடம் பெற்றிருத்தல் நோக்கத் தக்கது. சங்ககால நூல்களில் காணப்படாத பாவினங்களும், பிரபந்த வகைகளும் இவ்விடைக்காலத்தில் பெருகிவிட்டன என்பது இங்கு அறியத்தகும்.

**10. பன்னிரண்டாம் திருமுறை :** இது திருத்தொண்டர் புராணம் என்றும், பெரிய புராணம் என்றும் பெயர் பெறும். இது, முன்சொன்ன திருத்தொண்டத் தொகை, திருத்தொண்டர் திருவந்தாதி இவற்றைத் தழுவிச் செய்யப்பட்ட நூலாகும். இதன்கண், 4000-க்கு மேற்பட்ட பாடல்கள் உள்ளன. இது சைவ இலக்கியத்தில் சிறந்த நூலாகும். இதனைச் செய்தவர் குன்றத் தூர்ச் சேக்கிழார். இவர் கி. பி. 12-ஆம் நூற்றாண்டின் முற் பகுதியில் சோழப்பெருநாட்டையாண்ட இரண்டாம் குலோத்துங்க சோழனுடைய முதல் அமைச்சர் ஆவர். பொறுப்பு வாய்ந்த அப் பதவியில் இருந்ததாற்றான், இவர் நாயன்மார் வரலாறுகளைத் தக்க சான்றுகள் கொண்டு கூற முற்பட்டார் ; நாயன்மார் வாழ்ந்த தலங்களையும், அவ்வத்தலத்தில் வழங்கப் பெற்ற அவரவர் வரலாற் றுச் செய்திகளையும் கேட்டறிந்தார். பாடல் பெற்ற எல்லாத் தலங் கட்கும் சென்று மீண்டார் ; இயன்றவரை கோயிற் கல்வெட்டுக் களையும் துணையாகக் கொண்டார். பௌத்த—சமண சமயக் கொள்கைகளையும் நன்கு அறிந்தார். இவ்வாறு பல உண்மை களையும் சேர்த்துக் கொண்ட பின்னர்த் தமது பெரும் புலமைத் திறனால், அனைவரும் படித்து அனுபவிக்குமாறு எளிய செந்தமிழ் நடையில் பெரிய புராணத்தைப் பாடி முடித்தார். தாமஸ் கார்லைல் என்ற ஆங்கிலேயர், பெரியார் பிரடரிக் (Frederic the Great) என்னும் ஜெர்மானிய மன்னனது வரலாற்றை எழுத, ஜெர்மனி சென்று உண்மைகளைத் திரட்டியது போலவே நம் சேக்கிழாரும் தம் புராணத்திற்குரிய உண்மைகளை நாடெங்கும் சென்று திரட்டினர் என்று கூறுதல் தவறாகாது. சிறுத்தொண்டர் வரலாற்றில் வாதாபிப் படையெடுப்பும், அப்பர் வரலாற்றில் ' குணபரன் ' என்ற பல்லவன் பெயரும் குறிக்கப்பட்டுள்ளன.

இவ்விரண்டையும் கொண்டுதான் அப்பர், சம்பந்தர் வாழ்ந்த காலம் கி. பி. ஏழாம் நூற்றாண்டு என்று ஆராய்ச்சியாளரால் துணியப்பட்டது. இந்நூலில் கூறப்படும் நாயன்மார் பல்வேறு நாட்டினர்; பல்வேறு ஊரினர்; பல்வேறு மரபினர்; பல்வேறு தொழிலினர். ஆதலின் இவர்களைப் பற்றிய புராணங்களில் அவ்வந் நாட்டுச் சிறப்பும், ஊர்ச் சிறப்பும், மரபு விளக்கமும், தொழில் துறைகளும் நன்கு விளக்கப்பட்டுள்ளன. கண்ணப்பர் புராணத்தில் வேடர்சேரி வருணனையும், திருநாளைப் போவார் புராணத்தில் புலைச்சேரி வருணனையும், அதிபத்தர் புராணத்தில் நுளைச்சேரி வருணனையும் அவ்வச் சேரிகளின் உண்மை நிலையை விளக்குவன. திருக்குறிப்புத் தொண்டர் புராணத்தில் தொண்டை நாட்டுச் சிறப்பு ஏறத்தாழ 110 பாக்களில் கூறப்பட்டிருத்தலைக் காணலாம். தமிழகத்து ஆறுகள், மலைகள், காடுகள், சோலைகள் இன்ன பிறவும் பெரிய புராணத்தில் சிறப்புறப் பேசப் பட்டுள்ளன. புல்லாங்குழலைச் செய்யும்முறையும், இசை, நடனம், மருத்துவம், வானநூல் முதலியவை பற்றிய பல விவரங் களும் இப் புராணத்தில் இடம்பெற்றுள்ளன. தொல்காப்பியம், திருக்குறள் முதலிய சங்க நூல்களையும், இறையனுர் களவியலுரை சீவகசிந்தாமணி முதலிய நூல்களையும், தமக்கு முற்பட்ட சைவத் திருமுறைகளையும் சேக்கிழார் நன்குகற்ற பெரும்புலவர் என்பதை அவருடைய பாக்கள் தெளிவுறத் தெரிவிக்கின்றன. முதல் ஏழு திருமுறைகளிலும் அவர் சிறந்த பயிற்சியும் ஆராய்ச்சியும் உடையவர் என்பதை, அவர் பாடிய தடுத்தாட் கொண்ட புராணம், திருநாவுக்கரசர் புராணம், திருஞானசம்பந்தர் புராணம், ஏயர் கோன் புராணம், வெள்ளானைச் சருக்கம் இவற்றிலிருந்து நன்கு அறியலாம்.

பெரியபுராணம், சிலப்பதிகாரத்தையும் மணிமேகலையையும் போலத் தமிழ்நாட்டு மக்களைப் பற்றியநூல்; அக்காலத் தமிழ்ச் சமுதாயத்தைப் படம்பிடித்துக் காட்டும் கண்ணுடி; பல்லவர் காலத்துச் சமயநிலையை நன்குவிளக்கும் கருவிநூல். இந்நூலின் சிறப்பினை மேலும் நன்கு அறிய விரும்புவோர், சிவக் கவிமணி, சி. கே. சுப்பிரமணிய முதலியார் எழுதி வெளியிட்டுள்ள பெரிய புராண உரை விளக்கத்தையும், டாக்டர் மா. இராசமாணிக்கனுர் எழுதி வெளியிட்டுள்ள பெரிய புராண ஆராய்ச்சி என்னும் நூலை யும் படித்துப் பயன் பெறுவாராக.

**11. கந்தபுராணம்:** இந்நூல் வடமொழியில் உள்ள கந்த புராணத்தின் ஒரு பகுதியாகிய சங்கரசங்கிதையிற் கூறப்படும்

முருகக்கடவுள் வரலாற்றைக் கூறுவது. இது பதினாயிரத்துக்கு மேற்பட்ட செய்யுட்களையுடையது. இதனை இயற்றியவர் காஞ்சியில் வாழ்ந்த கச்சியப்ப சிவாசாரியர். இந்நூல் ஆறு காண்டங்களை உடையது. இதனில், காவியநயங்கள் பலவும், சைவ சித்தாந்தக் கருத்துக்கள் பலவும், பலவகை வருணனைகளும், நாட்டுச்சிறப்பு, நகரச்சிறப்பு முதலிய பகுதிகளும், போர் முறைகள் முதலியனவும் தெள்ளிதில் விளக்கப்பட்டுள்ளன. தெய்வயானையம்மை திருமணப் படலத்திலிருந்து, ஆசிரியர் காலத்து அணிவகைகளை அறியலாம்.

" மொழியொன்று புகலா யாயின், முறுவலும் புரியா யாயின்,
விழியொன்று நோக்கா யாயின், விரகமிக் குழல்வேன் உய்யும்
வழியொன்று காட்டா யாயின், மனமுஞ்சற் றுருகா யாயின்,
பழியொன்று நின்பாற் சூழும் ; பராமுகம் தவிர்தி, யென்றான்."

என்பது அகத்துறைச் செய்யுள். இதுபோன்ற நயமுடைய செய்யுட்கள் பல இந்நூலில் உள.

**12.** தக்கயாகப் பரணி : இது ஒட்டக்கூத்தரால் இயற்றப் பெற்றது. தக்கன் செய்த யாகத்தைப்பற்றிக் கூறும் இப் பரணியைக் கொண்டு, சோழர் காலத்துச் சைவசமயத்தைப் பற்றி அறியலாம். பைரவர் தங்கள் தலைகளை அரிந்து வழிபட்டமை, சம்பந்தர் முருகனது அவதாரம் என்ற நம்பிக்கை, சைவத்தின் ஆறு பிரிவுகள், சூலமுத்திரை இட்டுச் சைவராக்குதல் முதலியன இந்நூலுட் குறிக்கப்பட்டுள்ளன. சுருங்கக்கூறின், இந்நூலின் மூலமும் உரையும் மிகச் சிறந்தவை எனலாம்.

**13.** கல்லாடம் : இதன் ஆசிரியர் கல்லாடர். இவர் காலம் ஏறத்தாழ கி. பி. ஒன்பது அல்லது பத்தாம் நூற்றாண்டு எனலாம். இவர் மணிவாசகர் பாடிய திருக்கோவையாரின் சிறப்பை உலகிற்கு அறிவிக்க, அதிலிருந்து நூறு செய்யுட்களைத் தெரிந்தெடுத்து, ஒவ்வொன்றின் பொருளையும் ஒரு அகவற்பாவில் அமைத்து நூறு அகவற் பாக்களைப் பாடியுள்ளார். இவர் பாடல்களில் சிவபெருமானுடைய திருவிளையாடல்களும் கூறப்பட்டுள்ளன. அனைத்தையும் உணர்கின்ற பேரறிவு, அனைத்தையும் தன்வயத்து உடைமை, பேரருள் உடைமை, முடிவில்லாத ஆற்றல், தோற்றம் இல்லாத தன்மை, பாசமின்மை, குற்றமற்ற தன்மை, விகாரமின்மை என்னும் சிவனது எட்டுக் குணங்களையும், பிற சைவ சமயக் கருத்துக்களையும் இந்நூலில் ஆங்காங்குக் காணலாம்.

**14.** **சைவ சித்தாந்த சாத்திரங்கள் :** (1) திருவுந்தியார், (2) திருக்களிற்றுப்படியார், (3) சிவஞானபோதம், (4) சிவஞான சித்தியார், (5) இருபாஇருபஃது, (6) உண்மைவிளக்கம், (7) சிவப்பிரகாசம், (8) திருவருட்பயன், (9) வினா-வெண்பா, (10) போற்றிப் பஃறொடை, (11) கொடிக்கவி, (12) நெஞ்சு விடுதூது, (13) உண்மைநெறி விளக்கம், (14) சங்கற்ப நிரா கரணம் என்னும் பதினான்கும் சைவசித்தாந்த சாத்திரங்கள் எனப்படும். இவையனைத்தும் ஏறத்தாழ கி. பி. 1150 முதல் 1320-க்குள் செய்யப்பட்டன ஆகலாம் என்பது ஆராய்ச்சியாளர் கருத்து. இவை ஒவ்வொன்றைப் பற்றியும், காலச்சுருக்கம் கருதி ஓரளவு கூறுவேன்.

**(1) திருவுந்தியார் :** இது சிவஞானபோதத்திற்கு முற் பட்டது. இதனைச் செய்தவர் திருவியலூர் - உய்யவந்த தேவ நாயனார். இச் சிறுநூல் சிவஞானபோதத்தைப் போலச் சித்தாந்தக் கருத்துக்களை முறைப்படி கூறாது, ஆசிரியர்க்கு அவ்வப்போது தோன்றிய உணர்ச்சியனுபவத்தைக் கூறும் 45 செய்யுட்களை உடையது. இவை கடவுள், உயிர், உலகம் என்னும் மூன்று பொருள்களின் இலக்கணத்தையும், பயன்களையும், பயன் அடையும் வழியையும் விளக்குகின்றன.

**(2) திருக்களிற்றுப்படியார் :** இதுவும் சிவஞானபோதத் திற்கு முற்பட்ட நூல். இதன் ஆசிரியர் முன்சொன்ன உய்யவந்த தேவநாயனார் மாணவர்க்கு மாணவரான திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனார் என்பவர். இந்நூல் நூறுவெண்பாக்களை உடையது. இது பொன்னம்பலத்தில் உள்ள திருக்களிற்றுப்படியில் வைக்கப்பெற்றுப் பாராட்டப்பட்டதாதலின், திருக்களிற்றுப்படியார் எனப் பெயர்பெற்றது. இந்நூலில், நாயன்மார் வரலாறுகளிலிருந்து உதாரணங்கள் தந்து வல்வினை, மெல்வினை என்பன தெளி வாக விளக்கப்பட்டுள்ளன. உவமைகளைக் கொண்டு சாத்திர விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. திருக்குறட்பாக்கள் சிலவற்றை மேற்கோளாகக் கொண்டு, அவற்றின்பொருள் விளக்கப் பட்டுள்ளது.

“ வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை யென்றமையால்
வேண்டினஃ தொன்றுமே வேண்டுவது—வேண்டினது
வேண்டாமை வேண்டவரும் என்றமையால் வேண்டிடுக
வேண்டாமை வேண்டுமவன் பால்.” (40)

என்னும் இவ்வெண்பா,

"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்."

என்னும் குறளின் பொருளை நன்கு விளக்குகின்றதல்லவா? இந்நூலில் இறைவன் இலக்கணம், உயிரின் இலக்கணம், இறைவனை அறிந்தோர் இலக்கணம், இறைவனை அடையும் சாதனம் என்பன நன்கு விளக்கப்பட்டுள்ளன.

**(3) சிவஞானபோதம்:** இது சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் தலைசிறந்தது. இதன்கண் சைவசித்தாந்த உண்மைகளை முறையாகக் காணலாம். இது உரைநடைப் பகுதியையும் செய்யுட் பகுதியையும் உடையது. உரைநடைப் பகுதி மேற்கோள்களையும், ஏதுக்களையும் கொண்டது. செய்யுட் பகுதி 12 சூத்திரங்களையும், 81 வெண்பாக்களையும் கொண்டது. இப்பன்னிரண்டு சூத்திரங்களும் "ரௌரவ" ஆகமத்திலுள்ள பன்னிரண்டு வடமொழிச் சூத்திரங்களின் மொழிபெயர்ப்பு என்பது ஒரு சிலர் கருத்து. சைவ சித்தாந்த மகாசமாஜத்தின் செயலாளரா யிருந்த திரு. மா. பாலசுப்பிரமணிய முதலியார் இச் சூத்திரங்கள் மொழிபெயர்ப்பு அல்ல என்பதற்கு 120 காரணங்களைக் காட்டியுள்ளார்.

சிவஞானபோதத்தைச் செய்த மெய்கண்டார் திருவெண்ணெய் நல்லூரினர்; வேளாளர்; கி. பி. 13-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர். இவரது நூலிலுள்ள முதல் மூன்று சூத்திரங்கள் பிரமாண இயல் என்றும், அடுத்த மூன்று சூத்திரங்கள் இலக்கண இயல் என்றும், அடுத்த மூன்று சூத்திரங்கள் சாதன இயல் என்றும், கடைசி மூன்று சூத்திரங்கள் பயன் இயல் என்றும் பெயர் பெறும்.

**பிரமாண இயல்:** பதி, பாசம், பசு என்னும் மூன்றும் உண்மை என்பதை மூன்று சூத்திரங்களால் விளக்குவது. இலக்கண இயல் என்பது பசு, பாசம், பதி என்னும் மூன்றின் இலக்கணங்களை முறையே மூன்று சூத்திரங்களால் விளக்குவது. சாதன இயல் என்பது சாதனம் அடைவதற் குரியவை உயிர்கள் என்பதையும், இறைவன் திருமேனி கொண்டு ஞானம் உணர்த்துவதையும், அவ்வாறு ஞானம் கைவரப்பெற்ற உயிர், ஐந்தெழுத்து ஓதிப் பயன்பெறுவதையும் முறையே மூன்று சூத்திரங்களால் விளக்குவது. பயன் இயல் என்பது பாசநீக்கம், சிவப்பேறு, சிவப்பேற்றினை நிலைநிறுத்த நிகழ்வன இன்னவை என்பவற்றை முறையே மூன்று சூத்திரங்களில்

விளக்கும். இவ்வுண்மைகள் எல்லாம் தர்க்க முறையில் நிலை நிறுத்தப்பட்டுள்ளன.

பிரமாண இயல்: கடவுள் உண்மையும், அவன் எல்லாவற்றையும் ஒடுக்கி மீண்டும் தோற்றுவிக்கும் முழுமுதற் கடவுளாகிய சிவன் என்பதும் முதற்சூத்திரத்தில் கூறப்பட்டுள்ளன. இறைவன் உயிர்களுடன் அத்துவிதமாக நின்று, அவற்றுக்கு வினைப்பயன் ஊட்டும் முறை இரண்டாம் சூத்திரத்தில் குறிக்கப்பட்டுள்ளது. உயிர் சூன்யத்தை அறிவது; பருவுடல், அறிகருவிகள், நுண்ணுடல், பிராணவாயு முதலியவற்றிற்கு வேறானது என்பதும், தானே அறிவதன்றி, உணர்த்த உணர்வது என்பதும், உடற்கரணங்கள் கூடியிருப்பினும் அவற்றிற்கு வேறாய் நின்று அறிவது என்பதும் மூன்றாம் சூத்திரத்தில் சொல்லப்பட்டுள்ளன.

இலக்கண இயல்: உட்கரணங்களாகிய சித்தம், மனம், அகங்காரம், புத்தி என்பவற்றுள் ஒன்று அன்றாய் வேறாய்நிற்பது உயிர். அஃது அநாதி காலமுதலே ஆணவமலத்தால் கட்டுண்டு கிடப்பதாகும். புறக் கருவிகளும் அகக் கருவிகளும் அமைச்சாகவும், உயிர் அரசாகவும் விளங்குவன. இவை அனைத்தும் தொழிற்படுங் காலம், உயிர்கட்கு நனவுநிலை எனப்படும். இவற்றுள் சில குறைந்த காலம் கனவு நிலை எனப்படும்; மேலும் சில கருவிகள் தொழிற்படாத பொழுது உறக்க நிலை எனப்படும்; இவை யாவும் நீங்கி, உயிர் தன்னிலையில் நிற்பது, பேருறக்க நிலை எனப்படும். உயிரின் அகங்காரமும் ஒடுங்கிய நிலை உயிர்ப்புஅடக்கம் எனப்படும். இவையனைத்தும் நான்காம் சூத்திரத்துள் கூறப்பட்டுள்ளன. கருவிகள் அறிவற்றவை யாதலால், தம்மை அறியும் ஆற்றல் அவற்றுக்கு இல்லை; தம்மைச் செலுத்தும் உயிரையும் அவை அறியா. அவை போலவே, உயிரும் தன்னை அறியாது; தன்னைச் செலுத்தும் இறைவனையும் அறியாது என்பது ஐந்தாம் சூத்திரத்தில் குறிக்கப்பட்டுள்ளது. சத்து, அசத்து என்னும் இரு மொழிகட்கும் இலக்கணம் உரைப்பது ஆறாம் சூத்திரம். 'சத்து', என்றும் கேடின்றி விளங்கும் பொருள். எனவே, இறை ஒன்றே அவ்விலக்கணத்திற்கு ஏற்ற இலக்கியமாகும். எனினும், சித்தாந்த சாத்திரங்கள் இறை, உயிர், உலகம் ஆகிய மூன்றும் 'சத்துப் பொருள்கள்' என்றே கொண்டன. அவை முறையே சிவ-சத்து, சத-சத்து, சட-சத்து, என்று குறிக்கப்பட்டன. இவை ஆறாம் சூத்திரத்தில் கூறப்பட்டுள்ளன. எனினும், உயிரும் உலகமும் விகாரமடைபவையாதலால் அசத்தாதல் பெறப்படும்.

சாதன இயல்: சார்ந்த ஒன்றன் தன்மையை அடைதல் உயிரின் சிறப்பிலக்கணமாகும். அஃது அசத்தாகிய உலகத்தையும், சத்தாகிய சிவத்தையும் அறிய வல்லது; அசத்தை விட்டுச் சத்தைப் பற்றவல்லது. என்பது ஏழாம் சூத்திரத்தில் கூறப்பட்டுள்ளது. உயிர்களின் தவத்தால் இறைவன் குருவாக வந்து, பக்குவம் உடையவர்க்கு ஞானத்தை உணர்த்தித் தன்பால் சேர்த்துக்கொள்வன் என்பது எட்டாம் சூத்திரத்தின் பொருள். ஞானம்பெற்றவர் ஐந்தெழுத்து ஓதி ஞானநிலையைக் காக்க வேண்டும் என்பது ஒன்பதாம் சூத்திரத்தின் பொருளாகும்.

பயன் இயல்: ஞானத்தைப் பாதுகாக்கும் உயிர்கள், இறைவன் தம்முடன் ஒன்றுபட்டு நிற்றலால் பாசநீக்கம் பெறும் என்பது பத்தாம் சூத்திரத்தில் குறிக்கப்படுகிறது. இறைவன் உயிர்கட்குத் துணையாக நின்று 'சிவப்பேறு' அல்லது முத்தி நிலையைக் காட்டுவான்; அவை காணும்படி உதவியும் செய்வான் என்பது அடுத்த சூத்திரத்தில் சொல்லப்படுகிறது. முத்தி நிலை கண்ட அடியார் மலநீக்கக் கருத்துடையவராய், அடியாரிணக்கம் உடையவராய், சிவன்கோயிலையும் சிவவேடத்தையும் வழிபடும் உறுதி உடையவராய் நிற்பர் என்பது பன்னிரண்டாம் சூத்திரத்தில் விளக்கப்பட்டுள்ளது.

(4) சிவஞானசித்தியார்: இது சிவஞான போதத்தின் வழி நூல்; பரபக்கம், சுபக்கம் என்னும் இரு பெரும்பிரிவுகளை உடையது. சிவஞான போதத்திலுள்ள அவையடக்கச் செய்யுளை அடிப்படையாகக்கொண்டு பரபக்கம் தோன்றியது. சிவஞான போதத்தில் உள்ள பன்னிரண்டு சூத்திரங்களின் பொருளைப் பன்னிரண்டு அதிகாரங்களில் விரித்துக்கூறுவது சுபக்கம் என்னும் பகுதியாகும். இவ்வரிய நூலைச் செய்தவர் மெய்கண்டார் மாணவருள் முதல்வராகிய அருள்நந்தி சிவாசாரியர் என்பவர்.

சுபக்கத்தில் சிவஞானபோதப் பொருளே விரித்துரைக்கப் படுகிறது. இப்பகுதி 328 செய்யுட்களைக்கொண்டது.

சிவாகமப் பிரமாணங்களை ஒப்புக்கொள்ளாத வைதிகச் சார்புடைய சமயங்கள் 'புறச்சமயங்கள்' என்றும், வைதிகச் சார்பு இல்லாத சமயங்கள் 'புறப்புறச் சமயங்கள்' என்றும் கூறப் பட்டுள்ளன. பட்டாசாரியமதம், பிரபாகரமதம் என்னும் இரு வகை மீமாம்சக மதமும், சத்தப் பிரம்மவாதம், மாயாவாதம், பாற்கரிய வாதம், கிரீடாப் பிரம்மவாதம் என்னும் நால்வகை ஏகான்மவாதமும், பாஞ்சராத்ரம் என்னும் வைணவமதமும் புறச் சமயத்துள் அடங்கும். இவற்றின் சமயக்கொள்கைகளை எடுத்துக்

கூறி, சித்தாந்தத்துடன் முரண்படுவனவற்றை மறுத்து, சித்தாந்தத்தை நிலைநிறுத்துவதே 'பரபக்கம்' என்பது. இப்பகுதி 301 செய்யுட்களையுடையது. புறப்புறச் சமயத்தாருள் உலகாயதரும், சௌத்ராந்திகர் யோகாசாரர் மாத்யமிகர் வைபாடிகர் ஆகிய நால்வகைப் பௌத்தரும், நிகண்டவாதிகள், ஆசீவகர் என்னும் இருவகைச் சமணரும் அடங்குவர். "சிவனுக்கு மேல் தெய்வமில்லை, சித்திக்கு விஞ்சிய நூல் இல்லை" என்னும் பழமொழியாலும் சிவஞான சித்தியாரின் சிறப்பினை நன்கு அறியலாம்.

(5) இருபா இருபஃது: அருள்நந்திசிவாசாரியர் தம் ஞான குருவாகிய மெய்கண்டாரை முன்னிலையாக்கி வினவுதல் போலவும், அவர் விடைகூறுவதுபோலவும் சைவ சித்தாந்தக் கருத்துக்களை இருபது செய்யுட்களில் இந்நூல் கூறுகின்றது. இந்நூலில் ஆணவத்தின் எட்டியல்பும், மாயையின் ஏழு இயல்பும், கர்மத்தின் ஆறு இயல்பும் கூறப்பட்டுள்ளன. சைவத் திருமுறைகளில் உள்ள, "காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே" என்பனபோன்ற அருந்தொடர்களுக்கு, உரிய முறையில் பொருள் விளக்கம் செய்யப்பட்டுள்ளது. சுருங்கக் கூறின், இச்சிறுநூல், சைவ சித்தாந்த வுண்மைகளுடன் ஆசிரியரின் புலமைச் சிறப்பையும் நன்கு புலப்படுத்துவதாகும்.

(6) உண்மை விளக்கம்: இதனைச் செய்தவர் மெய்கண்டாரின் மற்றொரு மாணவரான திருவதிகை—மனவாசகங்கடந்தார் என்பவர். இந்நூல் 53 வெண்பாக்களையுடையது. 36 தத்துவங்களையும், ஆணவம், இருவினைகளின் இயல்பையும், ஆன்மாவின் தன்மையையும், கடவுளின் இயல்பையும், ஐந்தெழுத்தின் உண்மையையும் விளக்கும்படி மாணவர் ஆசிரியரிடம் கேட்க, ஆசிரியர் விடையளிப்பதுபோல இந்நூல் செய்யப்பட்டுள்ளது.

(7) சிவப்பிரகாசம்: இதனைச் செய்தவர் உமாபதி சிவாசாரியர். இவர் 14 சாத்திரங்களுட் சிவப்பிரகாசம் முதலிய எட்டு நூல்களைச் செய்தவர். சிவப்பிரகாசம், சிவஞான போதத்துக்குச் சார்புநூலாகும். இந்நூல் நூறு விருத்தங்களை யுடையது. இதனில் சைவ சித்தாந்த அத்வைத நிலை நன்கு விளக்கப்பட்டுள்ளது. ஆணவம், கன்மம், வினைப்பயன் வரும் வழிகள், மாயையின் பிரிவுகள் என்பன தெளிவாகக் கூறப்பட்டுள்ளன; பல சமயத்தவரின் முத்தி பேதங்கள் வகுத்துக் கூறப்பட்டு, அவற்றினும் மேம்பட்ட தூய்ச் சித்தாந்த முத்தி விளங்கும் முறைமை தெளிவாக்கப்பட்டுள்ளது.

(8) திருவருட்பயன்: இது குறள் வெண்பாக்களால் இயன்

றது ; அதிகாரத்திற்குப் பத்துக் குறள்கள் வீதம் பத்து அதிகாரங்களை உடையது. இறைவனியல்பு, உயிர்நிலை, மலநிலை, அருள் நிலை என்பன போன்ற செய்திகளை இந்நூல் விளக்குகின்றது.

**(9) வினாவெண்பா :** இது 13 பாக்களைக் கொண்டது. உமாபதி சிவாசாரியர் தமது குருவாகிய மறைஞான சம்பந்தரிடம் சித்தாந்த வுண்மைகளைக் கேட்டுத் தெளிவடையும் முறையில் இச்சிறு நூல் அமைந்துள்ளது.

**(10) போற்றிப் பஃறொடை வெண்பா :** இது, இந்நூலாசிரியர் தமது ஞானகுருவைப் பஃறொடை வெண்பாவினால் வாழ்த்திய நூலாகும். இந்நூலில் இறைவனது பரநிலை, அவன் ஐந்தொழில் நடத்தும் திறன், ஆணவத்தின் இயல்பு முதலியன விளக்கப்பட்டுள்ளன.

**(11) கொடிக்கவி :** இது தில்லையில் கொடியேறும் பொருட்டுப் பாடிய நூலாதலின், 'கொடிக்கவி' எனப் பெயர் பெற்றது. இது நான்கு வெண்பாக்களையுடைய மிகச்சிறிய நூல். ஐந்தெழுத்தின் நுட்பம் இறுதி வெண்பாவில் காட்டப்பட்டுள்ளது, படித்து இன்புறத்தக்கது.

**(12) நெஞ்சு விடு தூது :** இது கலிவெண்பாவினால் ஆனது. 129 கண்ணிகளைக் கொண்டது. உமாபதி சிவாசாரியர் தமது நெஞ்சினைத் தமது ஞான குருவிடம் மாலை வாங்கி வரும்படி தூது விடுப்பதாகச் செய்யப்பட்டுள்ளது. இதன்கண் தமது குருவின் சிறப்பையும் சித்தாந்த உண்மைகளையும் ஆசிரியர் குறித்துள்ளார்.

**(13) உண்மை நெறி விளக்கம் :** இந்நூல் ஆறு செய்யுட்களையே உடையது ; தத்துவ ரூபம், தத்துவக் காட்சி, தத்துவ சுத்தி, ஆன்ம வடிவம், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்னும் பத்தையும் இனிது விளக்குகின்றது.

**(14) சங்கற்ப நிராகரணம் :** இது, மாயாவாத மதத்தையும், அகச் சமயங்கள், அகப்புறச் சமயங்கள் என்பவற்றையும் எடுத்து ஓதி மறுத்து, அவற்றிற்கும் சைவ சித்தாந்தத்திற்கும் உள்ள வேறுபாட்டை நுண்ணிதில் உணர்த்துவது.

இச் சாத்திர நூல்கள் ஒவ்வொன்றிலும் சைவ சித்தாந்தக் கருத்துக்கள் சிதறியிருத்தலாலும், சில நூல்களில் உள்ள உண்மைகளை வேறு நூல்கள் நன்கு விளக்குவதாலும், சைவ சித்தாந்தக் கருத்துக்களை முற்றிலும் அறிய விரும்புவார் பதினான்கு சாத்திரங்களையும் படித்தல் இன்றியமையாதது. இச்சாத்திரங்கள் இலக்கிய நயம் செறிந்த செய்யுள் வடிவத்தில் இருத்தலால், புலமையுடை

யோர்க்கு இவை சித்தாந்த அறிவோடு இலக்கியச் சுவையையும் அளிக்க வல்லனவாய் இருக்கின்றன. இவற்றைக் கற்பவர் சித்தாந்தக் கருத்துக்களை அறிவதோடு, பிற சமயக் கருத்துக்களையும் அறிய வாய்ப்பு இருக்கின்றது. இவற்றுடன் இந்நூல்கள் கி. பி. 12, 13, 14-ஆம் நூற்றாண்டுகளில் தமிழகத்தில் வாழ்ந்த பல சமயங்களைப் பற்றிய உண்மைகளையும், சைவப் புலவர்களின் தமிழ்ப் புலமையையும், சமயப் புலமையையும் அறியவும் உதவி புரிகின்றன.

## 4. வைணவ நூல்கள்

**நாலாயிர திவ்வியப் பிரபந்தம்:** தொல்காப்பியர் காலத்திலேயே திருமால், முல்லைநிலக் கடவுளாக வழிபடப் பெற்று வந்தார் என்பது, "மாயோன் மேய காடுறை யுலகமும்" என வரும் சூத்திர அடியால் உணரப்படுகின்றது. இதனைக் கொண்டு, தமிழனுக்குத் திணை வகுக்கும் அறிவு என்று ஏற்பட்டதோ, அன்று முதலே, திருமால், தமிழர் வழிபடும் கடவுளருள் ஒருவரானார் என்பது தெளிவாகும். குறிஞ்சி நிலக் கடவுளாகிய முருகன், நாளடைவில் எல்லா நில மக்களாலும் வணங்கப்பட்டது போல—திருமாலும் நகர மக்களாலும் பிற நில மக்களாலும் வழிபடப்பட்டார் என்பது சிலப்பதிகாரம், மணிமேகலை, மதுரைக் காஞ்சி முதலிய சங்க நூல்களால் அறியலாம். அப்பண்டைக் காலத்திலேயே வஞ்சிமா நகரத்தில் வைணவ வாதி இருந்ததாக மணிமேகலை கூறுவதை நோக்க, ஆழ்வார்களுக்கு முன்னரே வைணவ சமய நூல்கள் இருந்திருத்தல்வேண்டும் என்பது தெளிவாகின்றது. கலித்தொகையிலும் பரிபாடலிலும் சிறப்பாகவும், பிற தொகை நூல்களில் பொதுவாகவும் திருமால் பல இடங்களில் குறிக்கப்பட்டிருத்தலைப் புலவர் பெருமக்கள் நன்கறிவர். திருமாலைப் பற்றிய அவதாரச் செய்திகள் (அஃதாவது, இராமாயண–மகாபாரத–பாகவதச் செய்திகளும், திருமாலின் விசுவரூப விவரங்களும்) சங்க நூல்கள் என்னும் வானத்தில் விண்மீன்களென ஆங்காங்கு ஒளிர்தலை அறிவுடையோர் உணரலாம்.

இங்ஙனம் சங்க காலத்திலேயே நன்னிலையில் இருந்துவந்த வைணவம், பிற சமயங்களால் சைவத்தைப் போலவே தாக்கப்பட்டுப் பின்பு சமய குரவரால் சைவம் தளிர்த்து நாடெங்கும் மறுமலர்ச்சிபெற்றதுபோலவே, ஆழ்வார்களால் மறுமலர்ச்சி பெற்றது.

வைணவம் என்னும் 'போது', மலராகித் தன் மணத்தைத் தமிழ் நாடெங்கும் வீசத் தொடங்கியது. இம் மறுமலர்ச்சிக்குக் காரணராக இருந்த ஆழ்வார்கள் பன்னிருவர் ஆவர். அக்காலத்தில் அவர்களால் பாடப்பெற்ற வைணவத் தலங்கள் 108 ஆகும். அப்பர் முதலிய சைவப் பெருமக்கள் வாழ்ந்த பல்லவர் காலமே ஆழ்வார்கள் வாழ்ந்திருந்த காலமுமாகும். நாயன்மார்கள் எவ்வாறு கோயில்தோறும் சென்று திருப்பதிகம் பாடினார்களோ, அவ்வாறே ஆழ்வார்களும் ஒவ்வொரு கோயிலுக்கும் சென்று அருட் பாடல்களைப் பாடினார்கள். நாயன்மாரைப் போலவே இறைவன் அருமை பெருமைகளை விளக்கிச் சமணம், பௌத்தம் போன்ற பிற சமயங்களில் இருந்த குறைபாடுகளைத் தம் அருட்பாடல்களால் தெளிவாக்கினர். இங்ஙனம் அரும்பாடுபட்டு வைணவத்தை வளர்த்த ஆழ்வார்கள் பன்னிருவரும் பொய்கையார், பூதத்தார், பேயார், திருமழிசையார், நம்மாழ்வார், மதுரகவி, குலசேகரர், பெரியாழ்வார், ஆண்டாள், தொண்டரடிப் பொடியார், திருப்பாணர், திருமங்கையார் என்போராவர். இவர்களுடைய அருட் பாடல்களின் தொகுதியே நாலாயிர திவ்வியப் பிரபந்தம்; இந்நூலின் முதற்பெயர் 'அருளிச்செயல்' எனப்படும்.

முதல் மூன்று ஆழ்வார்களும் ஒரே காலத்தவர் என்பதை, அவர் வரலாறு கூறும் 'குரு பரம்பரை' தெளிவாகத் தெரிவிக்கிறது. பொய்கையார் முதல் திருஅந்தாதியும், பூதத்தார் இரண்டாந் திருவந்தாதியும், பேயார் மூன்றும் திருவந்தாதியும் முறையே பாடியுள்ளனர். இவ் வந்தாதிகள் இயற்பா என்ற பிரிவில் அடங்கியவை; வெண்பா யாப்பினால் இயன்றவை. பொய்கையார் காஞ்சியிலும், பூதத்தார் திருக்கடல் மல்லையிலும் (மகாபலிபுரம்), பேயார் திருமயிலையிலும் பிறந்தவர் என்பது வரலாறு. பூதத்தார்,

> "மாமல்லை கோவல் மதிற்குடந்தை என்பரே
> ஏவல்ல எந்தைக் கிடம்"

எனப் பாடியிருக்கின்றார்.

கி. பி. 630 முதல் 660 வரை காஞ்சியை ஆண்ட வாதாபி கொண்ட நரசிம்ம வர்மன் தன்னை 'மகா மல்லன்' (மாமல்லன்) என்று கூறிக்கொண்டான். பல்லவ நாட்டுத் துறைமுகப்பட்டினமானதும், இன்று மகாபலிபுரம் என அழைக்கப்படுவதுமான கடற்றுறைப்பட்டினம் 'மகாமல்லபுரம்' என மருவியது. அந் நீண்டபெயர், நாகப்பட்டினம் 'நாகை' என மருவியதுபோல, 'மாமல்லை' என மருவியது. அங்ஙனம் மருவிய பெயரையே

பூதத்தாழ்வார் தம் செய்யுளில் குறித்தனர் என்பது நமது இலக்கண அறிவிற்கும், பகுத்தறிவிற்கும், ஆராய்ச்சியறிவிற்கும் பொருத்தமாகக் காணப்படுகிறது. எனவே, பூதத்தாழ்வார் நரசிம்மவர்மனுக்குப் பிற்பட்டவர் என்று கூறுதலே பொருத்தமுடையது. முதலாழ்வார் மூவரும் சம காலத்தவர் என்று கருதப்படுவதால், அவர்கள் காலம் கி. பி. 7-ஆம் நூற்றுண்டின் பிற்பகுதி ஆகலாம் என்று கொள்ளுதல் பெரும்பாலும் பொருந்தும்.

திருமழிசையாழ்வார் மேற்சொன்ன ஆழ்வார்களை அடுத்து வந்தவர் என்பதை அனைவரும் ஒப்புக்கொண்டுள்ளனர். இவர், தொண்டைநாட்டுத் திருமழிசை என்னும் ஊரினர். இவர் நாலாயிரப் பிரபந்தத்துள் திருச்சந்தவிருத்தம், நான்முகன் திருஅந்தாதி என்னும் இரண்டையும் பாடியவர்.

ஆழ்வாருள் நம்மாழ்வார் சிறந்தவர் என்பது வைணவர் கருத்து. இவர் பாண்டியநாட்டினர். குருகூரினர். இவரருளிய பிரபந்தங்கள் திருஆசிரியம், திருவாய்மொழி, திருவிருத்தம், பெரிய திருஅந்தாதி என்பன. இவர் திருவாய்மொழியுள் ஒரு பாடலில், 'வரகுணமங்கையில் இருந்து' என்று குறித்துள்ளார். வரகுணமங்கை என்ற ஊரின் பெயர், வரகுணபாண்டியன் பெயரால் ஏற்பட்டதாகும். பாண்டியர் பட்டியலில் எட்டாம் நூற்றுண்டில் ஒரு வரகுணனும், ஒன்பதாம் நூற்றுண்டில் மற்றொரு வரகுணனும் ஆண்டனராகக்கொண்டாலும், அவ்வூரைப் பாடிய நம்மாழ்வார் காலம் கி. பி. எட்டாம் நூற்றுண்டின் பிற்பகுதி என்று சொல்லலாம்.

**மதுரகவியார் :** நம்மாழ்வார்க்கு அடியவராக இருந்தார் என்று குருபரம்பரை கூறுவதால், இவர் காலம் நம்மாழ்வார் காலமேயாகும். இவரும் பாண்டிய நாட்டினர். திருக்கோளூரினர். இவரருளிய பிரபந்தம் 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' என்பது. இது, கண்ணிநுண்சிறுத்தாம்பு என்று தொடங்குவதால் முதற்குறிப்புக் கொண்டு வழங்கப்பட்டது ; சடகோபரைப் பற்றியது.

**குலசேகர ஆழ்வார் :** கி. பி. 8 அல்லது 9-ஆம் நூற்றுண்டினர் என்று கூறலாம். இவர் பாடிய பாக்கள் 'பெருமாள் திருமொழி' எனப்படும். இவர் சேரநாட்டு மன்னர்.

பெரியாழ்வாரும் அவர் திருமகளாரான ஆண்டாளும் பாண்டிய நாட்டினர். வில்லிபுத்தூரினர். பெரியாழ்வார் காலம் கி. பி. 8-ஆம் நூற்றுண்டு என்பது அறிஞர் கருத்து. எனவே, ஆண்டாள் காலமும் இதுவே ஆகும். பெரியாழ்வார் அருளியவை 'பெரியாழ்வார் திருமொழி', 'திருப்பல்லாண்டு' என்பன.

ஆண்டாள் அருளியவை ‘ திருப்பாவை ’, ‘ நாச்சியார் திருமொழி ’ எனப்படும்.

**தொண்டரடிப் பொடியார் :** திருமங்கையாழ்வார் காலத்தவ ரென்று குருபரம்பரை கூறுகிறது. இவர் ‘ திருமாலை ’, ‘ திருப் பள்ளியெழுச்சி ’ என்னும் இரண்டையும் பாடியுள்ளார். இவர் அவதரித்த ஊர் திருமண்டங்குடி என்பது.

**திருப்பாணாழ்வார் :** உறையூரினர். இவர்காலம் உறுதியாகக் கூறக் கூடவில்லை. இவர் ‘ அமலனாதிபிரான் ’ என்னும் பதிகம் ஒன்றையே பாடியுள்ளார்.

**திருமங்கையாழ்வார் :** சோழநாட்டினர், குறையலூரினர். இவர் இயற்றிய நூல்கள் சிறியதிருமடல், பெரியதிருமடல், திருக் குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, பெரியதிருமொழி என்பன. இவ்வாறினையும் வைணவர்கள் சிறப் புடையனவாகக் கருதுதல் மரபு. இவை யாறும் திருவாய்மொழி யாகிய தமிழ்மறையின் ஆறங்கங்களாகப் பாராட்டப்படுகின்றன. திருமங்கையாழ்வார் இரண்டாம் நந்திவர்மன் காலத்தவர் (கி. பி. 710-775) என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.

நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் பிற்காலப் பிள்ளைத்தமிழ்ப் பருவங்களும், மடல், மாலை, அந்தாதி முதலிய பிரபந்தவகை களும், விருத்தப்பாக்களும், தாண்டகவகையும், பிறவும் இடம் பெற்றுள்ளமை கவனிக்கத்தக்கது. சைவசமய நூல்களில் அமைந் துள்ள புதிய பாவகைகளும், பிரபந்த வகைகளும் இவற்றோடு ஒப்பு நோக்கற்பாலன. பாக்கள் தேவாரப்பாடல்களைப் போலவே எளிய நடையில் – கனிவுமொழியில் அமைந்துள்ளன. ஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவை, மணிவாசகர் அருளிச்செய்த திருவெம்பாவையைப் போலவே, ஆண்டுதோறும் மார்கழித் திங்கள் முழுவதும் வைணவரால் பத்தி சிரத்தையுடன் ஓதப்பட்டு வருகின்றது. திருமழிசையாழ்வார் பாடிய பாடல்களிலும், தொண்டரடிப் பொடியார் பாடல்களிலும் பௌத்தம் முதலிய பிற சமய கண்டனங்கள் காணப்படுகின்றன.

(i) “ அறியார் சமணர் அயர்த்தார் பவுத்தர்
சிறியார் சிவப்பட்டார் செப்பில்—வெறியாய
மாயவனை மாலவனை மாதவனை யேத்தாதார்
ஈனவரே யாதலால் இன்று. ”

(ii) “ வெறுப்பொடு சமணர் முண்டர் விதியில்சாக் கியர்கள் நின்பாற்
பொறுப்பரி யனகள் பேசில் போவதே நோய தாகிக்

குறிப்பெனக் கடைப்பு மாகில் கூடுமேல் தலையை ஆங்கே
அறுப்பதே கருமம் கண்டாய் அரங்கமா நகரு ளானே."

இவை போன்ற பாடல்கள் அக்காலச் சமயப் போராட்டத்தை நமக்கு நன்கு அறிவிப்பனவாகும்.

## வைணவ விருத்தியுரை நூல்கள்

ஆழ்வார்கள் பன்னிருவருள் நம்மாழ்வார் சிறந்தாற் போலவே, ஆழ்வார்கள் அருளிச்செயல்களில் திருவாய்மொழியே சிறந்தது. அதற்குத்தான் ஆறுயிரப்படி, ஒன்பதினுயிரப்படி, பன்னீராயிரப் படி, இருபத்துநாலாயிரப்படி, முப்பத்தாறுயிரப்படி என்னும் ஐந்து உரைகள் உண்டு. இவை ஒன்றற்கொன்று விரிவுரையாக எழுந்தவை. இவ்வுரை வகுத்த பெரியோர்கள் தென்மொழியிலும் வடமொழியிலும் திப்பியப் புலமை சான்றவர்கள்; திருமால் நெறியை மன மொழி மெய்களால் நம்பிப் பின்பற்றியவர்கள். இவ் வைந்து உரைகளில், முப்பத்தாறுயிரப்படியே மிக விரிந்த உரையாகும். இது சொல்நோக்கு, பொருள் நோக்கு முதலியன நன்கு அமையப்பெற்றுக் கற்பவர் உள்ளத்தைக் கவரவல்லது. இந்த விரிவுரைக்கு 'ஜீயர் அரும்பதம்', 'அடைய வளைந்தான் அரும்பதம்' என்னும் இரண்டு குறிப்புரைகளும் உள்ளன.

திருவாய்மொழி முதலிய திவ்வியப் பிரபந்தங்களையும், அவற்றின் சிறப்புப் பொருள்களையும் நம்மாழ்வாரிடம் நேரில் பெற்று, அவற்றை உலகில் பரவச்செய்த பெரியார் நாதமுனிகள் என்பவர். அவருக்குப் பின் அவ்வுரை எம்பெருமானுர் காலம் வரையிலும் கேள்வி வாயிலாகவே வழங்கிவந்தது. எம்பெருமானுர் காலத்திற்றுன் வியாக்கியானம் என்ற பெயரால் நூல் வடிவமாக வெளிவந்தது.

திருவாய்மொழிக்கு முதல் உரையாசிரியர் ஆளவந்தார் என் பவர். இவர் நாதமுனிகளின் பெயரர். எனினும், அவ்வுரையை எழுத்து வடிவத்தில் வெளியாக்கியவர் இராமானுஜரின் மாணவரான **பிள்ளான்** என்பவர். இவ்வுரையே 'ஆறுயிரப்படி' என்றது.

ஆறுயிரப்படி என்பது ஆறுயிரங் கிரந்தங்கள் என்னும் அளவினை உடையது. ஒற்று நீக்கி, உயிரும் உயிர்மெய்யுமாகிய முப்பத்திரண்டு எழுத்துக்களை உடையது ஒரு 'கிரந்தம்' எனப் படும். 'படி' என்பது அளவு என்னும் பொருளை உடையது. எனவே, ஆறுயிரங் கிரந்தங்களை உடையதாக இவ்விரிவுரை செய் யப்பட்டதால், 'ஆறுயிரப்படி' என்னும் பெயரைப் பெற்றது.

திருமாலைப் பற்றிக் கூறும் விஷ்ணு புராணம் ஆறாயிரம் கிரந்தங்களை உடையது. ஆதலால் அத்தொகை அளவிலேயே இவ்விரிவுரையும் செய்யப்பட்டது. இவ்வுரையின் நடையும் பின் வந்த உரைகளின் நடையும் மணிப் பிரவாள நடையில் அமைந்துள்ளன. வடமொழிச் சொற்களும், தென் மொழிச் சொற்களும், முத்தும் பவழமும் கோத்தாற்போல விரவிய நடையே மணிப்பிரவாள நடை என்பது.

ஒன்பதினாயிரப்படியை அருளிச் செய்தவர் நஞ்சீயர் என்பவர்; இராமாநுஜர் மாணவர். தம் ஆசிரியர் பிரமசூத்திரத்திற்கு அருளிச்செய்த விரிவுரை ஒன்பதினாயிரங் கிரந்தங்களை உடையது. ஆதலால் அத்தொகை அளவிலேயே நஞ்சீயர் இவ்விரிவுரையை எழுதி முடித்தார்.

பன்னீராயிரப்படியை அருளிச் செய்தவர் அழகிய மணவாள ஜீயர். பன்னீராயிரம் கிரந்தங்களை உடையது பாகவதம். ஆதலால், அத்தொகை அளவில் இவ்விரிவுரை செய்யப்பட்டது. இவ்வாசிரியர் தீபப்பிரகாசிகை, கீதாசாரம் முதலிய பல நூல்களைச் செய்துள்ளார்.

இருபத்து நாலாயிரப்படி என்னும் விரிவுரையை அருளிச் செய்தவர் பெரிய வாச்சான்பிள்ளை என்பவர். இராமாயணம் இருபத்து நாலாயிரம் சுலோகங்களை உடையது. ஆதலால் அத்தொகையளவில் இவ்விரிவுரை எழுந்தது. இவ்வாசிரியர் திருவாய்மொழி நீங்கிய பிற மூவாயிரம் பாக்களுக்கு விரிவுரை வரைந்துள்ளார். மாணிக்கமாலை, நவரத்னமாலை முதலிய நூல்களும் இயற்றியுள்ளார்.

முப்பத்தாறாயிரப்படியை எழுதி உதவியவர் வடக்குத் திருவீதிப்பிள்ளை என்பவர். பிரமசூத்திரத்திற்கு இராமாநுசர் செய்த விரிவுரையை விளக்கிச் சுதரிசனபட்டர் என்பவர் சுருதப்பிரகாசிகை என்னும் நூலை முப்பத்தாறாயிரம் கிரந்தங்களில் செய்து முடித்தார். அந்த அளவில் இவ்விரிவுரை செய்யப்பட்டதாகும். வரதராசர் எனப்பட்ட நம்பிள்ளை என்பவர் காலட்சேபத்தில் அருளிச் செய்த இவ்விரிவுரையை வடக்குத் திருவீதிப்பிள்ளை நாள்தோறும் எழுதி முடித்தார். இது, 'ஈடு' என வழங்கப்பட்டது. இது சுருதப் பிரகாசிகையை ஒத்திருத்தலால் இதனை 'ஈடு' என வழங்கினர் எனவும், தன்னைக் கற்பவர் எவரையும் திருமாலினிடம் 'ஈடுபடச் செய்வது' என்னும் பொருளில் 'ஈடு' என வழங்கினர் எனவும் அறிஞர் கூறுவர். இந்த ஈட்டின் நடையழகு தனிச் சிறப்புப் பெற்றது. பொருள் உணர்ச்சியோடு பயிலப்பயில எல்லை

யற்ற இன்பத்தைத் தருவது ; சொல்லாற்றலிலும், பொருளாற்றலிலும் சிறந்து விளங்குவது ; பொருளை விளக்கக் காட்டப்படும் மேற்கோள்களும், அவற்றிற்குப் பொருள்கூறும் முறையும் வியக்கத் தக்கவை. பதப்பொருள் கூறுமுறையும், ஒரு பதிகத்தோடு மற்றொரு பதிகத்திற்கும், ஒரு பாசுரத்தோடு மற்றொரு பாசுரத்திற்கும் உள்ள பொருளியைபைக் கூறிச் செல்லும் திறனும் பெரிதும் வியக்கற்பாலன. இங்ஙனம் தம் புலமை நலமெல்லாம் நாட்டில் நிலைபெற்றிருக்கவும், நாம் படித்து இன்புறவும், நலமுறவும் திருவுளங்கொண்டு இப்பேருரைகளை அருளிச்செய்த இப் பெரியார்க்கு நமது பணிவார்ந்த வணக்கம் உரியதாகுக.

இனி, ஈட்டின் உரைவிளக்கத் திறனைக்காட்ட ஓரிடத்தைக் கூறுகிறேன்.

> " அடங்கெழில் சம்பத்து அடங்கக்கண்டு ஈசன்
> அடங்கெழில் அஃதென்று அடங்குக உள்ளே."

என்பது திருவாய்மொழி.

'அழகியதான செல்வம் முழுவதையும் பார்த்து அஃது இறைவனுக்குள் அடங்கிய செல்வம் என்று நினைந்து, அச்செல்வத்திற்குள் நீயும் அடங்குக. என்பது இச்செய்யுளின் பொருளாகும். இனி ' ஈடு ' தரும் விளக்கம் வருமாறு :

" கடலிலே புக்க துரும்பானது இரண்டு தலையிலும் நினைவின்றியே இருக்கவும், திரைமேல் திரையாகத் தள்ளுண்டு போந்து, கரையிலே சேருகிறதில்லையோ ? அப்படியே அவனுடைய ஐசுவரிய அலையானது அவனைத் தள்ளாதோ ? என்னில், இந்த ஐசுவரியமெல்லாம் நமக்கு வகுத்த சேஷியானவனுடைய ஐசுவரியமென்று நினைந்தால், தானும் அதுவாகச் சேரலாமே. ஆன பின்னர், சம்பந்த ஞானமே வேண்டுவது என்கிறார். எங்ஙனமெனின் ? (மேற்கோள்) ஒரு வணிகன் தன் மனைவி கருவுற்றிருக்குங் காலத்தில் பொருள்தேடும் விருப்பினால் வெளிநாடு சென்றான் ; அவளும் கருவுயிர்த்தாள் ; மகனும் தக்க வயதடைந்து, தனக்கும் தமப்பனுருடைய வாணிகமே தொழிலாக, பொருள் தேடப்போனான்; இருவரும் தத்தமக்கு வேண்டிய சரக்குப் பிடித்துக் கொண்டு வந்து ஒரு பந்தலில் தங்கினார்கள். அஃது அவ்விருவருக்கும் இடம் போதாமையால் அம்பறுத்து எய்ய வேண்டும்படி விவாதமுண்டான சமயத்தில், இருவரையும் அறிவானொருவன் வந்து, ' இவன் உன் தமப்பன் ; நீ இவன் மகன் ' என்று அறிவித்தால் கீழ் இழந்த நாட்களுக்குச் சோகித்து, இருவர் சரக்கும் ஒன்றாய், அவன் காப்பாற்றுகின்றவனாய், இவன் காப்பாற்றப்படும்பொருளாய்க் கலந்து

விடுவார்களன்றோ ! அது போன்று, " சீவான்மாவும் பரமான்மாவும் சரீரமாகிய ஒரு மரத்தினைப்பற்றியிருந்தால், ஒருவன் இருவினைப் பயன்களை நுகராநிற்பான்; ஒருவன் நுகர்வித்து விளங்காநிற்பன்." அவன் ஏவுகின்றவன்; நாம் ஏவப்படும் பொருள் என்று முறையறியவே பொருந்தலாமன்றோ?

" ஓர் அரசகுமாரன் பூங்கா வொன்றினைக் கண்டு புக அஞ்சினால், 'இது உன் தமப்பனது காண்' என்னவே, நினைந்தபடி நடந்துகொள்ளலாமன்றோ. ஆனபின்னர், அவனுடைய உடைமை இவையெல்லாம்' என்னும் நினைவே வேண்டுவது. தானும் அதற்குள்ளே ஒருவனைச் சேரலாம் என்கிறார்."

இவ்வாறு செய்யுட்களின் பொருளை விளக்க மேற்கோட் கதைகள் பலவும், இந்த ஈட்டில் தரப்பட்டுள்ளன. இடத்திற்கு ஏற்ற உவமைகள்பல இவ்வுரையை ஆங்காங்கு அணி செய்கின்றன. இறந்த கன்றின் தோலைக் கொண்டும் வைக்கோலைக் கொண்டும் செய்யப்பட்ட பொய்க்கன்றினை மெய்க்கன்றெனப் பசுவுக்குக் காட்டிப் பால்கறக்கும் இக்காலவழக்கம், இவ்வுரையாசிரியர்கள் காலத்தும் இருந்தது போலும். இதுபோன்ற பழக்க வழக்கங்கள் பலவும் இப்பேருரையில் குறிக்கப்பட்டுள்ளன. ஈடும் எடுப்புமற்ற இந்த ஈட்டினைப் படிப்பதால், வைணவ சமயக் கொள்கைகளை நன்முறையில் அறிவதோடு, மற்றையுரையாசிரியர்கள் காலமான 11, 12, 13-ஆம் நூற்றாண்டுகளில் தமிழகத்தில் வழக்கிலிருந்த பழமொழிகளும், கதைவிளக்கங்களும், பழக்கவழக்கங்களும், சமுதாயப் பண்புகள் சிலவும் நாம் அறிந்து இன்புறலாம். அக்காலத்து எழுந்த வேறு நூல்களைக் கொண்டு அறியப்படாத இவ்வுண்மைகளை, நமக்குத் தந்துள்ள இப்பெருமக்களுக்கு நாம் உளமார நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம் அல்லவா?

**பாரதவெண்பா:** பாரதம், இராமாயணம், பாகவதம் என்பன வைணவ காப்பியங்கள் என்பதை நாம் அறிவோம். சங்க காலத்தில் வாழ்ந்த பெருந்தேவனார் அகவற்பாவில் பாரதகதையைப் பாடினார். கி. பி. 9-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மூன்றாம் நந்திவர்மன் காலத்தவரான பெருந்தேவனார் என்பவர், பாரத வரலாற்றை வெண்பாயாப்பிற் பாடினார். எனவே அந்நூல் 'பாரத வெண்பா' எனப் பெயர்பெற்றது. அந்நூலில் கண்ணனைப் பற்றி வரும் இடங்களில் ஆசிரியரது வைணவப்பற்றை அறியத் தக்கதொடர்கள் அமைந்துள்ளன. நூல் முழுவதும் கிடைக்கவில்லையாயினும், கிடைத்து அச்சாகியுள்ள பாக்கள் மிக எளிய நடையில் அமைந்துள்ளன.

## இடைக்கால வேறு நூல்கள்

**(1) நந்திக் கலம்பகம்** இதுவும் மேற்சொல்லப்பட்ட மூன்றாம் நந்திவர்மன்மீது பாடப்பட்டது. இதன் ஆசிரியர் பெயர் தெரிய வில்லை. இப்பொழுது உள்ள கலம்பக நூல்களுள் இதுவே காலத்தால் முற்பட்டது என்னலாம். இதில் நந்திவர்மனுடைய கல்வி, கொடை, வீரம், ஆட்சித்திறன் முதலியன சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளன. இந்நூற்பாக்கள் எளிய செந்தமிழ் நடையில் இயன்றவை. இந்நூற்பிரதிகள் சிலவற்றில் காணப்பட்ட 'மிகுதியான பாடல்கள்' என்ற தலைப்பில் 22 பாடல்கள் வெளியிடப்பட்டுள்ளன. அவையும் சொற்சுவையும், பொருட்சுவையும் பொருந்தியவை. உதாரணம்:—பாணன் தலைவனோடு பரத்தையர் வீட்டில் தங்கி, விடியும் வரையில் பாடினான். அப்பாடலைத் தலைவியின் வீட்டார் அனைவரும் கேட்டனர். மறுநாள் அப்பாணனைக் கண்ட தலைவி, அவனை நோக்கி,

> " ஈட்டு புகழ்நந்தி பாணநீ எங்கையர்தம்
> வீட்டிருந்து பாட விடிவளவும்—காட்டில்அழும்
> பேயென்றாள் அன்னை பிறர்நரியென் றார்தோழி
> நாயென்றாள் நீயென்றேன் நான்."

என்று கூறி எள்ளி நகையாடினாள்.

மூன்றாம் நந்திவர்மனுடைய போர்ச்செயல்கள் பற்றிய பல குறிப்புக்கள் கொண்டுள்ளதால், இந்நூல், வரலாற்றுக்கும் பெருந்துணை புரிவதாகும்.

**(2) கலிங்கத்துப் பரணி:** இது கி. பி. 12-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் முதற்குலோத்துங்கசோழன் காலத்தில் நடைபெற்ற கலிங்கப்போரைச் சிறப்பித்துப் பாடப்பெற்றது. இதனைப் பாடியவர் சயங்கொண்டார் என்னும் சிறந்த புலவர். இந்நூலில் சோழ-அரசர் பெயர்களும், அவர்களுடைய வீரச்செயல்களும், பிற வரலாற்றுக் குறிப்புக்களும் இடம் பெற்றுள்ளன. சாளுக்கியனான முதற்குலோத்துங்கன் சோழஅரசனான வரலாறும், கலிங்கப் படையெடுப்பும், போர்நிகழ்ச்சிகளும், முடிவும் சுவைதரத்தக்க முறையில் பாடப்பட்டுள்ளன. இதன் தனிச் சிறப்பைப் படித்துணர்ந்த புலவர்கள், " பரணிக்கு ஓர் சயங்கொண்டான் " என்று இந்நூலாசிரியரைப் பாராட்டினர். அகப்பொருட்சுவையில் ஆழ்ந்து இன்புற நினைப்பார் இந்நூலின் கடைதிறப்புப் பகுதியைக் காண்பாராக.

**(3) மூவருலா :** முதற்குலோத்துங்கன் மகனுன விக்கிரம சோழன், அவனுக்குப் பின்வந்த இரண்டாம் குலோத்துங்கன், அவனுக்குப்பின் அரசாண்ட இரண்டாம் இராசராசன் என்னும் மூவர்மீதும் ஒட்டக்கூத்தர் பாடிய உலா நூல்கள் 'மூவர் உலா' எனப்படும். அரசனது பரம்பரை, அரசன் சிறப்பியல்புகள், அவன் தன்னை அலங்கரித்துக்கொண்டு உலா வருதல், அவ்வுலா வினைக் காணும் பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்னும் ஏழு பருவ மாதரும் உலாத் தலைவன்மீது காதல்கொண்டு வருந்துதல் முதலியவற்றைக் கூறும் நூலே 'உலா' எனப்படும். இம்முறையில் அமைந்துள்ள இவ் வுலா நூல்கள் அணிவகைகளையும், பிறவற்றையும் நமக்குத் தெளிவாகத் தெரிவிப்பனவாகும். அண்மையில் அடையாற்று அச்சகத்திலிருந்து 'மூவருலா' சிறந்த விளக்கத்துடன் வெளி யிடப்பட்டுள்ளது பாராட்டத்தக்கது.

**(4)** ஒட்டக்கூத்தர் புதுவைக் காங்கேயன் என்ற வள்ளல்மீது நாலாயிரக்கோவை என்னும் நூல் செய்தனர் என்று கூறுவர். ஆனல் அது கிடைக்கவில்லை. இவர் செய்த 'அரும்பைத் தொள்ளாயிரம் என்னும் நூலும் கிடைத்திலது.

**(5) அம்பிகாபதிக் கோவை :** கம்பர் மகனுன அம்பிகாபதி யினுல் பாடப்பட்டது என்பர். இந்நூற் செய்யுட்கள் சொற் சிறப்பும் பொருட்சிறப்பும் நிறைந்தவை என்பதைப் புலவர் அனைவரும் அறிவர். சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தில் இக் கோவையின் புதிய பதிப்பு ஒன்று அண்மையில் வெளிவந்தது நண்பர்களுக்கு நினைவிருக்கலாம்.

**(6) நளவெண்பா :** புகழேந்திப் புலவர் நளனது வரலாற்றை வெண்பா யாப்பிற் பாடினுர் ; பாக்கள் மிக்க நயமுடையவை ; பொருள் இனிமையும், சொல் இனிமையும் படித்து இன்புறற் பாலன. இந்நூலில் மகளிர் மலர் பறித்தலைக் கூறும் வெண்பாக்கள் சில. அவற்றுள்,

> "பாவையர்கை தீண்டப் பணியாதார் யாவரே
> பூவையர்கை தீண்டலும் அப்பூங்கொம்பு—மேவியவர்
> பொன்னடியில் தாழ்ந்தனவே பூங்குழலாய் ! காணென்ருன்
> மின்னெடுவேற் கையான் விரைந்து."

என்பது ஒன்று. இத்தகைய நயமுடைய பாக்கள் நளவெண்பாவில் பலவாகும்.

**(7) தண்டியலங்காரம் :** வடமொழியில் தண்டி என்பார்

செய்த 'காவியாதர்ஸம்' என்னும் அலங்கார நூலின் மொழி பெயர்ப்பே தமிழிலுள்ள தண்டியலங்காரம் என்பது. இந்நூலுக்கு எழுதப்பட்டிருக்கும் உரையோடு அமைந்துள்ள மேற்கோட் செய்யுட்கள் சொல்லிலும் பொருளிலும் சிறந்தவை. அச்செய்யுட் களிற் பல, அநபாய சோழனைப்பற்றியவை. மேலும், உரையின் முதல் மேற்கோட் செய்யுளிலேயே,

" என்னேய் சிலமடவார் எய்தற் கெளியவோ
பொன்னே அநபாயன் பொன்னெடுந்தோள்."

என்று அநபாயன் குறிக்கப்பட்டுள்ளான். உரையின் இறுதிமேற் கோட் செய்யுளிலும்,

" மூவாத் தமிழ்பயந்த முன்னூல் முனிவாழி
ஆவாழி வாழி யருமறையோர்—காவிரிநாட்(டு)
அண்ணல் அநபாயன் வாழி அவன்குடைக்கீழ்
மண்ணுலகில் வாழி மழை."

என்று அவன் ஆட்சியையும் குறித்திருத்தலை நோக்க, இத் தண்டி யாசிரியர், அநபாயனால் ஆதரிக்கப்பெற்றவராக இருக்கலாம் எனக் கருதுதல் தவறாகாது. இங்ஙனம் கொள்ளின், இச்செய்யுட்களின் காலம் கி. பி. 12-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்னலாம். இவை சிறந்த இலக்கியச் செய்யுட்களாகும் :

" ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும்—ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரோன் றேனையது
தன்னேர் இலாத தமிழ்."

என்னும் தன்னேர் இல்லாத் தமிழைப் பற்றிய அருமைப் பாடல் இத்தண்டியலங்காரத்தில் கண்டு எடுக்கப்பெற்ற மேற்கோள் அன்றோ?

இதேகாலத்திற் செய்யப்பட்டவை குலோத்துங்கசோழன் பிள்ளைத்தமிழும், சங்கரசோழன் உலாவும் ஆகும். இவற்றுள் குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ், தமிழ்ப்பொழிலில் வெளிவந் துள்ளமையோடு தனிநூலாகவும் அச்சிடப்பெற்றுளது. பல செய்யுட்கள் சிதைந்து போயின. சங்கரசோழனுலாவில் பெரும் பகுதி செந்தமிழில் வெளியிடப்பட்டுள்ளது.

## கம்ப ராமாயணம்

கவிச்சக்கரவர்த்தி எனப் பெயர்பெற்ற கம்பர் சடகோபரந்தாதி, ஏரெழுபது, திருக்கை வழக்கம், சரசுவதி அந்தாதி, இராமாவதாரம் என்னும் ஐந்தையும் இயற்றியவராவர். அவற்றுள் ஏரெழுபதும் திருக்கை வழக்கமும் உழவின் சிறப்பையும் வேளாளர் சிறப்பையும் எடுத்துக்கூறும் நூல்கள். சடகோபரந்தாதி நம்மாழ்வார்மீது பாடப்பெற்றது. கம்பர் மூன்றுங்குலோத்துங்க சோழன் காலத்தவர் (கி. பி. 1188-1216) என்பது அறிஞர் கருத்து. இதனை விளக்கமாக அறிய விரும்புவோர், பேராசிரியர் இராமச்சந்திர தீட்சிதர் வெளியிட்டுள்ள மூன்றுங்குலோத்துங்கன் என்னும் நூலில் காணலாம்.

கம்பர் பாடிய இராமாயணச் செய்யுட்கள் 10,500 என்பர். இப்பாடல்களில் உள்ள சொற்சுவையும் பொருட்சுவையும் புலவர் பலரால் பேசப்பட்டும் எழுதப்பட்டும் வந்துள்ளன. பேராசிரியர் செல்வகேசவராய முதலியார் வெளியிட்டுள்ள 'கம்பர்' என்னும் நூலும், வெ. ப. சுப்பிரமணிய முதலியார் வெளியிட்டுள்ள இராமாயணத் தொகுப்புச் செய்யுட்களும் அவற்றின் விரிவுரையும், வேறு அறிஞர் பலர் செந்தமிழ், செந்தமிழ்ச்செல்வி, தமிழ்ப் பொழில், கலைமகள் என்னும் திங்கள் இதழ்களிலும், கலா நிலையம் என்னும் வார வெளியீட்டிலும் வரைந்துள்ள பல கட்டுரைகளும் கம்பர் கவிநயத்தையும், புலமைச்சிறப்பையும் தெற்றெனத் தெளிவிக்க வல்லன.

இச் சிறப்பை நன்குணர்ந்து, காலஞ்சென்ற கவிஞர் பாரதியார்,

> " யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
> வள்ளுவர்போல் இளங்கோவைப் போல்
> பூமிதனில் யாங்கணுமே கண்டதில்லை
> உண்மை வெறும் புகழ்ச்சியில்லை."

என்று பாராட்டினர்; அப் பாராட்டிலும் காலத்தாற் பிற்பட்ட கம்பரை, அவரது பெரும்புகழ்நோக்கி முற்பட்டவராகக் கூறியுள்ளமை கவனிக்கத் தக்கதாகும்.

இதுகாறும் கூறப்பெற்ற இலக்கியச் செய்திகளிலிருந்து, (1) இப் பரந்துபட்ட ஓராயிரம் ஆண்டுகளில் பல நீதிநூல்களும், (2) சமண-பௌத்த-சைவ-வைணவ சமய நூல்களும்,

இவற்றெடு தொடர்புடைய காவியங்களும், (3) கலம்பகம், பரணி, உலா முதலிய பிரபந்த நூல்களும் தோன்றி வளர்ந்தன என்பதும், இவற்றிலிருந்து இவ்விடைக்காலத் தமிழக அரசு மரபுகள் பற்றியும், ஆட்சிமுறைகள் பற்றியும், பல சமய உண்மைகள் பற்றியும், மக்களுடைய வாழ்வு, கலைகள் பற்றியும் பல உண்மைகள் அறிய முடிகின்றன என்பதும் ஒருவாறு சுட்டிக்காட்டினேன். ஒவ்வோர் இலக்கியம் பற்றிய விரிவு அவ்வந் நூலிற் கண்டுகொள்க.

---

# பிற்கால இலக்கியம்
## (கி. பி. 1301–1953)
### (மூன்றும் நாள் சொற்பொழிவு)

**பிற்கால வரலாறு :** பதினன்காம் நூற்ருண்டின்முதலில் சோழரும் பாண்டியரும் வலிகுன்றவே ஹொய்சளர் செல்வாக்குத் தமிழகத்தில் ஏற்பட்டது. அந்நூற்ருண்டின் முற்பகுதியில் அல்லா வுத்தீன் கில்ஜி வடஇந்தியாவை ஆண்டு வந்தான். அவனல் அனுப்பப்பட்ட படைத்தலைவன் மாலிக்-காபூர் விந்தியமலைக்குத் தென்பாற்பட்ட அரசுகளைத் தாக்கி வென்ருன். முதலில் தேவ கிரியை ஆண்ட யாதவ அரசன் பணிந்தான். ஓரங்கல் நாட்டை ஆண்ட காகதீய அரசனும் பணிந்தான். துவார சமுத்திரத்தைத் தலை நகராகக் கொண்ட ஹொய்சள அரசன் மூன்ரும் வல்லாளனும் பணிந்துவிட்டான். அவ்வமயம் மதுரையில் பாண்டியர் அரி யணைக்குப் போட்டி ஏற்பட்டது. அதனல் நாட்டில் குழப்பம் உண்டாயிற்று. இதனை அறிந்த மாலிக்-காபூர் மதுரைமீது படை யெடுத்தான். அதன்பயனய் ஏறத்தாழ ஐம்பதுவருடகாலம் பாண்டியநாடு முஸ்லிம் ஆட்சிக்கு உட்பட்டது. இங்ஙனம் தென் ஞட்டில் உண்டான குழப்பநிலை, விஜயநகர ஆட்சி ஏற்பட்ட பிறகுதான் நீங்கியது. தென்னிந்தியா முழுவதும் விஜயநகர ஆட்சியில் அடங்கியது. விஜயநகர ஆட்சி ஏறத்தாழ இருநூறு வருடகாலம் இருந்தது. அவ்வாட்சியின் பிற்பகுதியில், மதுரை யில் நாயக்கர் ஆட்சியும் ஏற்பட்டது. தஞ்சையிலும் நாயக்கர் ஆட்சி தோன்றியது. நாயக்கர் ஆட்சிக்குப் பிறகு தஞ்சையில் மகாராஷ்டிரர் ஆட்சி ஏற்பட்டது. நாயக்கர் ஆட்சியில் பாளையக் காரர் என்ற சிற்றரசர்கள் தமிழ்நாடு முழுவதும் தோன்றினர்கள்.

பிறகு தென்னிந்தியாவில் கருநாடக நவாபு ஆட்சி ஏற் பட்டது. அதன் பயனய் நாட்டில் இருந்த இந்து அரசர்கட்கும் கருநாடக நவாப்பிற்கும் அடிக்கடி போராட்டங்கள் நடைபெற்றன; நாட்டில் அமைதியில்லை. நாட்டில் தடியெடுத்தவன் தண்டல் காரனக விளங்கினன். அந்த நிலையில், சென்னை முதலிய இடங் களில் வாணிகம் செய்துவந்த ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரரும் தங்கள் செல்வாக்கைத் தமிழகத்தில் நிலைநாட்ட முயன்றனர். இறுதியில் நாடுமுழுதும் ஆங்கில ஆட்சியே ஏற்பட்டது.

ஆங்கில ஆட்சியில் ஆங்கிலக்கல்வி பரவத் தொடங்கவே தமிழ் மக்கள் உலக நாடுகளைப் பற்றியும், பிறநாட்டு இலக்கியங்களைப் பற்றியும், பிற கலைகளைப் பற்றியும் அறியலாயினர்.

**பிற்காலச் சமயநிலை :** சோழரால் பாதுகாத்து வளர்க்கப் பெற்ற சைவ வைணவ சமயங்கள் விஜயநகர ஆட்சிக்காலத்தில் நன்கு பாதுகாக்கப்பட்டன. நாடெங்கும் இருந்த பெயர் பெற்ற பழைய கோயில்கள் புதுப்பிக்கப்பட்டன; மிகப் பெரியனவாக மாற்றி அமைக்கப்பட்டன; வானளாவிய கோபுரங்கள் கட்டப்பட்டன; ஆயிரக்கால் மண்டபங்கள் தோற்றமெடுத்தன; கோயில்களில் விழாக்களும் பூசைகளும் சிறப்பாக நடைபெறத் தொடங்கின. 'இந்து' சமயத்தைப் பாதுகாப்பதே நோக்கமாகக் கொண்ட விஜயநகர ஆட்சிக் காலத்திலேதான் தென்னிந்தியாவில் சைவத்தையும், வைணவத்தையும், வைதிகத்தையும் வளர்ப்பதற்காகப் பெரிய மடங்கள் தோன்றலாயின. அம்மடங்களில் சமய இலக்கியங்கள் வளர்ச்சியுறலாயின; தலத்திற்கு ஒரு புராணம் தோன்றலாயிற்று. சைவ, வைணவப் புலவர்கள் பேரரசர்களாலும், சிற்றரசர்களாலும் ஆதரிக்கப்பட்டனர். ஒவ்வொரு ஜமீனிலும் இருந்த புலவர்கள் அச்சிற்றரசர்கள் மீது பல பிரபந்தங்களைப் பாடினுர்கள்.

ஆங்கிலஆட்சி ஏற்படுமுன்னரே, கிறிஸ்தவ சமயத்தைப் பரப்பவந்த பாதிரிமார்கள் பைந்தமிழைப் பாங்குறக் கற்றுத் தமிழில் பல நூல்களைச் செய்யலாயினர். முஸ்லீம்கள் ஆட்சியில் இஸ்லாத்தைத் தழுவிய தமிழருள் சிலர், புலவர்களாய்த் திகழ்ந்தனர். அப்பெருமக்கள் இஸ்லாத்தைப் பற்றிப் பல நூல்கள் வரையலாயினர். சங்க காலத்திலும் இடைக்காலத்திலும் பௌத்த சமண இலக்கியங்கள் தோன்றியவாறே, இப் பிற்காலத்தில் முஸ்லிம் சமயநூல்களும், கிறிஸ்துசமய நூல்களும் தோன்றின. கிறிஸ்தவரால் இயற்றப்பட்ட பிற நூல்களும் தமிழ் வளர்ச்சிக்குத் துணைபுரிந்தன. தஞ்சையை ஆண்ட சரபோஜிமன்னன், தன் காலம்வரையிலும் நாட்டில் தோன்றியிருந்த பல கலைகளையும் பற்றிய நூல்களைப் பெரும் பொருட்செலவில் சேர்த்துத் தன் அரண்மனையில் ஓரிடத்தில் வைத்து, அதற்குச் 'சரசுவதி மஹால்' என்று பெயரிட்டான். அந்த மஹாலில் வைக்கப்பட்ட நூல்கள் இன்றளவும் பாதுகாக்கப்பட்டுவருகின்றன. இவ்வாறே சென்னை அரசாங்கத்தார் பாதுகாப்பில் அச்சிடப்பெறுத பழைய நூல்கள் தொகுத்து வைக்கப்பட்டுள்ளன.

இனி, இப் பிற்கால இலக்கியத்தின் வளர்ச்சியைக் காண்போம். அவ்விலக்கியங்களை, உரைநூல்கள், புராணங்கள்,

சித்தர் நூல்கள், சிற்றிலக்கியங்கள் (பிரபந்தங்கள்) என வகைப் படுத்திக் கொள்ளலாம்.

1. **உரைநூல்கள் :** தொல்காப்பியத்திற்கு உரை வகுத்த இளம்பூரணர், பேராசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் முதலியோர் உரைநடை இலக்கிய நயமுடையது. நச்சினார்க்கினியர் உரைநடை மிகச் சிறந்தது. இவ்வாறே திருக் குறளுக்குக் கிடைத்த பரிமேலழகர் உரை இலக்கியச் சுவையை மிகுதியாக உடையது. அதில் காணப்படும் புராண இதிகாசக் குறிப்புக்களும், சங்கநூற் குறிப்புக்களும், இலக்கணக் குறிப்பும், பிறவும் கற்பார்க்கு அறிவு கொளுத்துவன. சிலப்பதிகாரத்திற்கு அடியார்க்கு நல்லார் வரைந்துள்ள உரை சிலப்பதிகாரத்தையே சிறப்புறச் செய்கிறது என்பதை நாம் அறிவோம். அரங்கேற்று காதையுரை ஒன்றே உரையாசிரியரது ஆழ்ந்த புலமையை எடுத் துக்காட்டப் போதியது. பேராசிரியர் திருக்கோவையாருக்கு எழுதியுள்ள உரையும், நச்சினார்க்கினியர் சிந்தாமணி, பத்துப் பாட்டு, கலித்தொகை இவற்றிற்கு எழுதிய உரையும் சிறந்த இலக்கியச் சுவையைத் தருவனவாகும். இவ்வுரையாசிரியர்கள், கி. பி. 9-ஆம் நூற்றாண்டு முதல் 16-ஆம் நூற்றாண்டு வரையில் பரந்துபட்ட காலஅளவில் வாழ்ந்தவராவர் என்பது அறிஞர் கருத்து.

## புராண இதிகாசங்கள்

**நம்பி திருவிளையாடற் புராணம் :** கி. பி. 13-ஆம் நூற்றாண்டி லிருந்த பெரும்பற்றப்புலியூர் நம்பி என்பவரால் பாடப்பட்டது. இது மிகத் திருந்திய முறையில் டாக்டர். உ. வே. சாமிநாத ஐய ரால் வெளியிடப்பெற்றது. இந்நூலாசிரியர் செல்லி நகரத்தைச் சேர்ந்தவர்.

**சேது புராணம் :** நிரம்ப அழகிய தேசிகர் என்பவரால் 6-ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது. இவர் வேதாரணியத்தில் பிறந் தவர்; மதுரையில் வாழ்ந்தவர்; சைவ வேளாளர். இந்நூல் 51 சருக்கங்களையும், ஏறத்தாழ 3400 விருத்தப் பாக்களையும் உடையது. தேசிகர், இந்நூலில் 'ஜடாதீர்த்தம்' என்பது போன்ற பல வடமொழிப்பெயர்களைப் 'பின்னல் இலஞ்சி' என்பது போன்ற தமிழ்ச் சொற்களாக மாற்றியமைத்தார். செல்வராக்கும் என்னும் கருத்தை, "வெறுங்கையர் என்னும் சொல்லின் மென்மையை வன்மை ஆக்கும்" என்னும் வரியால் தெரிவித்தனர். "வெறுங்கை" என்பதிலுள்ள 'ங்' என்னும் மெல்லெழுத்து 'க்'

என்னும் வல்லெழுத்தாக மாறின், 'வெறுங்கை' என்பது 'வெறுக்கை' என்று ஆகும். வெறுக்கை - செல்வம்.

" இல்லமென் கிளவி அந்நாட் டிருப்பவர் இசைக்குங் காலை
வெல்லருங் கேள்வி மேலோர் விதித்திடும் இலக்க ணத்துட்
சொல்லிரும் பெயரே ஏனைத் தொழிற்குறிப் பிரண்டி னுள்ளும்
நல்லதோர் பெயரே யன்றி நவின்றிட நாடி டாரே."

என்பதன் முதலிலுள்ள 'இல்லம்' என்னும் சொல் 'வீடு' என்னும் பொருளிலும், 'எங்களிடம் பொருளில்லை' என்னும் பொருளிலும் வரும். இராமேசுவர மக்கள் இச்சொல்லை 'வீடு' என்னும் பொருளிலேயே வழங்குவர் என்பது இச்செய்யுளின் பொருள். இதனுல் இராமேசுவர மக்கள் வறுமையற்றவர் என்பதை ஆசிரியர் குறிப்பால் உணர்த்தினுர். இங்ஙனம் வரும் செய்யுட்கள் பல.

இவர் சிவஞான சித்தியார் - சுபக்கத்திற்கும், திருவருட் பயன்' என்னும் நூலுக்கும் உரை எழுதியுள்ளார். இவருடைய மாணவர்களில் தென்காசியை ஆண்ட அதிவீரராம பாண்டியன், வரதுங்கராம பாண்டியன் என்னும் உடன்பிறப்பாளர் குறிப்பிடத் தக்கவர்.

**பரஞ்சோதி திருவிளையாடற் புராணம்:** பரஞ்சோதி முனிவரால் பாடப்பெற்றது. இவர் திருமறைக்காட்டு வேளாளர்; பதினெட்டாம் நூற்றுண்டினர். இவர் தமிழில் பாடியுள்ள திரு விளையாடற் புராணம் நம்பி திருவிளையாடலைவிடப் பெரியது. இந் நூல் சொற்சுவையிலும், பொருட்சுவையிலும் சிறந்து விளங்கு கிறது. பெருங்காவியத்திற்குரிய நயங்கள் பல இதன்கண் இடம்பெற்றுள்ளன. சிவபெருமானுடைய அறுபத்து நான்கு திருவிளையாடலைக்கூறும் இந்நூலிலிருந்து, ஆசிரியர் காலத்தில் நாட்டிலிருந்த இசை முதலிய பல கலைகளைப் பற்றிய விவரங் களும், பலவகை நகைகளைப்பற்றிய விவரங்களும், அக்கால நகரச் சிறப்பும், நாட்டுச்சிறப்பும், வையை ஆற்றின் வளமும் பிறவும் அறிய முடிகின்றது.

பதினெட்டாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த சிவ ஞான முனிவர் காஞ்சிப்புராணம் என்னும் பெருநூலை இயற்றி ஞர். இந்நூலின் செய்யுள் நடை மிடுக்குடையது. சில பாக்கள் சித்திரகவிநயம் கொண்டவை. இந்நூலினுல், ஆசிரியர்காலத்தில் தொண்டைநாடு இருந்த நிலை, காஞ்சிமாநகரத்தின் நிலை, அங் கிருந்த கோயில்களின் நிலை, அக்கால மக்களைப்பற்றிய செய்திகள், கலைகளின் நிலை முதலியவற்றை அறியலாம். இந்நூலுள் தழுவக்

குழைந்த படலம் உள்ளத்தை உருக்குவதாகும்; நகைச்சுவையும் விளைப்பதாகும். அப்பகுதியில் திருமண நிகழ்ச்சிகள் அனைத்தும் நன்கு விளக்கப்பட்டுள்ளன. சிவபெருமான் திருமண ஊர்வலத்தில் மக்கள் நெருங்கியிருந்த நிலையை "ஒருவர்முன் அணிசாந்தம் ஒருவர்தம் முதுகு அப்ப" என்னும் தொடரால் நகைச்சுவை தோன்ற விளக்கியுள்ள திறன் பாராட்டத்தக்கதன்றோ?

5. **விநாயக புராணமும் தணிகைப் புராணமும்** பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த கச்சியப்ப முனிவரால் இயற்றப்பட்டன. இவற்றுள் தணிகைப்புராண நடை கடினமானது. எனினும் தொண்டைநாட்டுச் சிறப்பு, திருத்தணிகை வரலாறு, மக்கள் நிலை, அக்காலச் சமயநிலை, வழிபாட்டு முறை முதலியவற்றை இந்நூலால் அறியலாம்.

தணிகைப் புராணம்போல ஒவ்வொரு தலத்தைப்பற்றியும் பிற்காலத்தில் ஒவ்வொரு புராணம் பாடப்பட்டது. இவை தல புராணங்கள் எனப்படும். இப்புராணங்கள் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கம்வரை பாடப்பட்டு வந்தன. இவற்றுட் கூறப்படும் தல வரலாறுகளும், வருணனைப் பகுதிகளும், ஆடை அணிகளின் இயல்பும், உவமை முதலாகிய அணி விசேடங்களும் கற்பார்க்கு இன்பமூட்டுவனவாகும். ஒவ்வொரு புராண ஆசிரியரும் தம் காலநிலையை உளங்கொண்டே நூலியற்றுதல் இயற்கையாதலின், அவர் செய்துள்ள நூலில் அவர்காலப் பழக்க வழக்கங்களும், சமயக் கருத்துக்களும் பிறவும் இடம்பெறுதல் இயல்பு. இலக்கியநயம் நுகருவோர்க்கும், ஆராய்ச்சியாளர்க்கும், நாட்டைப் பற்றிய செய்திகளை நூற்றாண்டுவாரியாக அறிய விரும்புவோர்க்கும் இவை வேண்டற்பாலன. இத்தகைய அருஞ்செய்திகள் பல, தல புராணங்களில் இருத்தலை அறிந்து, இளம் புலவர்கள் அவற்றைப் பயன்படுத்தவேண்டும்; அவற்றை ஆராய்ந்து தொகுத்து வெளியிடல்வேண்டும்.

**வில்லிபாரதம்** : கி. பி. 15-ஆம் நூற்றாண்டில் செய்யப்பட்டது என்று அறிஞர் கூறுவர். இதனை இயற்றிய வில்லிபுத்தூரார் நடுநாட்டுச் சனியூரில் பிறந்தவர். வக்கபாகை என்னும் ஊரை ஆண்ட வரபதியாட்கொண்டான் என்ற கொங்குநாட்டுச் சிற்றரசன் வேண்டுகோள்மீது இந்நூல் இயற்றப்பட்டது. இவர் இயற்றிய பாரதம் பத்துப்பருவங்களை உடையது; ஏறத்தாழ 4000 செய்யுட்களையுடையது; செய்யுட்கள் விருத்தப்பாவினால் அமைந்தவை. இவர் செய்யுள் நடை வடமொழிச் சொற்களை மிகுதியாகக் கொண்டது; ஆயினும் படிக்கவும், கேட்கவும் இன்பத்தைத் தரு

வது. இவர் சந்தச்செய்யுள் செய்வதில் வல்லவர். வடமொழிச் சந்தங்களையும், தத்திதாந்தம் முதலிய சொல் வகைகளையும் எடுத்தாண்டவர் இவரே. இவர் தம்மை ஆதரித்த வரபதியாட்கொண்டானைப் பாரதத்தில் பல இடங்களில் பாராட்டியுள்ளார். அவற்றுள்,

“ கோவல்சூழ் பெண்ணை நாடன் கொங்கர்கோன் பாகை வேந்தன்
பாவலர் மானங் காத்தான் பங்கயச் செங்கை யென்ன
மேவலர் எமரென் ருமல் வெங்களந் தன்னில் நின்ற
காவலன் கன்னன் கையும் பொழிந்தது கனக மாரி.”

என்பதும் ஒன்ருகும்.

இவ் வில்லிபாரதம் கி. பி. 18-ஆம் நூற்ருண்டில் வாழ்ந்த நல்லாப்பிள்ளை என்னும் தொண்டைநாட்டுப் புலவரொருவரால் விரிவாக்கப்பட்டது; ஏறக்குறையப் பதினுயிரம் பாடல்கள் நல்லாப் பிள்ளையால் பாடிச் சேர்க்கப்பட்டன. வில்லியால் விடப்பட்ட எட்டுப் பருவங்களும் நிறைவாக்கப்பட்டன.

**திருப்புகழ்:** இதனை இயற்றிய அருணகிரிநாதர், வில்லிபுத்தூரர் காலத்தவர்; முருகனிடம் பத்திகொண்டவர்; சந்தவிருத்தப் பெருங்கடல் எனப்படும் திருப்புகழைப் பாடியதோடு, கந்தர் அலங்காரம், கந்தர் அநுபூதி, திருவகுப்பு, வேல்விருத்தம், உடற்கூற்று வண்ணம் என்னும் நூல்களையும் பாடியுள்ளனர்.

**இரகுவம்சம்** என்னும் தமிழ்ச்செய்யுள்நூல் காளிதாசன் வடமொழியிற் செய்த ரகுவம்சத்தைப் பின்பற்றியதாகும். இதனைச் செய்தவர் அரசகேசரி என்பவர். இந்நூல் 26 படலங்களையும் சற்றேறத்தாழ 2400 செய்யுட்களையும் உடையது. செய்யுட்கள் கடின நடையில் அமைந்தவை; பொருள்பொதிந்தவை. இந்நூல் 300 ஆண்டுகட்கு முற்பட்டது.

**பாகவதபுராணம்:** வேம்பத்தூரில் பிறந்த செவ்வைச் சூடுவார் என்பவரால் இயற்றப்பெற்றது; பன்னிரண்டு ஸ்கந்தங்களையும், ஏறக்குறைய 5000 விருத்தப் பாடல்களையும் உடையது. இந்நூலில் நீதிபோதனைகளும், வருணனைப் பகுதிகளும், பொருள் நயம் சிறந்த பல செய்யுட்களும் அமைந்துள்ளன.

---

பொருள் அமைந்த பல செய்யுட்களையும், நகைச்சுவைப் பாடல்கள் பலவற்றையும் பாடியுள்ளார். இவர்பாடிய

" பெருமாளும் நல்ல பெருமாள் ; அவர்தம்
திருநாளும் நல்ல திருநாள் ; பெருமாள்
இருந்திடத்திற் சும்மா இராமையினால், ஐயோ !
பருந்தெடுத்துப் போகுதே பார் "

என்னும் வெண்பா நகைச்சுவைக்கு நல்ல சான்று அல்லவா ?

அதிமதுரகவி என்பவர் நாகூரையடுத்த திருமலைராயன் பட்டினத்தில் இருந்த அரசவைப் புலவர்; காளமேகப்புலவரால் வாதில் வெல்லப்பட்டவர். இவரது செருக்காலும், திருமலைராயன் அறியாமையினாலும் காளமேகம் அவமதிக்கப்பட்டார். அதனால் மனம் நொந்த காளமேகம், அப்பட்டினத்தில் மண்மாரி பெய்யுமாறு சபித்து அகன்றார். இவ்வரலாறு இன்றும் திருமலைராயன் பட்டினத்தில் கூறப்படுகின்றது. அப் பட்டினத்தில் மண்மாரி பெய்து நகர் அழிந்த பகுதி, என்று சுமார் ஒருமைல் நீளமுள்ள திடல் காட்டப்படுகிறது. அத்திடலின் பகுதிகள் இப்பொழுது வயல்களாக மாற்றப்பட்டுவருகின்றன.

இரட்டையர் சோழ நாட்டினர் ; ஒருவர் முடவர், மற்றொருவர் குருடர் ; குருடர் முடவரைச் சுமந்து செல்வர். இருவரும் செங்குந்தர் மரபினர். இவ்விருவரும் சிவபத்தியிற் சிறந்தவர் ; ஒரு செய்யுளில் ஒரு பகுதியை ஒருவர் பாட, மற்றவர் பிற்பாதியைப் பாடி முடிப்பர். இங்ஙனம் இவர்கள் இயற்றிய தனிப்பாடல்கள் பல ; நூல்கள் சில. திரு ஆமாத்தூர்க் கலம்பகம், ஏகம்பநாதர் உலா, கச்சிக்கலம்பகம், தில்லைக்கலம்பகம் முதலியன இவர்களால் பாடப்பட்டன. 'கலம்பகத்திற்கு இரட்டையர்கள்' என்று அக்காலப் புலவர்கள் இவர்களைப் பாராட்டினர்.

## 16-ஆம் நூற்றாண்டு நூல்கள்

தஞ்சைவாணன் கோவை : பொய்யாமொழிப் புலவர் என்பவரால் பாடப்பட்டது. இது பாண்டிய நாட்டுத் 'தஞ்சாக்கூர்' என்னும் ஊரை ஆண்ட 'வாணன்' மீது பாடப்பட்டது. வாணர் என்பவர் தமிழகத்துச் சிற்றரசர்களாக இருந்த பாண அரச மரபினர். இவர்கள் பல நூற்றாண்டுகளாகத் தமிழகத்தில் இருந்து நாடாண்ட அரச மரபினர். இவருள் ஒரு பிரிவினர் சோழப் பேரரசு வீழ்ச்சியுற்ற பிறகும், பாண்டியப் பேரரசு தாழ்வுற்ற

பிறகும் பாண்டியநாட்டில் குடியேறிப் பல பகுதிகளை ஆளலாயினர். அங்ஙனம் ஆண்ட பாணருள் கி. பி. 16-ஆம் நூற்றுண்டின் பிற் பகுதியில் வாழ்ந்த ஒருவனே தஞ்சைவாணன் என்று ஆராய்ச்சி யாளர் கூறுகின்றனர். எனவே, இதுவே பொய்யாமொழிப் புலவர் காலம் என்னலாம். இவர் பாடிய கோவையில் 425 கிளவிகள் அமைந்துள்ளன; செய்யுட்கள் இனிமை வாய்ந்தவை. இக்கோவை யின் சிறப்பைக் கருதியே, இதனை நாற்கவிராச நம்பி பாடிய அகப் பொருள் இலக்கணத்திற்கு, ஏற்ற இலக்கியமாக முன்னேர் கொண்டனர்.

உதாரணம்: தோழி செவிலித்தாயை நோக்கி, "ஒரு நாள் தலைவி முதலிய எங்களை மதயானை ஒன்று துரத்தி வந்தது. அது கண்டு நாங்கள் அலறினேம். அவ்வமயம் எங்கிருந்தோ ஒரு வீரன் தோன்றினன். அவன் அஞ்சி, அழுது நடுங்கிய தலைவியைத் தன் இடப்பக்கத்தில் தழுவிக்கொண்டு, வலக்கையிலிருந்த வேலால் யானையைத் தாக்கினன். வேல்பட்ட இடத்திலிருந்து வெளிப்பட்ட இரத்தம், அத்தலைவனது வலப்புற மார்பைச் செந்நிறமாக்கியது. தலைவியின் மைபூசப்பெற்ற கண்களிலிருந்து வடிந்த கண்ணீர் அவனது இடப்புற மார்பைக் கருமையாக்கியது. அந்நிலையில் அத்தலைவன் இடப்பாகத்தில் உமாதேவியைக் கொண்ட சிவபெரு மானைக் காட்சியளித்தான்," என்று கூறும் முகத்தான், 'அறத் தொடு நின்றுள்' என வரும் செய்தி, பொய்யாமொழிப் புலவரது பண்பட்ட புலமையைப் பாங்குற உணர்த்துகிறதன்றே? இத்தகைய பொருள் நயமுடைய பாக்கள் இந்நூலில் பல உள. மேலும், இந் நூலில் தஞ்சைவாணன் வீரச்செயல்கள் பலபடப் பேசப்பட் டுள்ளன. சுருங்கக் கூறின், இக்கோவைநூல் வரலாற்றுச் சிறப்பும், புலமைச் சிறப்பும் உடையது என்னலாம்.

சேதுபுராண ஆசிரியரின் மாணவரான அதிவீரராம பாண்டியர் காசிகாண்டம், கூர்மபுராணம், இலிங்க புராணம், நைடதம் முதலிய நூல்களைப் பாடினர். இவற்றுள் நைடதம் 1172 விருத்தங்களையும், இருபது படலங்களையும் உடையது. இவர் செய்யுட்களில் கம்பர், திருத்தக்கதேவர் போன்ற பெருங்கவிகளின் கருத்துக்களைக் காணலாம்.

"தோயும் வெண்தயிர்" என்று தொடங்கும் கம்பராமாயணச் செய்யுளும், 'முல்லையங்கோதைநல்லார்' என்று தொடங்கும் நைடதச்செய்யுளும் கருத்தில் ஒன்றுபட்டிருத்தலைக் காணலாம். 'கொங்குவிம்மு கோதை' என்று தொடங்கும் நைடதச்செய்யுளும், 'கொங்கு விம்முபூங் கோதை' என்று தொடங்கும் சிந்தாமணிச்

செய்யுளும் கருத்திலும், சொற்களிலும் ஒன்றுபட்டிருத்தலைக் காணலாம். இவ்வாறு காணப்படும் பகுதிகள் பல உள்ளன.

காசிகாண்டம் காசியின் பெருமையை உரைப்பது. இந்நூல் நூறு அத்தியாயங்களையும், 2525 விருத்தங்களையும் உடையது. இந்நூல் நடை எளியது ; சொல்லழகு உடையது.

“ கேழற் பன்றி மருப்பினிலங் கிளையா ருமலி மேல்துயிலும்
பேழ்வாய்க் கரடி மயிருளர்ந்து முதிர்சூன் மந்தி பேனெடுக்கும்
ஊழிக் கனல்பாய்ந் தொழுகும்விழி யுரகம் கீரி மேலுறங்கும்
மாழைச் சிறுமான் குழக்கன்றை வந்து நரிகள் தைவருமால்.”

என்னும் செய்யுளில் சொல்லழகும் பொருளழகும் கவனிக்கத்தக்கன.

கூர்மபுராணம் : இராம கிருஷ்ண அவதாரங்கள், அவர் தம் செயல்கள், தக்கன்வேள்வி, உலகத் தோற்றம், இல்லறம், சிவ பெருமான் அருட்செயல்கள் முதலியவை இந்நூலில் கூறப் பட்டுள்ளன. இந்நூல் ஏறத்தாழ 3700 விருத்தங்களையுடையது. பாக்கள் படிக்கச் சுவையுள்ளவை.

கரிவலம்வந்தநல்லூர் என்னும் பெயர் ‘ கருவை ’ என மருவும். அக் கருவையிலுள்ள சிவபெருமான்மீது திருக்கருவை வெண்பா அந்தாதி, பதிற்றுப்பத்து அந்தாதி என்னும் சிறந்த நூல்களையும் அதிவீரராம பாண்டியர் இயற்றினர். அவற்றுள் பின்னது சொற் பொருட் சிறப்பினால் ‘ குட்டித் திருவாசகம் ’ என்று பாராட்டப்படு கிறது. எடுத்துக்காட்டாக,

“ சித்தனை உனக்குத் தந்தேன், திருவருள் எனக்குத் தந்தாய் ;
வந்தனை உனக்குத் தந்தேன், மலரடி எனக்குத் தந்தாய் ;
பைந்துணர் உனக்குத் தந்தேன், பரகதி எனக்குத் தந்தாய் ;
கந்தனைப் பயந்த நாதா, கருவையில் இருக்குந் தேவே. ”

என்னும் செய்யுளைக் காண்க. இத்தகைய உருக்கம் மிகுந்த பாடல் கள் இந்நூலிற் பல காணலாம்.

வரதுங்கராமபாண்டியர் பிரமோத்தர காண்டம் என்னும் நூலை இயற்றினர். இந்நூல் ஐந்தெழுத்து, திருநீறு, சிவராத்திரி, பிரதோஷம், சோமவாரம், மகேசுவரபூசை முதலிய சைவசமய சம்பந்தமுள்ள செய்திகளைப் பற்றிப் பேசுவது. 22 அத்தியாயங் களையும், ஏறத்தாழ 1300 விருத்தங்களையும் உடையது.

பாண்டியநாட்டு வீரகவிராயர், அரிச்சந்திர புராணம் பாடினர். அந்நூற் செய்யுட்கள் உருக்கத்தை ஊட்டுவன ; எளிய நடையின :

இந்தப் பதினாறும் நூற்றாண்டில் கச்சிஞானப்பிரகாசர், மறைஞானசம்பந்தர், மறைஞான தேசிகர், சிவாக்கிரயோகிகள், கமலைஞானப்பிரகாசர், குருஞானசம்பந்தர், திருவொற்றியூர் ஞானப்பிரகாசர் முதலிய சைவப் பெரும்புலவர்கள் முன்சொன்ன சித்தாந்த நூல்களில் சிலவற்றிற்கு உரையும், வேறு பல நூல்களும் செய்தனர். விரிவஞ்சியும், காலச்சுருக்கம் கருதியும், அவை பற்றிய விவரங்கள் இங்குக் கூறப்படவில்லை. இந்நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்களைப்பற்றி அறிய விரும்புவோர், இலக்கணவிளக்க பரம்பரைச் சோமசுந்தர தேசிகர் வெளியிட்டுள்ள 'பதினாறும் நூற்றாண்டுப் புலவர்' என்னும் நூலில் காணலாம்.

## 17-ஆம் நூற்றாண்டு நூல்கள்

இந்நூற்றாண்டில் வாழ்ந்த புலவர் என நமக்குத் தெரிபவர் ஏறத்தாழ ஐம்பதின்மர் ஆவர். அவருள் குறிக்கத்தக்கவர் பல பிரபந்தங்களைச் செய்த குமரகுருபரர், சிவப்பிரகாச சுவாமிகள் என்போராவர். அடுத்துக் குறிக்கத்தக்கவர் வைத்தியநாத தேசிகர், உமறுப் புலவர் என்பவர். அவரினும் அடுத்து, அந்தகக் கவி வீரராகவர், கடிகைமுத்துப்புலவர், படிக்காசுப்புலவர், சீதக்காதி நொண்டிநாடக ஆசிரியர் முதலியோராவார்.

குமரகுருபரர்: திருமலைநாயக்கர் காலத்தவர். இவர் (1) கந்தர்கலிவெண்பா (2) கயிலைக்கலம்பகம் (3) மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் (4) மீனாட்சியம்மை குறம் (5) மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை (6) மதுரைக் கலம்பகம் (7) நீதிநெறிவிளக்கம் (8) திருவாரூர் நான்மணிமாலை (9) முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் (10) சிதம்பரமும்மணிக் கோவை (11) சிதம்பரச் செய்யுட் கோவை (12) சிவகாமியம்மை இரட்டைமணிமாலை (13) பண்டார மும்மணிக் கோவை (14) காசிக்கலம்பகம் (15) சகலகலாவல்லிமாலை (16) காசித் துண்டிவிநாயகர் பதிகம் என்னும் பதினாறுநூல்களையும் இயற்றினர். இவை மிக இனிய செந்தமிழ் நடையால் இயன்றவை.

இவற்றுள், நீதிநெறி விளக்கம் நமது வாழ்க்கைக்குத் தேவையான நன்னெறிகளை நன்கு விளக்குகின்றது.

> " பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
> மறவாமே நோற்பதொன் றுண்டு—பிறர்பிறர்
> சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்து
> யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல். "

நமக்குத் தேவையான இப்பொன்னுரையைப் பாருங்கள். நமக்கு நாவடக்கம் வேண்டும். நாவடக்கத்தால் ஒருவன் புகழ் எய்தலாம் என்பதை இச்செய்யுள் எவ்வளவு தெளிவாக எடுத்துக் காட்டுகிறது!

மீனாட்சியம்மை குறம் பொதியமலையின் சிறப்பையும், குறவர் குடியிருப்பையும், குறவர் தொழில்களையும், ஏனை உயிர்களின் செயல்களையும், குறத்தி குறிகூறும் முறைமையையும் நயம்பட உணர்த்துகின்றது.

ஏனைய பதினான்கு நூல்களிலும் நூலுக்கு ஏற்பத் தலத்தின் சிறப்பும், கடவுட் செய்திகளும், ஆசிரியர் வேண்டுகோளும், பிறவும் அழகுறக் கூறப்பட்டுள்ளன. ஒவ்வொரு நூலிலும் உள்ள பாடல்கள் சுவை பயப்பனவே. அவற்றுள்ளும் தலையாய செய்யுட்கள் சில உண்டு. அவற்றுள், மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் வருகைப்பருவத்திலுள்ள, "தொடுக்குங் கடவுட் பழம்பாடல்" என்று தொடங்கும் செய்யுளைப் பாடாத சைவர் நாட்டில் இரார்.

குமரகுருபரர் தருமபுர மடத்துச் சீடர். இவர் டில்லி வரையிலும் சென்று, சைவத்தின் சிறப்பை அங்கு ஆண்டுவந்த முஸ்லிம் சக்கரவர்த்திக்கு உணர்த்தி, அவர் இசைவுபெற்றுக் காசியில் ஒரு மடத்தை ஏற்படுத்தினார். பிறகு அச் சைவமடம் திருப்பனந்தாளில் இவர் வழியினரால் நிறுவப்பட்டது. திருப்பனந்தாள் மடத்தில் ஆண்டு தோறும் இவரது குருபூசை சிறப்பாக நடைபெற்று வருகிறது. அப்பூசையில் கலந்து கொள்ளும் சைவப் புலவர்க்கு மரியாதை செய்தல் மகிழ்ச்சிக்குரியது.

**துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்:** இவர் வீர சைவர். இப்பெரியார் பாடிய நூல்கள் முப்பத்துநான்கு. அவற்றுள் சோண சைலமாலை, வெங்கைக் கோவை, நால்வர் நான்மணிமாலை, சிவஞானபாலையர் பிள்ளைத்தமிழ், திருக்கூவப் புராணம், பிரபுலிங்க லீலை, நன்னெறி, இயேசுமத நிராகரணம், சீகாளத்திப் புராணம் என்பன குறிக்கத்தக்கவை.

**நால்வர் நான்மணிமாலை:** சம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகர் இவர்களைக் குறித்து நாற்பது பாக்களாலான சிறு பிரபந்தமாகும். இந்நால்வரையும் குறித்து முறையே வெண்பாவிலும், கலித்துறையிலும், ஆசிரிய விருத்தத்திலும், அகவலிலும், பாக்கள் அமைந்துள்ளன. இச்சிறு நூலினால் இப்பெரியார் சமய குரவர் நால்வரிடத்தும் வைத்திருந்த பெருமதிப்பு நன்கு புலனாகின்றது. பாக்கள் சொல்லழகும், பொருட்பொலிவும் கொண்டவை.

**திருக்கூவப் புராணம்:** 7 சருக்கங்களையும், 703 விருத்தங்களையும் உடையது. இது தொண்டைநாட்டுத் தலங்களுள்

ஒன்ருன திருவிற்கோலம் என்னும் கூவத்தில் கோயில் கொண்டுள்ள சிவபெருமானைப் பற்றியது.

**பிரபுலிங்கலீலை :** அல்லமதேவரது திருவிளையாடலைக் கூறும் வீரசைவநூல். இது 25 கதிகளை (அத்தியாயங்களை) உடையது; ஏறத்தாழ 1150 விருத்தங்களைக் கொண்டது. இந்நூல், ஆசிரியரது கற்பனைத்திறனை விளக்கும் நன்னூலாகும்.

**இயேசுமத நிராகரணம் :** கிறிஸ்துவ மத கண்டனமாக எழுந்த ஒரு நூல். இந்நூலை ஆசிரியர் வெளியிட்டார் என்பதனுல் கி. பி. 17-ஆம் நூற்றுண்டிலேயே இயேசு சமயப் பிரசாரம் நம் நாட்டில் வலுத்திருந்தது என்பதை அறியலாம்.

**சீகாளத்திப் புராணத்தில்** கண்ணப்பச் சருக்கமும், நக்கீரச் சருக்கமும் இவரால் இயற்றப்பட்டவை. எஞ்சிய சருக்கங்கள் இவர் தம்பியரான வேலையர், கருணைப் பிரகாசர் என்னும் இருவராலும் இயற்றப் பெற்றன.

இலக்கண விளக்கம் செய்த வைத்தியநாத தேசிகர் பாசவதைப்பரணி, முருகன் பிள்ளைத்தமிழ், திருவாரூர்ப் பன்மணி மாலை, கமலாலய அம்மை பிள்ளைத்தமிழ், திருவாட்போக்கிப் புராணம், நல்லூர்ப் புராணம் முதலிய நூல்களை இயற்றியவர். வாட்போக்கிப் புராணம் 845 செய்யுட்களை உடையது. நல்லூர்ப் புராணம் ஏறத்தாழ 1000 செய்யுட்களை உடையது.

**உமறுப் புலவர் :** எட்டையபுரத்து அரசவைப் புலவர்; முஸ்லிம் தமிழர். இவர் பாடியதே சீருப்புராணம் என்பது. இப் புராணம் மூன்று காண்டங்களையும், 92 படலங்களையும், ஏறத்தாழ 5000 விருத்தப்பாக்களையும் உடையது. செய்யுட்கள் நல்ல தமிழ் நடையில் சிறந்த கற்பனைகளைக் கொண்டவை. இது நபிநாயகம் வரலாற்றைக் கூறும் பெருநூலாகும்.

“ திருவினுந் திருவாய்ப் பொருளினும் பொருளாய்த்
தெளிவினுந் தெளிவதாய்ச் சிறந்த
மருவினும் மருவாய் அணுவினுக்கு அணுவாய்
மதித்திடாப் பேரொளி அனைத்தும்
பொருவினும் பொருவா வடிவினும் வடிவாய்ப்
பூதலத் துறைந்தபல் லுயிரின்
கருவினுங் கருவாய்ப் பெருந்தவம் புரிந்த
கருத்தனைப் பொருந்துதல் கருத்தே.”

என்பது இந்நூலுக்கு அமைந்த கடவுள்வாழ்த்துச் செய்யுட்களில் ஒன்று. இந்நூலிலிருந்து அரேபிய நாட்டுப் பழக்க வழக்கங்களும்,

அவர்களிடை இஸ்லாம் பரவிய முறையும், நபிநாயகத்திற்கு முன் அரேபியாவில் உருவ வழிபாடு இருந்ததென்பதும் பிறவும் அறியக் கிடக்கின்றன.

**அந்தகக்கவி வீரராகவ முதலியார் :** தொண்டைநாட்டினர். இவர் குருடர். ஆயினும் தம் நுண்ணறிவின் திறனுல் அழுத்த மாகக் கற்றுக் கவிபாடும் ஆற்றல் பெற்றவர் ; ஈழநாட்டு அரசனுன பரராசசிங்கனுல் சிறப்புப்பெற்றவர். இவர் திருக்கழுக்குன்றப் புராணம், திருக்கழுக்குன்றத்து உலா, திருவாரூர் உலா, கீழ்வேளூர் உலா, சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ், சேயூர்க் கலம்பகம், விட்டினர் அம்மையப்பன் பிள்ளைத் தமிழ், பரராசசிங்க வண்ணம், கயத்தாற்றரசன் உலா, சந்திரவாணன் கோவை, பஞ்சரத்னம், திருக்கழுக்குன்றத்து மாலை என்னும் நூல்களைப் பாடியுள்ளார். இவருடைய பாடல்கள் படிக்கப்படிக்க இன்பந்தருவன.

**கடிகைமுத்துப் புலவர் :** எட்டையபுரம் அரசவைப் புலவர். இவர் எட்டையபுர அரசர்மீது சமுத்திரவிலாசம், காமரச மஞ்சரி, என்னும் நூல்களையும், ஊற்றுமலை ஜமீன்தார்மீது மதனவித்தார மாலை என்னும் நூலையும் பாடியுள்ளார். இவர் முன் சொல்லிய உமறுப்புலவரின் ஆசிரியர். இவர் பாடிய தனிப்பாடல்கள் மிகப்பல.

**படிக்காசுப் புலவர் :** இலக்கணவிளக்கம் வைத்தியநாத தேசிகருக்கு மாணவர். இவர் சைவவேளாளர் ; துறவு பூண்டவர். படிக்காசர் செய்த நூல்களில் இதுவரை தெரிந்தவை, (1) சிவந் தெழுந்த பல்லவனுலா, (2) சிவந்தெழுந்த பல்லவன் பிள்ளைத்தமிழ், (3) உமைபாகர் பதிகம், (4) பாம்பலங்காரர் வருக்கக்கோவை, (5) தொண்டை மண்டல சதகம், (6) புள்ளிருக்குவேளூர்க் கலம் பகம் என்பன. இவர் கீழைக்கரையில் வாழ்ந்த சீதக்காதி என்ற முஸ்லீம் வள்ளல் இறந்தார் என்பதைக் கேட்டவுடன் மனம் வருந்திப் பாடிய பாக்கள், படிப்பவர் உள்ளத்தை உருக்குவன வாகும். இவரது பாட்டின் சொற்பொருள் இனிமையைப் பாராட் டிய புலவர் ஒருவர்,

“ மட்டாருந் தென்களந்தைப் படிக்காசன்
        உரைத்ததமிழ் வரைந்த ஏட்டைப்
பட்டாலே சூழ்ந்தாலும் மூவுலகும்
        பரிமளிக்கும் பரிந்துஅவ் வேட்டைத்
தொட்டாலுங் கைமணக்குஞ் சொன்னுலும்
        வாய்மணக்குந் துய்ய சேற்றில்

நட்டாலுந் தமிழ்ப்பயிராய் விளைந்திடுமே
பாட்டிலுறு நளினந் தானே.''

என்று உளமாரப் பாராட்டிப் பாடினர்.

**சீதக்காதி நொண்டிநாடக ஆசிரியர்:** பெயர் முதலிய குறிப்புக்கள் தெரியவில்லை. ஆயினும் இவர் சிறந்த புலவரென்பதும், இஸ்லாம் சமயத்தவர் என்பதும் இந்நூலால் வெளியாகின்றன. இந் நாடகநூல் 222 பாக்களை உடையது. இந்நூல் சென்னைப் பல்கலைக் கழகத்தினரால் சிறந்த முறையில் அச்சிடப்பட்டுள்ளது.

**அஷ்டப்பிரபந்தம் பாடிய** பிள்ளைப் பெருமாளையங்கார் சோழ நாட்டினர்; சிலேடை, இயமகம், திரிபு முதலியவற்றை அமைத்துப் பாடுவதில் சிறந்தவர். இவர் அழகரந்தாதி, திருவரங்கக் கலம்பகம், திருவரங்கத்தந்தாதி, திருவரங்கத்துமாலை, திருவரங்கத்து ஊசல், திருவேங்கடத்தந்தாதி, திருவேங்கடமாலை, நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி என்னும் எட்டுநூல்களைச் செய்தவர். இவையே அஷ்டப்பிரபந்தம் எனப்படும்.

**சைவ எல்லப்ப நாவலர்:** சோழ நாட்டினர்; சிறந்த சிவ பத்தர். இவர், அருணைக்கலம்பகம், செவ்வந்திப்புராணம், திருவெண்காட்டுப்புராணம், திருச்செங்காட்டங்குடிப் புராணம், முதலியவற்றைப் பாடியவர். இவருடைய பாடல்கள் சொற்சுவையும் பொருட்சுவையும் செறிந்தவை.

## 18-ஆம் நூற்றுண்டு நூல்கள்

இந்நூற்றுண்டில் வாழ்ந்து தமிழ் நூல்களைச் செய்த புலவர் பலராவர். இவருள் சாந்தலிங்க சுவாமிகள், வீரமாமுனிவர், தாயுமானசுவாமிகள், ஒப்பிலாமணிப் புலவர், காழி அருணாசலக் கவிராயர், பகழிக்கூத்தர், சிவஞானமுனிவர், கச்சியப்பமுனிவர், சுப்பிரமணிய முனிவர் என்பவரும், வண்ணக்களஞ்சியப் புலவர் போன்ற முஸ்லிம்புலவர் சிலரும் குறிப்பிடத்தக்கவராவர்.

**சாந்தலிங்க சுவாமிகள்:** கோவையை அடுத்த பேரூரில் மடத்தை நிறுவியவர்; வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோதவுந்தியார், கொலைமறுத்தல், நெஞ்சுவிடுதூது முதலிய தத்துவநூல்கள் இயற்றினவர். அவரது மாணக்கரும் திருப்போரூரில் வாழ்ந்தவருமான **சிதம்பர சுவாமிகள்** உபதேச உண்மை, உபதேசக் கட்டளை, பஞ்சாதிகார விளக்கம் என்னும் ஞான நூல்களும், திருப்போரூர்ச் சந்நிதிமுறை, தோத்திரமாலை முதலிய துதி நூல்களும், திருப்பாதிரிப்புலியூர்ப் புராணமும் இயற்றினர்.

**வீரமாமுனிவர் :** மேனாட்டுத் துறவியார். இவர் சிறந்த புலவர்களிடம் தமிழ் பயின்று இயேசுநாதரின் வரலாற்றை 'தேம்பாவணி' என்னும் பெயர்கொண்ட காவியமாகச் செய்தார். அது முப்பது காண்டங்களை உடையது. சமய நம்பிக்கையிலும், கருத்து விளக்கத்திலும் இந்நூல் சிறந்து விளங்குகிறது. இயேசுநாதர் பிறந்த நாட்டைப் பற்றியும், அந்நாட்டு மக்களைப் பற்றியும் பல செய்திகளை நாம் அறிய இந்நூல் துணை செய்கிறது. இவர் வேதியர் ஒழுக்கம் என்னும் நூலையும் பரமார்த்த குரு கதை என்பதையும் எழுதினர். திருக்காவலூர்க் கலம்பகம், வேத விளக்கம், அடைக்கலமாலை என்னும் நூல்களையும் இயற்றினர்.

**தாயுமான சுவாமிகள்** பாடிய பாடல்கள் அவரது வடமொழிப் புலமையையும், தென்மொழிப் புலமையையும் நமக்குத் தெளிவாகத் தெரிவிப்பனவாகும். சித்தாந்தக் கொள்கைகளும், சைவ சமய உண்மைகளும், யோகத்திற்கு வேண்டும் மனப்பயிற்சியும் பிறவும் இப்பாடல்களில் குறிக்கப்பட்டுள்ளன.

> " எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
> அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே."

என்னும் இவர் பாடலை நோக்க, இவரது பரந்த உள்ளம் நன்கு வெளியாகின்றது. இத்தகைய உள்ளமே நமக்கும் வேண்டற்பாலது என்பதில் ஐயமுண்டோ ?

**ஒப்பிலாமணிப்புலவர் :** தஞ்சையை ஆண்ட சரபோஜி மன்னன் காலத்தவர். இவர் சிவரகசியம் என்னும் பெருநூலைப் பாடியுள்ளார். அந்நூல் நாலாயிரத்துக்கு மேற்பட்ட பாக்களை உடையது.

**காழி அருணாசலக் கவிராயர் :** இராம நாடகம் என்னும் நூலையும், சீகாழிப் புராணம், அசோமுகி நாடகம், சீகாழிக் கோவை, அநுமார் பிள்ளைத்தமிழ் என்பவற்றையும் இயற்றினர்.

**பகழிக்கூத்தர்** பாண்டிய நாட்டினர்; திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழைப் பாடியவர்.

**கொட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகர் :** தஞ்சைப் பெருவுடையார் உலா, கோடீச்சுரக்கோவை, சரபேந்திர பூபால குறவஞ்சிநாடகம் என்னும் மூன்றையும் செய்தனர். இம்மூன்று நூல்களும் படிக்கப்படிக்க இன்பந்தருவன. இந்நூல்களால் அக்கால ஆடை அணிகளையும், பிறவிவரங்களையும், சரபோஜி மன்னரின் சிறந்த பண்புகளையும் அறியலாம்.

**திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த சிவஞான முனிவர்**

வடமொழி தென்மொழிகளில் நிறைந்த புலமைஉடையவர். சோமேசர் முதுமொழிவெண்பா, கலைசையந்தாதி, முல்லைவாயில் அந்தாதி, அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ், சிவஞானபோதப் பேருரை முதலியன இவர் இயற்றியவை. இயமகம், திரிபு இவற்றின் திறத்தை முல்லைவாயில் அந்தாதியில் காணலாம். அமுதாம்பிகை பிள்ளைத்தமிழில் இவரது கற்பனைத் திறனைக் காணலாம்.

கடவுள்மாமுனிவர் திருவாதவூரடிகள் புராணத்தைப் பாடினார்.

சிவஞான முனிவரின் மாணவராகிய கச்சியப்ப முனிவர் தணிகைப் புராணம், திருவானைக்காப் புராணம், காஞ்சிப்புராணப் பிற்பகுதி, சென்னை விநாயகர் பிள்ளைத்தமிழ், கச்சி ஆனந்த ருத்ரேசர் வண்டுவிடுதூது, பதிற்றுப்பத்தந்தாதி, திருத்தணிகை ஆற்றுப்படை, பஞ்சாக்கர அந்தாதி முதலிய நூல்களை இயற்றினார்.

சிவஞான முனிவரின் மற்றொரு மாணவர் தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர். இவர் துறைசைக்கோவை, கலைசைக் கோவை, கலைசைச்சிலேடை வெண்பா முதலிய பல நூல்களைப் பாடியவர்.

வண்ணக் களஞ்சியப் புலவர் : 'முகையதீன்' புராணத்தைப் பாடிய முஸ்லிம் புலவர்.

மதாறு சாகிபு புலவர், அவியார் புலவர், மகம்மது உசேயின், நயினா முகமதுப் புலவர் முதலிய முஸ்லிம் புலவர்கள் தங்கள் சமய சம்பந்தமான பல நூல்களைச் செய்தனர்.

## 19-ஆம் நூற்றாண்டு நூல்கள்

19-ஆம் நூற்றாண்டில் தோன்றிய இலக்கிய நூல்கள் மிகப்பல. இந்த நூற்றாண்டில் பிரபந்த நூல்கள் பலவும், நாடக நூல்கள் சிலவும், புராணங்களும் பெருகின. தோத்திரப் பாடல்களும் மிகுதிப்பட்டன. மொழிபெயர்ப்பு நூல்களும், உரைநடை நூல்களும் தோன்றின. மேனாட்டுப் பாதிரிமார் தமிழ்நூல்களை மொழி பெயர்த்தனர். ஆராய்ச்சிக் கட்டுரைகளும் நூல்களும் வரைந்தனர்.

தாண்டவராய முதலியார் : பஞ்சதந்திரத்தை மகாராட்டிரத்திலிருந்து மொழிபெயர்த்தார். வீரமார்த்தாண்டதேவர் என்பவர் பஞ்சதந்திரத்தை விருத்தப்பாவினால் பாடி முடித்தார். நாகநாத பண்டிதர் என்பவர் மேகதூதம், பகவத்கீதை, இதோபதேசம், சாந்தோக்கிய உபநிடதம் முதலிய வடமொழி நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்தார்.

இந்நூற்றுண்டில் பெருந்தொண்டுசெய்த அழியாப்புகழ் பெற்றவர் ஆறுமுகநாவலர். இவர் பல பழைய நூல்களை அச்சிட்டு வெளிப்படுத்தினர். சிறுவர்க்காகப் பாலபாடங்களும், சைவ வினு விடைகளும், பெரியபுராண வசனம் கந்தபுராண வசனம் திருவிளை யாடற்புராண வசனம் சிதம்பரமான்மிய வசனம் என்பனவும் இவரால் எழுதப்பட்டவை.

இந்நூற்றுண்டில் தோன்றிய குறிக்கத்தக்க மற்ருெரு பெரியவர் இராமலிங்க அடிகள். இவர் இயற்றிய தோத்திரப் பாக்கள் 6000-க்கு மேற்பட்டவை; திருவருட்பா என்னும் பெயரின. செந்தமிழ்ச் சொல்நயமும், உள்ளத்தை உருக்கும் பொருட்கனிவும் இப்பாடல்களுக்குச் சிறப்பாக அமைந்துள்ளன. சாதிப்பூசல் களையும், சமயப்பூசல்களையும் கண்டித்து அனைவரும் ஓர் இனத்தவர் என்பதை வற்புறுத்தும் இவர் பாடல்கள் இவரது பரந்த நோக்கத்தையும், சமுதாய ஒற்றுமையில் இவருக்கு இருந்த ஆர்வத்தையும் நன்கு தெரிவிக்கின்றன.

ஆயிரக்கணக்கான பாக்களைப் பாடிய மகாவித்துவான் என்று 19-ஆம் நூற்றுண்டில் பாராட்டப்பட்ட பெரும்புலவர், மீனுட்சி சுந்தரம்பிள்ளை. இவர் பதினுறு தலபுராணங்கள் இயற்றி யுள்ளார். பதினுறு அந்தாதிகள் பாடியுள்ளார்; நான்கு மாலைகளை இயற்றியுள்ளார். உலா கோவை முதலிய பல்வேறு பிரபந்தங்கள் இவரால் பாடப்பெற்றன. இவர் திருவாவடுதுறையாதீனப் பெரும் புலவராக இருந்தவராதலால், அந்த ஆதீனத் தலைவர்மீதும் பல நூல்களை இயற்றியுள்ளார். இவர் இயற்றியவற்றுள் 45 நூல்களே இவர் மாணவரான மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களால் வெளியிடப்பட்டுள்ளன. இவருடைய பாடல்கள் இவரது புலமைத் திறனை உள்ளங்கை நெல்லிக்கனி போல உலகிற்கு அறிவிப்பவை யாகும்.

“ பண்ணிலாப் பாடல் போலும் பரிவிலா நட்புப் போலும்
உண்ணிலா நெய்யி லாமல் உண்டிடும் அடிசில் போலும்
பெண்ணிலாச் சயனம் போலும் பெயரிலா வாழ்க்கை போலும்
கண்ணிலா வதனம் போலும் கான்முளை யில்லா இல்லம்.”

என்பது இவர் இயற்றிய மாயூரத் தலபுராணத்தில் உள்ள ஒரு செய்யுளாகும். மக்கட்பேறில்லாத மனையின் இழிவை எவ்வளவு நன்ருகத் தெளிவுபடுத்தியுள்ளார் என்பதை எண்ண எண்ண, இவரது நுண்ணறிவும், பெரும்புலமையும் நன்கு விளங்குதல் காணலாம்.

கத்தோலிக்க கிறிஸ்தவரான வேதநாயகம்பிள்ளை என்பவர் ஜில்லா முனிசீபாக இருந்தவர். இவர் சமரச கீர்த்தனை, நீதிநூல், பெண்மதிமாலை என்னும் செய்யுள் நூல்களையும், பிரதாப முதலியார் சரித்திரம், சுகுணசுந்தரி வரலாறு என்னும் உரைநடை நூல்களையும் இயற்றினர்.

முருகதாசசுவாமிகள் தில்லைத் திருவாயிரம், தெய்வத் திருவாயிரம், ஏழாயிரப்பிரபந்தம் என்னும் துதிநூல்களையும், திரு ஆமாத்தூர்த் தலபுராணம், அருணகிரிநாதர் புராணம் என்பவற்றையும், திருச்செந்தூர்க் கோவை, திருமயிலைக் கலம்பகம், சென்னைக் கலம்பகம் முதலிய பிரபந்தங்களையும் இயற்றியுள்ளார். இவர் வண்ணக்கவிகளைப் பாடுவதிலும் வல்லவர்.

குணங்குடி மஸ்தான் சாகிபு : பல சிறு காப்பியங்களையும், தனிப்பாடல்களையும் இயற்றியுள்ளார்.

கல்விக்களஞ்சியப் புலவர் என்னும் முஸ்லிம் புலவர் சீருப் புராணவண்ணம், சித்திரகவித் திரட்டு என்னும் நூல்களை இயற்றியவர்.

கிருஷ்ண பிள்ளை என்ற கிறிஸ்தவப் புலவர் இரட்சணிய யாத்ரிகம் என்னும் கிறிஸ்தவ நூலைத் தமிழில் பாடியுள்ளார். இதில் உள்ள 'சிலுவைப்பாட்டு' உள்ளத்தை உருக்கத்தக்கது. பேராசிரியர் சுந்தரம்பிள்ளை 'மனோன்மணீயம்' என்னும் அழகிய நாடகக் காவியத்தை இயற்றியுள்ளார். இந்நூற்கதை ஆங்கிலக் கதையைத் தழுவியது.

வீராசாமிச் செட்டியார் என்பவர் கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்தி, காளமேகம் முதலிய புலவர்களைப் பற்றிக் கட்டுரைகள் எழுதித் தொகுத்தார். அந்நூலே 'விநோதரச மஞ்சரி' என்பது. இந்நூலைக் கொண்டும், நாவலர் எழுதிய உரைநடைநூல்களைக் கொண்டும், தொழுவூர் வேலாயுத முதலியார் எழுதிய திருவெண் காட்டடிகள் வரலாறு, வேளாண் மரபியல், சங்கர விஜயம், என்னும் உரைநடை நூல்களைக் கொண்டும் பத்தொன்பதாம்நூற்றுண்டில் இருந்த தமிழ் உரைநடையை ஒருவாறு அறிந்துகொள்ளலாம்.

மதுரையில் இப்பொழுதுள்ள தமிழ்ச் சங்கத்தை நிறுவிய பாலவனத்தம் ஜமீன்தார் பாண்டித்துரைத் தேவர் சைவமஞ்சரி அச்சிட்டுதவினர்; தோத்திரத் திரட்டும், பன்னூல் திரட்டும் அச்சிட்டளித்தார்; சிவஞான சுவாமிகள் மீது 'இரட்டை மணிமாலை' ஒன்றும், காவடிச் சிந்து ஒன்றும் இயற்றியுள்ளார்.

## 20-ஆம் நூற்றுண்டு நூல்கள்

நாம் வாழும் இந்த இருபதாம் நூற்றுண்டில் இலக்கிய நூல்கள் பல வெளிவந்துள்ளன. புலவர் பலர் பழைய நூல்களை அச்சிட்டு வெளிப்படுத்தினர். பலர் பழைய நூல்களுக்குப் புதிய உரைகள் எழுதினர். பலர் ஆராய்ச்சி நூல்களையும், வேறு உரைநடை நூல்களையும் எழுதினர். பலர் தமிழ் வளர்ச்சிக்காகப் பாடுபடும் "செந்தமிழ்" போன்ற திங்கள் வெளியீடுகளில் இலக்கியக் கட்டுரைகளையும், ஆராய்ச்சிக் கட்டுரைகளையும் வெளியிட்டுள்ளனர். 'தமிழில் நாடகங்கள் இல்லை' என்ற குறை சிறிது சிறிதாகக் குறைந்து வருகிறது. நாடெங்கும் சமயக் கழகங்களும், இலக்கியக் கழகங்களும் இருந்து தமிழ் இலக்கியத் தொண்டு செய்கின்றன. இனி இவற்றை விரிவாகப் பார்ப்போம்.

சோழவந்தான் அரசஞ் சண்முகனுர் மிகச் சிறந்த புலவர். இவர் ஏகபாத நூற்றந்தாதிமாலை, மாலைமாற்று, இன்னிசையிருநூறு, பலவகைச் சித்திரகவிகள் முதலியவற்றை இயற்றியுள்ளார்.

**வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியார் :** ரூபாவதி, கலாவதி, மானவிஜயம் என்னும் நாடக நூல்களையும், பாவலர்விருந்து என்னும் பாடல் தொகையையும், தனிப் பாசுரத் தொகை என்னும் செய்யுள் நூலையும், மதிவாணன், தமிழ் மொழிவரலாறு என்னும் உரைநடைநூல்களையும் ஆக்கி வெளியிட்டனர். இவரது நடை விரும்பிப் படிக்கத் தக்கது.

ஆங்கில நூல்களைப் பின்பற்றி அ. மாதவையா என்பவர் பத்மாவதி, விஜயமார்த்தாண்டம், முத்துமீனுட்சி, உதயலன் முதலிய உரைநடைநூல்களை எழுதி வெளியிட்டார்.

மகா மகோபாத்தியாய டாக்டர். உ. வே. சாமிநாதையர் : சங்க நூல்களைப் பதிப்பித்ததோடு குறுந்தொகைக்கு அரியதொரு விரிவுரையும் வழங்கியவர். புத்த சரித்திரம், உதயணன் சரிதை, சிலப்பதிகாரம் மணிமேகலை சிந்தாமணி முதலியவற்றின் கதைச் சுருக்கம், மீனுட்சிசுந்தரம்பிள்ளையவர்களின் சரித்திரம், என் சரித்திரம், கண்டதும் கேட்டதும், புதியதும் பழையதும், நல்லுரைக் கோவை முதலிய உரைநடைநூல்களையும் வெளியிட்டுள்ளார்.

உரைவிளக்கத்தாலேதான் காவியங்களாகிய செய்யுள் நூல்களும், பிறவும் மக்களிடையே பரவுதல் கூடும். ஆதலால் பெரு நூல்களுக்கு உரை எழுதியோர், தமிழ் இலக்கியம் நாட்டில் பரவ

வும், நிலைத்து நிற்கவும் பெருந்துணை புரிந்த பெரியோராவர். அப்பெரியோருள், கம்பராமாயணத்திற்கு உரை எழுதிய சே. கிருஷ்ணமாசாரியர் ஒருவராவார். இன்று நாடெங்கும் கம்பன் புகழ் பேசப்படுவதற்கு மூல காரணம் இவ்வுரை நாட்டிற் பரவியதே என்பது மிகையாகாது.

**பேராசிரியர் கா. நமச்சிவாய முதலியார்:** கீசகன், பிருதிவிராஜன் என்னும் நாடகநூல்களையும், பல தமிழ்ப்பாட புத்தகங்களையும் எழுதி வெளியிட்டார். அவருடைய பாட புத்தகங்களே தமிழ் பயிலும் மாணவர்க்குச் சிறந்த தமிழறிவை உண்டாக்கி வந்தன.

சேதுவேந்தரின் அரண்மனைப் புலவரான மகாவித்துவான் **ரா. இராகவையங்கார்** வஞ்சிமாநகர், சேதுநாடும் தமிழும், நல்லிசைப்புலமை மெல்லியலார்கள், தமிழ்வரலாறு என்னும் ஆராய்ச்சி நூல்களையும், 'செந்தமிழ்'த் தாளில் பல ஆராய்ச்சிக் கட்டுரைகளையும், பாரிகாதை, சாகுந்தலம், புவியெழுபது முதலிய செய்யுள் நூல்களையும் இயற்றியவராவர். குறுந்தொகைக்கு விரிவுரையும் வரைந்துதவியவர்.

**திரு. மு. இராகவையங்கார்:** சேரன்செங்குட்டுவன், தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி, வேளிர் வரலாறு, செந்தமிழ் வளர்த்த தேவர்கள் என்னும் ஆராய்ச்சி நூல்களை எழுதினர். இவர் பல்லாண்டுகளாக எழுதிவந்த ஆராய்ச்சிக் கட்டுரைகள், 'ஆராய்ச்சித் தொகுதி' என்னும் பெயரால் வெளியிடப்பட்டுள்ளன. இவர் பண்டைத் தமிழ்நூல் உரைகளிலும், கல்வெட்டுக்களிலும் சிதறிக்கிடக்கும் பழைய பாக்களைத் தொகுத்துப் 'பெருந்தொகை' என்னும் நூலாக வெளியிட்டனர். திருவனந்தபுரம் பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சியாளராக இருந்த பொழுது, சேரமன்னர்களைப் பற்றிய தமிழ்ப் பாடல்களையெல்லாம் தொகுத்து இரண்டு நூல்களாக வெளிப்படுத்தினர். இவர் தமிழுக்குச் செய்துள்ள பெருந்தொண்டினை நாம் மறத்தல் இயலாது.

**வெ. ப. சுப்பிரமணிய முதலியார்:** கம்பராமாயண இன்கவித்திரட்டு, இராமாயண உள்ளுறைப் பொருளும் தென்னிந்திய சாதி வரலாறும், அகலிகைவெண்பா, நெல்லைச்சிலேடைவெண்பா, கோம்பிவிருத்தம், சுவர்க்கநீக்கம் என்னும் நூல்களை இயற்றினர். இவற்றுள் அகலிகைவெண்பா முதலிய நான்கும் செய்யுள் நூல்கள்.

**தமிழ்ப் பெரியார் திரு. வி. கலியாணசுந்தர முதலியார்** எழுதிய நூல்கள் மிகப்பல. என்கடன் பணிசெய்து கிடப்பதே,

பெண்ணின்பெருமை, காந்தியடிகளும் மனிதவாழ்க்கையும், முருகன் அல்லது அழகு, சைவத்தின் சமரசம், கடவுட்காட்சியும் தாயுமானுரும், இராமலிங்கர் திருவுள்ளம், தமிழ்த்தென்றல், தமிழ்ச் சோலை முதலியன இவர் எழுதிய உரைநடைநூல்கள். முருகன் அருள் வேட்டல், திருமால் அருள் வேட்டல், கிறிஸ்துவின் அருள் வேட்டல் முதலியன இவர் இயற்றிய செய்யுள்நூல்கள். இவர் பெரியபுராணத்திற்குக் குறிப்புரை எழுதியவர்.

மகாமகோபாத்தியாய முதுபெரும் புலவர் பண்டிதமணி. மு. கதிரேசச் செட்டியார் சுக்கிரநீதியைத் தமிழில் மொழி பெயர்த்தார்; 'மிருச்சகடிகம்' என்னும் வடமொழி நாடகநூலைத் தழுவி உரையிடையிட்ட பாட்டுடைச்செய்யுளாக 'மண்ணியல் சிறுதேர்' என்னும் நூலினை இயற்றியுள்ளார். சுலோசனை, உதய ணன் கதை முதலிய உரைநடைநூல்களும், உரைநடைக்கோவை என்னும் கட்டுரை நூல்களும் இவரது உரைநடையாற்றலை விளக்கத் தக்கவை. இவர் வெளியிட்டுள்ள திருவாசக விரிவுரை படித்து இன் புறத்தக்கது; இவரது பெரும் புலமைத்திறனை நன்கு விளக்கவல்லது.

மும்மொழிப்புலவராய மறைமலையடிகள் தனித்தமிழ் உரை நடையெழுதுவதில் சிறந்தவர். இவர் எழுதியுள்ள நூல்கள் பல. பிறமொழி நூல்களின் கருத்துக்களைத் தமிழ் நெறிப்படுத்தும் பேராற்றல் இவர்பால் உண்டு. நாகநாட்டரசி, சாகுந்தல நாடகம், சாகுந்தல நாடக ஆராய்ச்சி, முல்லைப்பாட்டாராய்ச்சி, பட்டினப்பாலை யாராய்ச்சி, முற்கால பிற்காலப்புலவர், சாதி வேற்றுமையும் போலிச்சைவமும், வேளாளர்வரலாறு, சிறுவர்க்கு ஏற்ற செந்தமிழ், மாணிக்கவாசகர் வரலாறும் காலமும் முதலிய பலநூல்கள் இவரது எழுத்தாற்றலையும் பெரும்புலமையையும் நன்கு விளக்குவன.

மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் முதன் முதல் தங்கத்தோடா பரிசு பெற்ற நாவலர் பண்டித ந. மு. வேங்கடசாமிநாட்டார் திரு விளையாடற்புராணம், அகநானூறு, சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் பெருநூல்களுக்கு உரை எழுதிப் புகழ்பெற்றவர். இவர் அகத்தியர், நக்கீரர், கபிலர் என்னும் ஆராய்ச்சிநூல்கள் எழுதினவர். இவர் எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் "கட்டுரைத் தொகுதி" என்னும் பெயரில் இரண்டு நூல்களாக வெளிவந் துள்ளன.

சட்ட நிபுணர் கா. சுப்பிரமணிய பிள்ளை, தமிழ் இலக்கிய வரலாறு, அப்பர் வரலாறும் ஆராய்ச்சியும், சம்பந்தர் வரலாறும், ஆராய்ச்சியும், சுந்தரர் வரலாறும் ஆராய்ச்சியும், மாணிக்கவாசகர்

வரலாறும் ஆராய்ச்சியும் எனப் பல நூல்கள் சிறந்த முறையில் எழுதியுள்ளார்.

வழக்கறிஞர், நாவலர் **சோமசுந்தர பாரதியார்** : தசரதன் குறையும் கைகேயி நிறையும், திருவள்ளுவர், சேரர்பேரூர், சேரர்தாயமுறை முதலிய சிறந்த ஆராய்ச்சி நூல்களையும், மாரி வாயில், மங்கலக் குறிச்சிப் பொங்கல் நிகழ்ச்சி என்னும் செய்யுள் நூல்களையும் இயற்றியவர். இவர் தமிழ்நடை மிடுக்குடையது ; இவர் இயற்றிய 'மாரிவாயில்' இவரது செய்யுள் இயற்றும் திறனை அறிவிக்கவல்லது.

கோவை சிவக்கவிமணி **சி. கே. சுப்பிரமணிய முதலியார்** பெரிய புராணத்திற்கு விரிவான உரை எழுதிவருவதைப் பலரும் அறிந்திருப்பர். அவ்விளக்கவுரை, பண்டிதமணியின் திருவாசக விளக்கவுரைபோலப் பலநயங்களும் பொருந்தியுள்ளது. அப் பெரியார் கோவைத் தமிழ்ச்சங்கத்தின் வாயிலாக வெளியிட்டுவரும் பல நூல்கள் தமிழ் இலக்கியவளர்ச்சிக்குத் துணைசெய்வனவாகும்.

**விபுலானந்த அடிகள்** : யாழ்நூல், மதங்கசூளாமணி முதலிய நூல்களை இயற்றியவர். அவர் இயற்றிய யாழ் நூல் அவருக்கு அழியாப் புகழை இந்நாட்டில் நிறுவிய தென்னல் தவருகாது.

திருவனந்தபுரம் பல்கலைக் கழகத்தில் தமிழ் ஆராய்ச்சி செய்து வரும் பேராசிரியர் **வையாபுரிப் பிள்ளை** பல ஆண்டுகள் தமிழ்ப் பேரகராதிக் குழுவின் தலைவராக இருந்து சொற்களைத் தொகுத்தவர் ; சங்க இலக்கியங்களில் பண்பட்ட அறிவுடையவர். ஏடுகளைப் படித்து நூல்களைப் பதிப்பதில் இவர் சிறந்தவர். இவர் 'புறத்திரட்டு', 'திரிகடுகமும் சிறுபஞ்சமூலமும்' என்னும் இரண்டையும் திறம்பெறப் பதித்தவர் ; பல நூல்களில் சிதறிக்கிடந்த பழம் புலவர் பாக்களைப் புலவர் வரிசையில் முறைப்படுத்தி இரண்டு பெரு நூல்களாக வெளியிட்டவர். இவர் எழுதியுள்ள ஆராய்ச்சிக் கட்டுரைகள் மிகப்பல. அவற்றுள் சில இலக்கியச் சிந்தனைகள், தமிழின் மறுமலர்ச்சி, தமிழ்ச்சுடர் மணிகள், தமிழர் பண்பாடு என்னும் நூல்களாக வெளிவந்துள்ளன.

இன்று சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவராக உள்ள பேராசிரியர் **சேதுப்பிள்ளை** இனிய எளிய தமிழ்நடை எழுதுவதில் வல்லவர். இவர் கால்டுவெல் ஐயர் சரித்திரம், திரு வள்ளுவர் நூல்நயம், சிலப்பதிகார விளக்கம், ஊரும் பேரும் என்னும் ஆராய்ச்சிநூல்களை எழுதிப் புகழ்பெற்றவர். இவர் ஏறத் தாழ முப்பது ஆண்டுகளாக வெளியிட்டுவரும் இலக்கியக் கட்டுரைகள் மிகப்பல. அவற்றுள் சில, தமிழ் இன்பம், தமிழ்

விருந்து முதலிய உரைநடை நூல்களாக வெளிவந்துள்ளன. இவர் தம் சொற்பொழிவுகள் வாயிலாகச் செய்துள்ள இலக்கியத் தொண்டு நாம் மறக்கற்பாலதன்று.

சங்கநூற் செய்திகளை எளிய முறையில் அனைவரும் படித் தறியும்படி விளக்கமாக எழுதிவரும் புலவர் சிலர். அவருள் டாக்டர் மு. வரதராசனுர், "கலைமகள்" ஆசிரியர் கி. வா. ஜகந் நாதன் என்போர் குறிப்பிடத்தக்கவர். டாக்டர் மு. வரதராசனுர் ஆங்கில நாவல்களையும், தமிழ்ச் செய்திகளையும் தழுவி, எளிய நடையில் பல நூல்களை எழுதிவருகின்ருர். கி. வா. ஜகந்நாதனும் பயப்படாதீர்கள், சங்கநூற்காட்சிகள் முதலிய பல நூல்களை எழுதிவருகின்ருர். இவ்விருவர் நூல்களும் இக்கால நிலைக்கு மிகவும் தேவையானவை.

இலக்கியம், கல்வெட்டு, புதைபொருள் ஆராய்ச்சி இவற்றின் துணை கொண்டு தென்னிந்திய வரலாற்று நூல்களைத் தமிழில் வெளியிட்டவர் மிகச் சிலர். அவருள் அண்ணுமலைப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சித்துறையில் பணியாற்றி வரும் சதாசிவ பண்டாரத்தார் ஒருவராவர். இவர் முதற் குலோத்துங்கன், பாண்டியர் வரலாறு, சோழர் வரலாறு என்னும் நூல்களை வெளி யிட்டுள்ளார். பல ஆண்டுகளாக இவர் எழுதிவரும் ஆராய்ச்சிக் கட்டுரைகள் பல. அவை அனைத்தையும் தொகுத்து ஒரு நூலாக வெளியிடுதல் மிகவும் நல்லது. பல நூல்கள் வெளியிட்டும், கட்டுரை கள் வரைந்தும் தமிழ்த்தொண்டு செய்துவரும் இப்பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர்கள் டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியாரும், பண்டித வித்துவான் எல். பி. கே ஆர். இராமநாதன் செட்டியாரும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்.

மற்ருேர் ஆராய்ச்சியாளர் டாக்டர். மா. இராசமாணிக்க ஞர். இவர் வெளியிட்டுள்ள மொஹெஞ்சொதாரோ அல்லது சிந்துவெளி நாகரிகம் அனைவரும் கூர்ந்து படிக்கத்தக்கது. அந் நாகரிகம் திராவிட மக்களுடையதே என்பதை உறுதிப்படுத்த இவர் கொடுத்துள்ள பலவகைச் சான்றுகள், இவர் பலதிறப்பட்ட ஆராய்ச்சி நூல்களையும் நன்கு படித்தறிந்தவர் என்பதை உணர்த்து கின்றன. தமிழில் புதைபொருள் ஆராய்ச்சிபற்றி வெளிவந்துள்ள முதல் நூல், யானறிந்த வரையில் இதுவேயாகும்.

இவ்வாராய்ச்சியாளர் பல்லவர்வரலாறு, சோழர்வரலாறு, பெரியபுராண ஆராய்ச்சி என்னும் ஆராய்ச்சி நூல்களையும் வெளியிட்டுள்ளார். இவர் பல ஆண்டுகளாக எழுதிவரும் ஆராய்ச்சிக் கட்டுரைகள் பலவாகும். அவற்றுள் மிகச்சிலவே

'ஆராய்ச்சிக் கட்டுரைகள்' என்னும் பெயருடன் மறைமலையடிகள் முகவுரை தாங்கி வெளிவந்துள்ளன.

இசைத்தமிழ்: விஜயநகரஆட்சி தமிழகத்தில் தோன்றிய பிறகு கருநாடக இசை வளரலாயிற்று. 'அரசன் எவ்வழி, அவ்வழிக் குடிகள்' ஆதலால், ஆட்சியாளரைப் பின்பற்றித் தமிழ் மக்களும் கருநாடக இசையை வளர்க்கத் தலைப்பட்டனர். அதன் பயனாக ஏறத்தாழ நானூறுவருடகாலம் தமிழகத்தில் தமிழிசை மங்கிக்கிடந்தது. தமிழர் திருமண அரங்குகளிலும், இசை அரங்குகளிலும் தெலுங்குப் பாடல்களே பாடப்பட்டுவந்தன. 'மாங்காய்ப்பாலுண்டு' என்று தொடங்கும் குதம்பைச்சித்தர் பாடலும், 'ஆடு பாம்பே' என்று தொடங்கும் பாம்பாட்டிச்சித்தர் பாடலுமே இசையரங்குகளில் பாடப்பட்ட தமிழ்ப்பாடல்கள்.

நாட்டில் இருந்துவந்த இழிநிலையைப் போக்கித் தமிழிசையைத் தமிழ்நாட்டில் பரப்பிய பெருமை இந்த அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தை நிறுவிய செட்டிநாட்டு வள்ளல் ராஜா சர். அண்ணாமலைச் செட்டியார் அவர்கட்கே உரியது. அப்பெரியாரது பெருமுயற்சியால் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழிசைக் கல்லூரியும், சென்னைத் தமிழிசைச் சங்கமும் சிறந்த முறையில் தொண்டாற்றி வருகின்றன. ஆண்டுதோறும் டிசம்பர் மாதத்தில் சென்னையில் இசைவிழா நடந்துவருதலும், அவ்விழாவைத் தொடக்கிவைப்பவர் பேருரைவழங்கலும் நாம் கவனித்துவருகிறோம். அப்பேருரைகள் யாவும் தமிழிசையிலக்கியங்களாகும். நமது அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் வெளியிடப்பட்டுவரும் தமிழிசை நூல்கள் அனைத்தும் தமிழிசையிலக்கிய நூல்களேயாகும். நமது ராஜா. சர். முத்தைய செட்டியாரவர்களும், டாக்டர் ஆர். கே. சண்முகம் செட்டியாரவர்களும், திரு. மு. அ. சிதம்பரஞ் செட்டியாரவர்களும் மேற்கொண்டுள்ள 'தமிழ்ப்பண் ஆராய்ச்சி' பற்றி வெளிவரும் ஆராய்ச்சிநூல்களும் நமது இசைச்செல்வமாகும். தமிழிசை வளர்ச்சி தமிழ்ப்பண் ஆராய்ச்சிகளில் ஈடுபட்டு உழைத்துவரும் பண்டித வித்துவான் எல். பி. கேஆர். இராமநாதன் செட்டியாரும் இங்கு நினைவுகூரத் தக்கவராவர். இங்ஙனம் தமிழிசை யிலக்கியத்தை வளர்த்துவரும் இப்பெருமக்கட்கு நமது நன்றி உரியதாகுக.

நாடகத்தமிழ்: தமிழில் நாடகநூல்கள் இல்லை என்ற குறையைப் போக்கிய பெருமை பம்மல் – சம்பந்த முதலியாருக்கே உரியது. வேதாளஉலகம், கள்வர்தலைவன் முதலிய பல நாடக நூல்களை இவர் இயற்றி வெளியிட்டார். அண்மையில் சென்னை

நகரத்தார் அண்ணுமலைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் சர். சி. பி. இராமசுவாமி ஐயர் அவர்கள் தலைமையில் கூடிய பேரவையில் பொன்னுடை போர்த்தி இவர் தொண்டைப் பாராட்டினர்.

## தமிழ்ச் சங்கங்களும் பிறவும்

பாண்டித்துரைத் தேவர் அமைத்த மதுரைத் தமிழ்ச்சங்கம் 'செந்தமிழ்' என்னும் திங்கள் வெளியீட்டின் வாயிலாய் இலக்கியக் கட்டுரைகள் பலவற்றைச் சுமார் நாற்பத்தெட்டு ஆண்டுகளாக வெளிப்படுத்திவருகின்றது. அக்கட்டுரைகள் யாவும் இலக்கியத்தை வளப்படுத்துவனவாகும். அவற்றை ஆசிரியர் வரிசையாகவோ, பொருள் வரிசையாகவோ கோவைப்படுத்திப் பல நூல்களாக வெளியிடுதல் சங்கத்தார் கடமையாகும். அச்சங்கத்தில் வில்லிபாரதம், மாறனலங்காரம், மதுரைத் திருப்பணிமாலை, திருவள்ளுவர் முதலிய பல நூல்கள் அச்சிடப்பெற்றன.

இவ்வாறே தஞ்சை உமாமகேசுவரம்பிள்ளை நிறுவி நடத்தி வந்த கரந்தைத் தமிழ்ச்சங்கத்தில் ஆசான் ஆற்றுப்படை முதலிய செய்யுள்நூல்களும், வேளிர்வரலாற்றின் ஆராய்ச்சி போன்ற உரைநடைநூல்களும், விபுலானந்த அடிகளார் இயற்றிய இசைத்தமிழாராய்ச்சி நூலாகிய யாழ்நூலும் வெளியிடப்பெற்றன. அங்குப் பல ஆண்டுகளாக நடைபெற்றுவரும் 'தமிழ்ப்பொழில்' என்னும் திங்கள்தாளில் பேராசிரியர் பலர் சீரிய செந்தமிழ்நடையில் அரிய ஆராய்ச்சிக்கட்டுரைகள் வெளியிட்டுவருகின்றனர். அவ்வாண்டுத் தொகுதிகளெல்லாம் 'இலக்கியச்செல்வம்' என்றே கூறுதல்வேண்டும். சரசுவதிமஹாலில் உள்ள தில்லை உலா, குலோத்துங்கசோழன் பிள்ளைத்தமிழ் போன்ற பண்டைப் பிரபந்தங்கள் சிலவும் தமிழ்ப்பொழிலில் வெளியாகியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் நடத்திவரும் 'செந்தமிழ்ச்செல்வி' என்னும் திங்கள் தாள், அதன் கட்டுரைச்சிறப்புநோக்கிப் பொன்னேபோல் போற்றத்தக்கது. அக் கழகத்தார் பல தமிழிலக்கியங்களை நன்முறையில் அச்சிட்டு வருகின்றனர்; சிலப்பதிகாரம் போன்ற காவியங்களில் உள்ள நயமான பகுதிகளைக் கதைத்தொடர்பு கெடாமல் படித்துணரும் முறையில் புதிய நூல்களாக வெளியிட்டுள்ளமை பெரிதும் பாராட்டத்தக்கது. மேனுட்டுப் பேரறிஞர்களின் வரலாறுகளையும், ஷேக்ஸ்பியர் நாடகங்களையும், தகுதிவாய்ந்த பிறநாட்டு

நல்லறிஞர் நூல்களையும் இக்கழகத்தார் தமிழில் வெளியிட்டுவருதல் பாராட்டுதற்குரிய தமிழ்த்தொண்டாகும்.

## சைவ மடங்கள்

### திருவாவடுதுறை மடம்

கி. பி. 14-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த உமாபதி சிவாசாரியரின் முதல் மாணவர் அருள்நமச்சிவாய தேசிகர். அவருக்கு மாணவர் திருவாவடுதுறையிலிருந்த சித்தர் சிவப்பிரகாசர். இச்சித்தர் சிவப்பிரகாசரது மாணவரான நமச்சிவாய மூர்த்திகளே, கி. பி. 15-ஆம் நூற்றாண்டின் இறுதியில் அல்லது 16-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் திருவாவடுதுறை ஆதீனத்தை நிறுவியவர். அவர் மாணவர் மறைஞானதேசிகர். அவருக்கு அம்பலவாணதேசிகரும், தட்சிணாமூர்த்தி தேசிகரும் மாணவர்கள். பின்னவர் தசகாரியம் உபதேசப்பஃறொடை என்னும் இரண்டு ஞானநூல்களை இயற்றினார். பின்னர் அம்பலவாண தேசிகர், தசகாரியம், சன்மார்க்க சித்தியார், சிவாச்சிரமத் தெளிவு, சித்தாந்தப் பஃறொடை, சித்தாந்த சிகாமணி, உபாயநிட்டை வெண்பா, உபதேச வெண்பா, நிட்டைவிளக்கம், அதிசயமாலை, நமச்சிவாயமாலை என்னும் பத்து நூல்களை இயற்றினார். இப்பன்னிரண்டுடன் ஈசானதேசிகர் இயற்றிய தசகாரியம், பின்வேலப்ப தேசிகர் இயற்றிய பஞ்சாக்கரப்பஃறொடை என்பனவும் சேர்ந்து பண்டாரசாத்திரம் பதினான்கு எனப் பெயர்பெற்றன.

இவ்வாதீனத்தைச் சேர்ந்த சிவஞான சுவாமிகள் இயற்றிய நூல்கள் நூற்றாண்டுவரிசையில் முன்பே கூறப்பட்டன. இவ்வாறு இத்திருவாவடுதுறை ஆதீனத்தலைவர்களும், அங்குத் தங்கியிருந்த துறவிகளும் செய்துள்ள நூல்கள் பலவாகும். இவ்வாதீனம் தமிழ்நாட்டு ஆதீனங்களுள் மிகப்பழமையானது; தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குப் பெருந்துணைசெய்தது ; மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையைப் போன்ற பெரும் புலவர்களை ஆதரித்தது. இன்று இவ்வாதீனத்தில் இருபத்தொராவது குருமகாசந்நிதானமாக உள்ள ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள், தம் ஆதீன வித்துவானை திரு. மீனாட்சிசுந்தரம்பிள்ளையைக்கொண்டு சமயநூல்கள் பலவற்றை வெளியிட்டுவருகின்றார்கள். இவர்கள் ஆதரவில் இவ்வாதீனத்தின் வாயிலாகப் பல தமிழ்நூல்களும், சைவ நூல்களும் வெளிப்படும் என நம்புகிறேன்.

## தருமபுர ஆதீனம்

உமாபதிசிவாசாரியர் மாணவருள் ஒருவர் மச்சுச் செட்டியார். இவர் மாணவர் கங்கை மெய்கண்டார். இவருக்கு மாணவர் சீகாழிச் சிற்றம்பல நாடிகள். இவர் துகளறுபோதம், சிவப்பிரகாசக் கருத்துரைச் சூத்திரம், திருச் செந்தூர் அகவல் முதலிய நூல்களை இயற்றினார். இவர் மாண வரான தத்துவப்பிரகாசர், தத்துவப்பிரகாசம் என்னும் சித்தாந்த நூலைச் செய்தார். மற்றொரு மாணவரான ஞானப் பிரகாசர்க்குக் கமலை ஞானப்பிரகாசர் என்பவர் மாணவர். இவர் சிவானந்தபோதம், பிரசாதக்கட்டளை, அத்துவாக் கட்டளை, சிவபூசை அகவல் முதலிய நூல்களைச் செய்தார். இவரது முதல் மாணவரான ஞானசம்பந்த தேசிகரே தருமபுர ஆதீனத்தை ஏற்படுத்தியவர். இவர் சிவபோகசாரம், சொக்க நாதவெண்பா, பரமானந்த விளக்கம், முத்திநிச்சயம், திரிப தார்த்த ரூபாதி, தசகாரிய அகவல் முதலிய நூல்களைச் செய்தவர்.

இவ்வாதீனத்து நான்காம் தலைவரான மாசிலாமணி தேசிக ரிடம் ஞானோபதேசம் பெற்றவரே காசிமடத்தைத் தோற்றுவித்த குமரகுருபர அடிகள்.

இந்த மடத்தில் ஆறும் பட்டத்திலிருந்த திருஞானசம்பந்தரின் மாணவரான வெள்ளியம்பலத் தம்பிரான் முத்திநிச்சயப் பேருரை யும், சிவஞானசித்தியார்க்கு ‘ஞானாவரண விளக்கம்’ என்னும் விரிவுரையும் செய்தனர். இவ்வாதீனப் புலவருள் ஒருவரான வடுகநாத தேசிகரால் திருமுல்லைவாயிற் புராணம் பாடப் பெற்றது.

இவ்வாதீனத்தின்சார்பில் வெளிவந்த நூல்கள் பல. அவற்றுள் ஞானப்பிரகாசர் தசகாரியம், போதானந்தசித்தியார், திரிபதார்த்த ரூபாதி தசகாரியம், பதிபசுபாசப்பனுவல், சிவானந்தமாலை, சாம்பிரதாயதீபம், ஞானாவரணவிளக்கக்குறள், சித்தாந்தநிச்சயம், சதமணிக்கோவை, பரமத சங்கற்ப பரமோபதேச நிராகரணம், பரமததிமிர பானு, சிவானுபோகசாரம் என்பன குறிப்பிடத் தக்கவை. இவ்வாதீனத்தில் மிகப் பெரிய நூல் நிலையம் உண்டு. இவ்வாதீனத்தின் மேற்பார்வையில் பல கோயில்கள் உள. அக் கோயில்களின் வரலாற்று நூல்கள் தனியே அச்சிடப்பட்டுள்ளன.

இப்பொழுது ஆதீனத் தலைவராக உள்ள இருபத்தைந்தாவது மகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த

பரமாசாரிய சுவாமிகள் பெருமுயற்சியால் திருவாசகம் நல்ல முறையில் அச்சிடப்பட்டுள்ளது. திருக்குறள் அதற்குக் கிடைத்துள்ள எல்லா உரைகளுடனும் சிறந்த ஆராய்ச்சி முன்னுரையுடனும் 'உரைவளம்' என்னும் பெயருடன் அச்சிடப்பட்டுள்ளது. மூன்று பால்களும் மிகுந்த பொருட்செலவில் மூன்று தனி நூல்களாக வெளியிடப்பட்டிருத்தல் பெரிதும் பாராட்டத்தக்கது. தமிழையும் சைவத்தையும் போற்றி வளர்ப்பதில் பெருவிருப்புடைய இவர்களது அருளாட்சியில் மேலும் பயனுள்ள பலநூல்கள் நல்ல முறையில் வெளியிடப்படும் என்பது எனது நம்பிக்கை.

## திருப்பனந்தாள் மடம்

இம்மடத்துத் தலைவர்கள் சைவத்திற்கும் தமிழிற்கும் அளவு கடந்த நற்பணிகளைச் செய்துள்ளனர். முன் இருந்த சாமிநாதத் தம்பிரான் சுவாமிகளும், இன்றுள்ள அருள்நந்தித்தம்பிரான் சுவாமிகளும் தமிழிற்கும் சைவத்திற்கும் பல பரிசுகள் வைத்துள்ளனர். இவையல்லாமல் கொட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்கள், பன்னிருதிருமுறைகள், கந்தபுராணம் முதலிய பல நூல்களை வெளியிட்டுள்ளனர். இவ்வரிய சேவை பொன்னேபோல் போற்றத்தக்கது.

இத் தமிழாதீனங்கள் செய்துவரும் இலக்கியவளர்ச்சி, மேலும் பல்கிப் பெருகவேண்டுமென்பது நமது விருப்பம். இத்துறையில் திருவருள் துணைசெய்யுமாக.

இனி, இவ் விருபதாம்நூற்றுண்டுப் புலவர் செய்துள்ள இலக்கியத்தொண்டினைக் காண்போம். இந் நூற்றுண்டுப் புலவருள் காலஞ்சென்ற சுப்பிரமணிய பாரதியார் முதல்வராவர். இவர் நாட்டு இயக்கத்தில் ஈடுபட்டவராக இருந்தமையால், இவருடைய பாக்களில் பல, உரிமைப்போராட்டம் பற்றியவையாக அமைந்துள்ளன. இவர் நல்ல தமிழ்ப்புலவராதலால், தமிழ்மொழியைப் பற்றியும் சில பாக்களைப் பாடியுள்ளார். பராசத்தியைப்பற்றிய பாடல்களும், கண்ணனைப் பற்றிய பாடல்களும், இவரது பத்தி நிலையை உணர்த்துகின்றன. உரிமைப்போராட்டத்திற்கும், பாமர மக்களிடம் தமிழுணர்ச்சி தோன்றுவதற்கும் இவருடைய பாடல்கள் ஓரளவு துணைபுரிந்தன என்பது மிகையாகாது. இவருடைய செய்யுள் நூல்களும், உரைநடைநூல்களும் இருபதாம் நூற்றுண்டு இலக்கியத்தில் குறிப்பிடத்தக்கவை.

பாரதியாருடைய மாணவரான பாரதிதாசனுர் சீர்திருத்த நோக்கத்தில் பல பாக்களைப் பாடியுள்ளார். கல்வியின் தேவையை

வற்புறுத்தும் 'இருண்ட வீடு' என்னும் நூலும், தமிழின் வளர்ச்சியைப் பல துறைகளிலும் வற்புறுத்தும் 'தமிழியக்கம்' என்னும் நூலும், விதவைமணம், கலப்புமணம், இவற்றை வற்புறுத்தும் 'பில்ஹணீயம்' போன்ற செய்யுள்நூல்களும், "எதிர்பாரா முத்தம்" 'பாண்டியன் பரிசு' என்பவையும் இவருடைய புலமையையும், சீர்திருத்தக் கருத்துக்களையும், தாய்மொழிப் பற்றையும், தமிழர் நல்வாழ்வில் இவருக்குள்ள ஆர்வத்தையும் நன்கு விளக்கவல்லன.

நாஞ்சில் நாட்டுக் கவிஞரான கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை பாடியுள்ள 'ஆசியஜோதி' 'மலரும் மாலையும்' முதலிய செய்யுள்நூல்கள் படித்து இன்புறத்தக்கவை. மாலைக்கால வருணனை, சரத்காலவருணனை முதலிய வருணனைப் பகுதிகள் எளியநடையில் சுவைபயக்கும் முறையில் பாடப்பட்டுள்ளன. இப்பெரியார் 'காந்தளூர்ச்சாலை' முதலிய ஆராய்ச்சிக்கட்டுரைகளையும் எழுதியுள்ளார். இவருடைய பாடல்கள் மிக்க சுவை பயப்பன.

நமது அரசவைப் புலவரான நாமக்கல் இராமலிங்கம்பிள்ளை பாடி வெளியிட்டுள்ள' தமிழன் இதயம்' 'அவனும் அவளும்' முதலிய செய்யுள்நூல்கள் எளிய இனிய செய்யுட்களில் அமைந்தவை.

"தமிழன் என்றொரு இனமுண்டு
தனியே அதற்கொரு குணமுண்டு."

என்று தொடங்கும் பகுதியில்வரும் செய்யுட்கள் கவிஞரது தமிழ்ப் பற்றினை வெள்ளிடைமலைபோல் விளக்கமுறச் செய்வன. காந்தியடிகள், ஜவஹர்லால் நெஹ்ரு போன்ற நாட்டுத் தலைவர்களைப் பற்றிப் பாடியுள்ள பாடல்களால் அவரது நாட்டுப்பற்று நன்கு விளங்கும்.

'ஆடு ராட்டே' முதலிய் செய்யுட்கள், நாட்டுக் கைத்தொழில்கள் பல்கி ஏழைகள் நலமுறவேண்டும் என்பதில் இவருக்குள்ள ஆர்வத்தை உணர்த்துவன. தமிழிசையியக்கம்பற்றி இவர் பாடியுள்ள பாக்கள் மிக்க நயமுடையவை ; தமிழிசையில் இவருக்குள்ள பெருமதிப்பையும் அதன் வளர்ச்சியிலுள்ள ஆர்வத்தையும் தெளிவாக உணர்த்துபவை.

"காலத்துக்கேற்றவாறு கவிஞர் தோன்றுவார்" என்னும் அறிஞர் வாக்கிற்கு ஏற்ப, இந்த நூற்றுண்டில் மக்களுக்குத் தேவையானவற்றை எடுத்துக்கூற இப்புலவர்கள் தோன்றியுள்ளனர் என்று கூறுதல் பெரிதும் பொருத்தமாகும்.

முடிவுரை : அறிஞர்களே, நேரச் சுருக்கம் கருதியே, யான், குறிப்பிடத்தக்க புலவர் சிலரைப்பற்றிக் கூறினேன். ஒரு நூல் இரு நூல் எழுதியுள்ள தமிழறிஞர் பலராவர். அவர்களும் தமிழ் இலக்கியத்திற்கு உதவி செய்த பெருமக்களேயாவர். சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், கலைமகள் பதிப்பகம், தினமணிப் பதிப்பகம், தமிழ்ப்பண்ணை முதலிய எண்ணிறந்த நூல் வெளி யீட்டுக் கழகத்தார் வெளிப்படுத்திவரும் பலதுறைநூல்களும், தமிழிலக்கிய வகையைச் சேர்ந்தனவேயாகும். இங்ஙனம் தமி ழிலக்கியவளர்ச்சிக்கு ஆக்கம் செய்யும் பெருமக்கள் அனைவர்க்கும் எனது உளமார்ந்த நன்றி உரியதாகுக.

தமிழ் தழைத்தினி தோங்குக.

தமிழ்த் தாய்க்கு வணக்கம்.

---

# ANNAMALAI UNIVERSITY PUBLICATIONS

*Note*: A discount of 25% on listed prices allowed on all purchases from the Registrar. Titles in Tamil indicate Tamil publications.

## THE DEPARTMENT OF HISTORY

| *Series No.* | | *Year of Publication.* | *Price.* Rs. | A. | P. |
|---|---|---|---|---|---|
| 1. | Bhoja Raja by Prof. P. T. Srinivasa Ayyangar | 1931 | 1 | 8 | 0 |
| 2. | A History of Gingee and its rulers by Rao Bahadur C. S. Srinivasachariar | 1943 | 4 | 0 | 0 |
| **3. | The Nayaks of Tanjore by Rao Bahadur C. S. Srinivasachariar and Mr. Vriddhagirisan | 1942 | 10 | 0 | 0 |
| *4. | Indian History—இந்தியர் வரலாறு by Rao Bahadur C. S. Srinivasachariar and Mr. S. K. Govindaswami | 1943 | 2 | 0 | 0 |
| 5. | Maratha Rule in the Carnatic by Mr. C. K. Srinivasan | 1945 | 3 | 0 | 0 |
| 6. | The Dutch in Malabar by Dr. P. C. Alexander, M.A., D. Litt. | 1946 | 3 | 8 | 0 |
| 7. | Hoysalas in the Tamil Country by Mr. K. R. Venkataraman | 1950 | 2 | 8 | 0 |
| 8. | Buddhism in Kerala by Dr. P. C. Alexander M.A., D. Litt. | 1949 | 6 | 0 | 0 |
| 9. | Selections from the Orme Manuscripts Ed. by Prof. C. S. Srinivasachariar | 1952 | 15 | 0 | 0 |
| 10. | Tha History of the Pearl Fishery of the Tamil Coast by Mr. S. Arunachalam M. Litt. | 1252 | 3 | 8 | 0 |
| 11. | Mediaeval Kerala by Mr. P. K. S. Srivirarayan Raja | 1953 | 6 | 4 | 0 |
| 12. | A History of the Kongunadu–கொங்கு நாட்டு வரலாறு by Rao Bahadur C. M. Ramachandran Chettiar, B.A., B.L., F.R.G.S., | 1954 | | | |
| 13. | Madurai Vijayam, by Mr. S. Tiruvenkatachariar | | In Press | | |
| 14. | The oldest Chidambaram Inscriptions by Mr. S. R. Balasubramanyam (Off-print) | 1944 | 2 | 8 | 0 |

* Out of Stock

** Journal Parts containing this work will be supplied.

2482—19

## THE DEPARTMENT OF ECONOMICS

| *Series No.* | | *Year of Publication.* | *Price.* Rs. | A. | P. |
|---|---|---|---|---|---|
| 1. | Factory Labour in India by Prof. A Mukhtar | 1930 | 3 | 0 | 0 |
| 2. | The Madras Agriculturists Relief Act—A Study by Dr. B. V. Narayanaswami Naidu and Mr. P. Vaidyanathan M.A. | 1939 | | | |
| 3. | The Distributive Co-operation in India by Mr. V. G. Ramakrishna Ayyar | 1938 | 1 | 0 | 0 |
| **4. | The Madras General Sales Tax Act by Dr. B. V. Narayanaswami Naidu and Mr. Thiruvengadathan | 1940 | 2 | 8 | 0 |
| 5. | Report on the working of Prohibition in Salem by Mr. C. Jaganathachari, M.A., M. Litt. | 1939 | | | |
| *6. | Road and Rail Transport by Dr. B. V. Narayanaswami Naidu and Mr. S. R. N. Badri Rao | | 5 | 0 | 0 |
| **7. | Ground Nut by Dr. B. V. Narayanaswami Naidu and Mr. P. S. Hariharan | 1940 | 2 | 8 | 0 |
| *8. | Text-book on Economics—பொருளாதார நூல் by Prof. V. G. Ramakrishna Ayyar | 1942 | 2 | 0 | 0 |
| 9. | The Economy of the South Indian Temple by Prof. V. G. Ramakrishna Ayyar | 1946 | 2 | 0 | 0 |
| *10. | The Indian Trade by Dr. B. V. Narayanaswami Naidu | | 2 | 0 | 0 |
| 11. | The Sample Surveys on working of Prohibition in South Arcot District by Prof. V. G. Ramakrishna Iyer | 1949 | 0 | 8 | 0 |
| **12. | The Problem of Rural Credit in the Madras Presidency by Mr. P. Vaidyanathan | 1949 | 10 | 0 | 0 |

** Journal Parts containing this work will be supplied.

## THE DEPARTMENT OF PHILOSOPHY

| *Series No.* | | *Year of Publication.* | *Price.* Rs. A. P. |
|---|---|---|---|
| *1. | Nyaya kulisa by Atreya Ramanuja Ed : Prof. R. Ramanujachari and Mr. K. Srinivasacharya | 1938 | 2 8 0 |
| *2. | Nitimala by Narayanarya | 1940 | 2 0 0 |
| *3. | Naveena Tarkam–நவீன தர்க்கம் by Prof. K. R. Appalachariar | 1934 | 2 0 0 |
| *4. | Educational Psychology– உள நூலும் கல்வி பயிற்றலும் by Prof. K. R. Appalachriar and Prcf. R. Ramanujachari | 1940 | 1 0 0 |
| 5. | Theory of Knowledge of Saiva Siddhanta by Dr. V. Ponniah, Ph. D. | 1952 | 8 0 0 |
| 6. | Deductive and Inductive Logic–அளவை நூல் by Mr. S. Sivapadasundaram | 1953 | 3 2 0 |

## TIRUPANANDAL MUTT ENDOWMENT LECTURES

| | | | |
|---|---|---|---|
| 1. | Introduction and History of Saiva Siddhanta–1947 by Mr. G. Subramania Pillai, M.A., B.L. | 1948 | 3 0 0 |
| 2. | Lectures on Saiva Siddhanta–1950 by Mr. M. Balasubramanya Mudaliar, B.A., B.L. | 1951 | 1 6 0 |
| 3. | Lectures on Saiva Siddhanta–1948 by Prof. R. Ramanujachariar, M.A. | 1952 | 1 4 0 |
| 4. | Lectures on Saiva Siddhanta–1951 by Mr. K. Vajravelu Mudaliar, B.A., L.T. | 1953 | 5 6 0 |
| 5. | Lectures on Saiva Siddhanta–1952 by Mr. S. Sachithanandam Pillai, B.A., L.T. | | In Press |

## THE DEPARTMENT OF MATHEMATICS

| Series No. | | Year of Publication. | Price. Rs. | A. | P. |
|---|---|---|---|---|---|
| 1. | Text book on Algebra for Intermediate –இயற்கை கணிதம் by Mr. T. Govindarajan, M.A. | 1949 | 5 | 0 | 0 |
| 2. | Trigonometry–கோண கணிதம் by Mr. T. K. Manikavasagam, M.A., L.T. | 1949 | 7 | 0 | 0 |
| 3. | Intermediate Geometry–வடிவு கணிதம் by Dr. K. Rangaswami Aiyar M.A., M.Sc., Ph. D. | 1950 | 2 | 8 | 0 |

## THE DEPARTMENT OF PHYSICS

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | A Text-book on Physics–பௌதிக நூல் by Mr. R. K. Visvanathan Vol. I. | 1941 | 3 | 0 | 0 |
| 2. | Do Vol. II. | 1941 | 2 | 0 | 0 |
| 3. | Acoustics–சங்கீத ஒலி நூல்–Revised second edition by Mr. R. K. Visvanathan | 1954 | 6 | 10 | 0 |
| 4. | Physics of Music by Mr. R. K. Visvanathan | 1948 | 2 | 0 | 0 |
| 5. | Vignana Sirunool–விஞ்ஞான சிறு நூல் by Prof. T. P. Navaneethakrishna, M.A. | 1946 | 0 | 12 | 0 |
| 6. | Instructions for Experiments in Practical Physics for Intermediate | 1947 | 1 | 8 | 0 |
| 7. | Do B.Sc. | 1947 | 3 | 0 | 0 |
| 8. | Manual of Science–தெரியத் செய்கை நூல் by Prof. T. P. Navaneethakrishna, M.A. Vol. I. | 1951 | 10 | 0 | 0 |
| 9. | Do Vol. II. | 1952 | 10 | 0 | 0 |
| 10. | Text-Book of Practical Physics–செய்முறை பௌதிக நூல் by Mr. S. Sriraman, M.A., M.Sc. | 1952 | 6 | 0 | 0 |

## THE DEPARTMENT OF CHEMISTRY

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | A Test-book on Chemistry–நவீன அசேதன ரசாயனம் by Mr. N. Ananthavaidyanathan Vol. I. | 1938 | 3 | 0 | 0 |
| 2. | Do Vol. II. | 1941 | 2 | 8 | 0 |
| 3. | Practical Chemistry for Intermediate Course–செய்முறை வேதி நூல் by Mr. P. L. Ramaswamy, M.A. | 1949 | 4 | 8 | 0 |

## THE DEPARTMENT OF BOTANY

| *Series No.* | | *Year of Publication.* | *Price.* Rs. A. P. |
|---|---|---|---|
| *1. | A Text-book on Botany–தாவர நூல் by Dr. T. S. Raghavan | 1942 | 3 0 0 |
| 2. | Cytological Stundies in Bignoniaceae by Dr. K. R. Venkatasubban, M. Sc. | 1944 | 5 0 0 |

## THE DEPARTMENT OF TAMIL

| | | | |
|---|---|---|---|
| *1. | Pari Kathai–பாரி காதை by Bhasha Kavisekhara Vidvan R. Raghava Ayyangar | 1937 | 2 0 0 |
| 2. | Kurunthokai Vilakkam–குறுந்தொகை விளக்கம் Do | 1947 | 1 8 0 |
| *3. | Advanced Studies in Tamil Prosody by Dr. A. Chidambaranathan Chettiar | 1943 | 2 0 0 |
| 4. | Studies in History of Tamil Literature–தமிழ் வரலாறு by Vidwan R. Raghava Ayyangar | 1952 | 4 0 0 |
| 5. | (a) Tholkappiam-Porulathikaram Vol. I Part I by Mr. E. S. Varadaraja Iyer | 1948 | 3 8 0 |
| | (b) Do Part II | 1948 | 4 8 0 |
| 6. | Tholkappiam-Collathikaram by Dr. P. S. Subramanya Sastri | 1945 | 5 0 0 |
| 7. | Historical Tamil Reader by Dr. P. S. Subramanya Sastri | 1945 | 2 8 0 |
| 8. | Tree worship and Ophiolatory by Mr. G. Subramania Pillai, M.A., B.L. | 1948 | 1 8 0 |
| 9. | A New Approach to Tiruvasakam by Mrs. Ratna Navarathnam, M.A., M. Litt. | | 4 0 0 |
| 10. | Elephant in Tamil Land by Mr. E. S. Varadaraja Iyer, B.A. | 1945 | 1 4 0 |
| 11. | Thiththan–தித்தன் by Bhasha Kavisekhara Vidwan R. Raghava Ayyangar | 1949 | 1 0 0 |
| 12. | Kosar–கோசர்-ஒரு சிற்றாய்ச்சி Do | 1951 | 0 12 0 |

*Out of Stock;

Note: Titles in Tamil indicate Tamil publications.

| Series No. | | Year of Publication. | Price. Rs. A. P. |
|---|---|---|---|
| 13. | Perumpanarttuppadai–பெரும்பாணாற்றுப் படை by Bhasha Kavisekhara Vidwan R. Raghava Iyengar | 1949 | 2 0 0 |
| 14. | Pattinappalai–பட்டினப்பாலையும் ஆராய்ச்சி உரையும் Do | 1951 | 1 4 0 |
| *15. | History of the later Cholas– பிற்காலச் சோழர் சரித்திரம் by Mr. T. V. Sadasiva Pandarathar Vol. I | 1949 | அச்சில் |
| *16. | Do Vol. II | 1951 | அச்சில் |
| 17. | Aiynkuru-nooru–ஐங்குறு நூறு Ed. by Mr. A. S. Doraiswami Pillai | | அச்சில் |
| 18. | Kautaleeyam–கௌடலீயம்–பொருள் நூல் by மகாமகோபாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் | | அச்சில் |
| 19. | Tamil Ilakkiyam–தமிழிலக்கியம் by திரு. சு. இராமசுவாமி நாயுடு | 1954 | |

## ISAI TAMIL SERIES–இசைத் தமிழ் வெளியீடுகள்

பரிசுபெற்ற தமிழ் பாடல்கள்

| | | | |
|---|---|---|---|
| *1. | Vol. I T. லக்ஷ்மணப் பிள்ளை, பாபநாசம் சிவன் முதலிய ஐவர் கீர்த்தனங்கள் 46 | 1943 | 2 0 0 |
| 2. | ,, II கீதவர்ணங்கள் முதலியன 104 (இரண்டாம் பதிப்பு) | 1954 | 4 0 0 |
| *3. | ,, III நீலகண்ட சிவன் முதலிய அறுவரது கீர்த்தனங்கள் 75 | 1943 | 2 0 0 |
| *4. | ,, IV முத்துத்தாண்டவர் கீர்த்தனங்கள் 60 | 1943 | அச்சில் |
| 5. | ,, V Part 1 இசையியல் by திரு. க. பொன்னையா பிள்ளை | 1958 | 1 8 0 |
| *6. | ,, Part 2 தமிழிசைக் கருவிகள் by திரு. பி. கோதண்டராமன் எம். ஏ. | 1945 | 1 4 0 |
| 7. | ,, Part 3 சுரமேள கலாநிதி-மொழிபெயர்ப்பு | 1947 | 1 0 0 |
| *8. | ,, VI கோபாலகிருஷ்ண பாரதியார் கீர்த்தனங்கள் 90 | 1944 | அச்சில் |
| *9. | ,, VII திரு. ம. ப. பெரியசாமித்தூரன் பாடல்கள் 70 | 1943 | 2 0 0 |
| 10. | ,, VIII ஸ்ரீகாழி அருணாசலக் கவிராயர் | 1945 | 3 0 0 |
| 11. | ,, IX தில்லைவிடங்கன் மாரிமுத்தாப் பிள்ளை, செவற்குளம் கந்தசாமிப் புலவர், நகரம் முத்துவீரப்பக் கவிராயர் | 1945 | 3 0 0 |

| Series No. | | | | Year of Publication. | Price. Rs. | As. | P. |
|---|---|---|---|---|---|---|---|
| 12. | ,, | X | நகரம் முத்துசாமிக் கவிராயர் | 1946 | 3 | 8 | 0 |
| 13. | ,, | XI | ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் | 1945 | 3 | 0 | 0 |
| *14. | ,, | XII | மிருதங்க பாடமுறை திரு. மைலாட்டூர் V. சாமி ஐயர் | 1946 | அச்சில் | | |
| 15. | ,, | XII | Part II மத்தளங்கற்கும் முறை | 1948 | 1 | 6 | 0 |
| 16. | ,, | XIII | திரு. பாலகவி வயி. இராமநாதஞ் செட்டியார் | 1946 | 3 | 0 | 0 |
| *17. | ,, | XIV | ஸ்ரீசுத்தானந்தபாரதியார்–மாணிக்கப் பாட்டு | 1946 | 3 | 8 | 0 |
| 18. | ,, | XV | திரு ம. ப. பெரியசாமித்தூரன் | 1947 | 3 | 0 | 0 |
| 19. | ,, | XVI | வையைச்சேரி இராமசாமி ஐயர் | 1948 | 3 | 0 | 0 |
| 20. | ,, | XVII | கவிகுஞ்சர பாரதியார் முதலிய பதின்மர் பாடல்கள் 50 | 1948 | 3 | 0 | 0 |
| 21. | ,, | XVIII | ராஜா அண்ணாமலை தமிழிசைக் கருவூலம்—க. பொன்னையா பிள்ளை | 1949 | 4 | 0 | 0 |
| 22. | ,, | XIX | திருப்புகழ்—சுரதாளக் குறிப்புடன் திரு. சித்தூர், சுப்பிரமணிய பிள்ளை | 1953 | 3 | 0 | 0 |
| 23. | ,, | XX | பரத சங்கிரகம்—அறம் வளர்த்தான் –Ed. by திரு. க. வெள்ளைவாரணனார் | 1954 | | | |
| 24. | ,, | XXI | திரு. நடராஜ சுந்தரம் பிள்ளை கீர்த்தனங்கள் | | அச்சில் | | |
| 25. | Swaramela Kalanithi by Mr. M. S. Ramaswami Ayyar | | | 1932 | 2 | 0 | 0 |

## TIRUPANANDAL MUTT ENDOWMENT PUBLICATIONS.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | Kambar Memorial Prize Selections– கம்பர் பரிசுத் தொகுதி | 1944 | 0 | 8 | 0 |
| 2. | Adi Kumaraguruparar—ஆதி குமரகுருபரர் | 1945 | 0 | 12 | 0 |
| 3. | Sekkizhar Selections–சேக்கிழார் | 1944 | 0 | 8 | 0 |
| 4. | Thevara Thirumurai–Preliminary– தேவாரத் திருமுறை—முதற்பாகம் | 1944 | 0 | 12 | 0 |
| 5. | Do இரண்டாம்பாகம் | 1953 | 1 | 4 | 0 |
| 6. | Sivagnanabodham–சிவஞான போதம் Edited by Thiru A. S. Duraiswami Pillai | 1954 | 3 | 5 | 0 |
| 7. | Gnanamirtham–ஞானாமிர்தம்–வாகீச முனிவர் Ed. by Thiru. A. S. Duraiswami Pillai | 1954 | | | |

## THE DEPARTMENT OF SANSKRIT.

| Series No. | | Year of Publication. | Price. Rs. | A. | P. |
|---|---|---|---|---|---|
| *1. | Srimukundamala Ed. by Mr. K. Rama Pisharoti | 1933 | 3 | 0 | 0 |
| 2. | Tattvavibhavana by Parameswaran, a commentary on Vacaspati Misra's Tattvabindu by Mr. V. A. Ramaswami Sastri | 1936 | 3 | 0 | 0 |
| 3. | Svarasiddhanta Candrika by Srinivasayajvan–Edited by Mr. K. A. Sivaramakrishna Sastri | 1936 | 5 | 0 | 0 |
| 4. | Trimsacchloki Edited by Mr. N. Subramania Sastri | 1937 | 0 | 8 | 0 |
| *5. | The Philosophy of Aesthetic Pleasure by Mr. Panchapagesa Sastri | 1940 | 3 | 0 | 0 |
| *6. | Jagannatha Panditha by Mr. A. Ramaswami Sastri | 1942 | 2 | 0 | 0 |
| 7. | (a) Lectures on Patanjali's Mahabhashya, by Dr. P. S. Subramanya Sastri Vol. I. | 1944 | 3 | 0 | 0 |
| | (b) " Vol. II | 1951 | 10 | 0 | 0 |
| 8. | Vivarana with Vyutpattivada–Lakarathavicara by Mr. V. Subrahmanya Sastri | 1948 | 6 | 0 | 0 |
| 9. | History of Sanskrit Literature– வடமொழி நூல் வரலாறு Do | 1946 | 10 | 0 | 0 |
| 10. | History of Sanskrit Language–வடமொழி வரலாறு by Dr. P. S. Subramanya Sastri | 1950 | 5 | 0 | 0 |
| 11. | Studies in Sanskrit texts on Temple architecture by Dr. N. V. Mallayya | 1949 | 10 | 0 | 0 |
| 12. | Bhavanaviveka with Visamagranthibhedika by Mr. V. A. Ramaswami Sastri and Mr. K. A. Sivarama Krishna Sastri (Off-prints) | 1949 | 6 | 0 | 0 |

## GENERAL

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | *Raja Sir Annamalai Chettiar Commemoration Volume | 1941 | 10 | 0 | 0 |
| | Journal of the Annamalai University Vol. I to XVIII Each Vol. | | 7 | 8 | 0 |
| | All available off-prints of articles in Vols. XVII to XVIII are for sale | | | | |

*For Copies apply to :—*

THE REGISTRAR, ANNAMALAI UNIVERSITY,
ANNAMALAINAGAR P. O.